# கண்ணன் பிறந்தான்






பி. ஸ்ரீ.

அமுத நிலையம்

# கண்ணன் பிறந்தான்

(ஸ்ரீஜயந்தி மலர்)



பி. ஸ்ரீ.



அமுத நிலயம் பிரைவேட் லிமிடெட்
தேனாம்பேட்டை :: சென்னை-18

அமுதம் (மலிவு)—47
முதற் பதிப்பு ஆகஸ்ட், 1960
உரிமை பதிவு

விலை 30 புதுக் காசு] [கிளேஸ் பதிப்பு விலை ரூ. 1—40

## பொருளடக்கம்



நேஷனல் ஆர்ட் பிரஸ், தேனும்பேட்டை, சென்னை-18.



# 1. கண்ணன் பிறப்பு

(ஸ்ரீஜயந்தி)

எத்தனையோ பிறந்த நாள்விழாக்களை உலகம் கொண்டாடி வருகிறது; நமது நாடும் கொண்டாடி வருகிறது. எனினும் கண்ணன் பிறந்த நாள்விழாவைத்தான் ஸ்ரீஜயந்தி (பிறப்பு விழா) என்று சிறப்பாய்க் கொண்டாடி வருகிறோம். நம் மக்கள் ஒவ்வொரு ஆண்டிலும் பலவிதமான பட்சணங்கள் செய்து, குழந்தைகளும் குதூகலம் அடையும் முறையில் இத்திருநாளை வீடுகளிலும் கோவில் களிலும் கொண்டாடி வருகிறார்கள்.

### கண் விழித்தல்

சிவராத்திரியில் கண் விழிப்பதுபோல் ஸ்ரீஜயந்தியிலும் இரவிலே கண் விழிப்பதுண்டு. உறக்கம் வராமல் இருப்பதற்காகக் கதைகள் கேட்பார்கள்; புராணம் வாசிப்பார்கள்; பஜனை செய்வார்கள். ஸ்ரீபாகவதத்தில் கிருஷ்ணவதார அத்தியாயத்தையாவது படிப்பார்கள்.

பாகவதத்தின் பத்தாம் ஸ்கந்தம் என்ற பகுதியில் தொடக்கம் முதல் ஆறாவது அத்தியாயத்தின் முடிவு வரை அவதாரமும் பூதனை வதமும் அடங்கியிருக்கின்றன. இந்தக் கதைப் பகுதியைச் சுருக்கமாகவாவது ஸ்ரீஜயந்தி நாளில் அறிந்துகொள்வதும் பிறருக்கு அறிவிப்பதும் அவசியம் என்பர். தோத்திரப் பகுதி, வேதாந்தப் பகுதி, வருணனை முதலிய அம்சங்களை விட்டு இந்த ஆறு அத்தியாயங்களில் உள்ள கதையைக் குழந்தைகள் உள்ளிட்ட சாதாரண மக்களும் ஸ்ரீஜயந்தியில் அறிந்துகொள்வதும் நினைவூட்டிக் கொள்வதும் பொருத்தமே. ஆடல் பாடல்களுடன் காலட்சேப முறையில் கண்ணனின் அவதாரக் கதையை அனுபவிப்பதன் வாயிலாக ஸ்ரீஜயந்தியில் கண் விழிப்பது மிகவும் நல்லது. எப்படியும் விழிப்புடன் ஸ்ரீஜயந்தி கொண்டாடுவது நலம்தானே.

குழந்தைகளும் ஸ்ரீஜயந்தியில் கண் விழிக்க விரும்புகிறார்கள். பல குழந்தைகள் சேர்ந்துகொண்டு ஒரு பெரிய இல்லத்தில் கண்ணனின் படத்தை வைத்துத் தங்களுக்குத் தெரிந்த பாடல்களைப் பாடி மகிழ்வார்கள். அப்போது விளக்குகள் இரவு முழுதும் எரிந்து கொண்டிருக்கும். மின்சார விளக்குகள் இல்லாத அந்தக் காலத்தில் எண்ணெய் விளக்குகளையும் நெய் விளக்குகளையும் எரிப்பது

வழக்கம். அந்த விளக்குகளுக்கு வேண்டிய எண்ணெயைக் குழந்தைகள் எப்படிச் சேகரிப்பார்கள் தெரியுமா?

### குழந்தைகளின் குதூகலம்

ஸ்ரீஜயந்தி தினத்தின் காலை வேளையில் பிள்ளைகள் கூட்டமாகக் கிராமத்தில் ஒவ்வொரு வீட்டுக்கும் போய் எண்ணெய் கேட்பார்கள். அப்போது 'எங்களுக்குக் கண்விழிக்க இன்று எண்ணெய் வேணும்' என்று வசனத்தில் கேட்பதில்லை; பாடிக் கேட்பார்கள்.

*சீசந்தி அம்பாரம்*
*சிவராத்ரி அம்பாரம்*
*ஸ்ரீகிருஷ்ண ராயருக்குத்*
*திருவிளக்கு எண்ணெய்!*

என்று குதூகலமாய்ப் பாடுவார்கள்.

அதிகார தோரணையில்தான் பிள்ளைகள் எண்ணெய் கேட்பார்கள். ஸ்ரீகிருஷ்ண ராஜாவுக்கு அல்லவா கேட்கிருர்கள்? எனவே,

*எண்ணெய் வார்த்தா லாச்சு,*
*இல்லாட்டால் போச்சு!*

என்று பாடுவார்கள். என்ருலும், உடனே போய்விட மாட்டார்கள். ஏதேதோ பாடிக்கொண்டே யிருப்பார்கள்.

'அத்தை வீட்டுக்குப் போனேம்' என்று தொடங்குவான் ஒருவன். அவனேடு சேர்ந்து பல பிள்ளைகளும்,

*பொத்தல் பானையைத் தந்தாள்!*

என்று பாடுவார்கள். ஒரே குரலில் எல்லாரும்,

*அவல் இடிக்கலாம்;*
*பொரி பொரிக்கலாம்;*
*அத்தையைக் கண்டால்*
*டோஸ்!*

என்று பாடுவார்கள்.

பாட்டில் மோனைகளுக்கும் பிராசங்களுக்கும் குறைவில்லை. பொருள் ஒரு கோவையாக அமைய வேண்டுமே என்ற கவலை கிடையாது.

*கோணக் கோணப் புளியங்காய்,*
*கொம்புளிச்சட்டி நார்த்தங்காய்;*
*ஆனைக்காரன் பெண்டாட்டி*
*ஆட்டுக்குட்டியைப் பெத்தாளாம்,*
*காச்சுமூச்சுனு கத்தித்தாம்!*

என்று பாடுவார்கள், கத்துவார்கள்.



நோக்கம் நிறைவேறிஞல்தான், இந்த ஆசாமிகள் இடத்தை விட்டுக் கிளம்புவார்களாம். விரட்டினுல் போய்விட மாட்டார்களாம்.

*காப்புத் தந்தால்*
*போவோம் நாங்கள்;*
*கல்லை எறிந்தால்*
*வருவோம் நாங்கள்!*
*சீப்புத் தந்தால்*
*போவோம் நாங்கள்;*
*சில்லை எறிந்தால்*
*வருவோம் நாங்கள்!*

என்று பாடுவார்கள்.

ஒவ்வொரு வீட்டிற்கும் வந்து எண்ணெய் வாங்குவதில்தான் என்ன மகிழ்ச்சி!

*ஆடிப் பாடி*
*வருவோம் நாங்கள்!*

என்கிருர்கள். எண்ணெய் கிடைத்ததும் ஆடி ஓடிப் போய் விடுவார்கள். காப்பு வேணும், சீப்பு வேணும் என்று கேட்டார்களே தவிர, பெரும்பாலும் எண்ணெய்தான் வாங்கிக்கொண்டு போவார்கள்.

பொம்மையைப் பற்றியும் பாடுவார்கள். குழந்தைகள் அல்லவா?

*சின்னச்சின்னப் பொம்மை,*
*சிங்காரப் பொம்மை;*
*பெரியபெரிய பொம்மை,*
*பெரியராணிப் பொம்மை!*

என்று பாடுவார்கள். ஆனுல் வாங்குவது எண்ணெய்தான்.

மாட்டைக் கண்டால் 'மாடே! மாடே! மேய்ந்து வா' என்று பாடுவார்கள்.

*எனக்கொரு வட்டம்,*
*உனக்கொரு வட்டம்!*

என்று ஆடுவார்கள்.

*சீசந்திப் பட்டினி*
*சிவராத்திரிப் பட்டினி*

என்று தாங்கள் கிடக்கும் பட்டினியின் பெருமையைப் பாடுவார்கள்; ஆனுல் நினைவெல்லாம் பட்சண - பலகாரங்களின் மேலே!

கிடைக்காததால் பட்டினி கிடப்போம் என்பார்கள். 'அரைப் பாரும் கரைப்பாரும் அப்பம் வடை சுடுவாரும்' நிறைந்திருக்கும் நாட்டிலே 'நாங்கள் பட்டினி!' என்பார்கள். ஏன்?

நாங்கள் கேட்டால்
'தரமாட்டோம்!' என்பாரும்

என்று பாடுவார்கள். தங்களுக்குத் தெரியாமல் 'தோசை வடை தின்பாரும்' இருப்பதாகப் பாடுவார்கள்.

இவ்வளவு நகைச்சுவையுடன் சீசந்திப் பாட்டுப் பாடி வரும் பிள்ளைகள்,

வாரீர், எண்ணெய் வாரீர்!
விரைவாய் எண்ணெய் வாரீர்!

என்று அவசரப்படுத்துவதும் உண்டு. 'எண்ணெயைக் கொண்டு வா, கொண்டு வா' என்று ஆத்திரப்படுவதும் உண்டு.

குடத்தில் எண்ணெயைச்
சரிச்சுவா, சரிச்சுவா!

என்று சொல்லி, செக்கில் ஆட்டி ஜாடியில் ஊற்றி வைத்திருக்கும் நல்லெண்ணெயை வாங்கிக்கொண்டு போவார்கள்.

இப்படிக் கிராமத்தில் வீடுதோறும் போய் எண்ணெய் சேர்த்து வைத்துக்கொள்ளும் பிள்ளைகள் தங்கள் வீடுகளிலிருந்து பட்சணம் பலகாரங்கள் கொண்டுவருவதும் உண்டு. கண் விழிப்பதற்கு இவர்கள் கதை சொல்வதுடன் திருப்தியடைய மாட்டார்கள். கதை கேட்டுக் களைப்பு வந்ததும் பொழுதுபோக்கான விளையாடல்களில் ஈடுபடுவார்கள். கட்டம் ஆடுதல், 'பரமபத சோபானம்' விளையாடுதல், இஷ்டப்படி நாடகம் ஆடுதல் முதலிய பொழுதுபோக்குகளாலும் நித்திரா தேவியை விரட்டப் பார்ப்பார்கள். முடியாது என்று கண்டதும், கொட்டாவி விட்டுக்கொண்டே உறங்கிப் போவார்கள்.

ஸ்ரீஜயந்தியில் நம் குழந்தைகளுக்குத்தான் எவ்வளவு ஈடுபாடு, பாருங்கள்! கண்ணன் கதைகளில் மிகவும் இரசமான பகுதி குழந்தைக் கண்ணனின் கதைகளே என்பதை அறியாதார் யார்? கண்ணனும் தங்களைப் போல் வளர்ந்து விளையாடினன், 'துஷ்டத்தனம்' என்று சொல்லத்தக்க செயல்களையும் புரிந்தான். இதைத் தெரிந்து கொள்வதில் குழந்தைகளுக்கெல்லாம் குதூகலம்தானே. கண்ணனின் அசாதாரண சக்தியைப் புலப்படுத்தும் கதைகள் கேட்பதிலும் குழந்தைகளின் உற்சாகத்திற்குக் குறைவு இல்லை.

★

முதியவர்களும் குழந்தை யுள்ளத்துடன் குதூகலமாய்க் கொண்டாடுகிற பண்டிகை ஸ்ரீஜயந்தி. ஆண்களோடு பெண்களும் சரி சமானமாய்க் களித்துக் கொண்டாடும் விழா இது. தாய்மாரும் கன்னிப்பெண்களும் கண்ணனை நினைத்துப் பேறு பெறலாம் என்ற நம்பிக்கையில் பங்கு கொள்கிருர்கள்.

கண்ணன் கோகுலத்தில் பிறந்தபோது அங்கே முதலாவது ஸ்ரீஜயந்தி கொண்டாடியிருக்க வேண்டுமல்லவா? அத்தகைய குது



கலமும் கொண்டாட்டமும் ஒவ்வொரு ஆண்டிலும் ஸ்ரீஜயந்தி கொண்டாடும் ஒவ்வொரு வீட்டிலும் எப்படியாவது நினைவிற்கு வருவது நல்லதுதானே!

## 2. பெரியாழ்வார் கொண்டாடிய ஸ்ரீஜயந்தி

சுமார் 1,200 ஆண்டுகளுக்கு முன் ஆழ்வார்களில் ஒருவரான பெரியாழ்வாரும் ஸ்ரீஜயந்தி கொண்டாடினுர் என்ருல், 'அது உனக்கு எப்படித் தெரியும்?' என்று யாரும் கேட்பது இயல்புதான். பெரியாழ்வார் திருமொழியில், 'திருப்பல்லாண்டு'ப் பாசுரங்களுக்குப் பின் முதல் திருமொழியிலேயே இப்பெரியார் ஸ்ரீஜயந்தி கொண்டாடினுர் என்பதற்குச் சான்று கிடைக்கிறது.

### திருக்கோட்டியூரில் ஸ்ரீஜயந்தி

நாம் நம் வீடுகளில் ஸ்ரீஜயந்தி கொண்டாடுவது போல் பெரியாழ்வார் கொண்டாடவில்லை. கண்ணன் அவதரித்த காலத்தில் ஆய்ப்பாடியிலுள்ளவர்கள் மகிழ்ச்சி உள்ளடங்காமல் அதற்குப் போக்கு வீடாகச் செய்த செயல்களை நினைத்துப் பார்த்தது மட்டுமா?— அப்படியே அகக்கண்ணில் கண்டு பாடி, அந்த ஆதி ஸ்ரீஜயந்தியை அவர்களைப்போல் தாமும் அனுபவிக்கிருர். இந்தக் கொண்டாட்டமும் அனுபவமும் இவர் இல்லத்திலோ, இவர் ஊரான ஸ்ரீவில்லிபுத்தூரிலோ நிகழவில்லை; இவரது தோழரும் பரம பாகவதருமான செல்வ நம்பியின் ஊரான திருக்கோட்டியூரில் நிகழ்கின்றன. இத்தோழரும் அருகில் இருப்பதாகவே கருதலாம்.

திருக்கோட்டியூர்க் கோயில் நந்தகோபன் திருமாளிகையாகிறது. பெருமாள் வடமதுரையில் சிறைக்கூடத்திலே பிறந்து கம்சனுக்குத் தப்பி ஆய்ப்பாடிக்கு வந்து சேர்ந்த குழந்தைக் கண்ணனுகக் காட்சி வழங்குகிருர். திருக்கோட்டியூர் ஆய்ப்பாடியாகிக் கண்ணன் பிறப்பைக் கொண்டாடுகிறது.

நந்தகோபனின் மாளிகை முற்றத்திலே எண்ணெயும் மஞ்சட்பொடியும் ஒருவர் மேல் ஒருவர் தூவிக் கொள்வதால் அந்த முற்றம் முழுவதும் சேறுமயமாகி யிருப்பதைக் காண்கிருர் பெரியாழ்வார். 'இதுவோ கண்ணன் திரு முற்றம்?' என்று அதிசயிக்கிருர்.

கண்ணன் பிறந்ததுமே 'இனி இவன்தான் இம்மாளிகைக்குத் தலைவன்!' என்று அபிமானித்தானும் நந்தகோபன். இப்படிக் கண்ணனின் தந்தையுடைய உள்ளத்தையும் ஊடுருவிப் பார்க்கிறது பெரியாழ்வாரின் மனேபாவம்.

நந்தகோபன் மாளிகையை நோக்கி எவ்வளவு வேகமாய் வருகிருர்கள் மக்கள், ஆய்ப்பாடியின் பல மூலைகளிலிருந்தும்! ஓடி வருகிருர்கள்; கீழே விழுகிருர்கள். தங்கள் உற்சாகத்திற்குப் போக்கு வீடாகச் சத்தம் போடுகிருர்கள்.

'நம்பிரான் எங்கே?' என்று சிலர் அங்கும் இங்கும் நாடுகிறார்கள். சிலர் பாடுகிறார்கள். சிலர் பறை கொட்ட, அதற்குத் தக்க முறையில் கூத்தாடுகிறார்கள் வேறு சிலர். பெரியாழ்வார்-எந்தப் பலகணியை எப்படித் திறந்தாரோ?—பார்த்துக் கொண்டிருக்கிறார்!

**பாடி படும் பாடு**

சொல்ல முடியாத கோலாகலத்தைச் சொல்லிப் பார்க்கிறது கவியுள்ளம்:

ஓடுவார், விழுவார்
　　உகந்(து) ஆலிப்பார்,
நாடுவார், 'நம்பிரான்
　　எங்குற்றான்?' என்பார்;
பாடு வார்களும்,
　　பல்பறை கொட்ட நின்(று)
ஆடு வார்களும்
　　ஆயிற்(று) ஆய்ப்பாடியே.

கண்ணன் பிறப்பால் குதூகலம் அடையாத மூலைமுடுக்கும் இல்லை ஆய்ப்பாடியிலே என்று அந்தக் குதூகலத்தை ஒரு முழு நோக்காக நோக்கிப் பாடுகிறார். திருக்கோட்டியூரில் வெண்ண மாடங்களெல்லாம் ஆய்ப்பாடி வீடுகளாய் விழாக் கொண்டாடு கின்றன,—பெரியாழ்வாரின் பாட்டும் பக்தியும் செய்யும் ஜால வித்தையினால்!

நந்தகோபனின் மாளிகைக்குள்ளே நுழைவாரும் அங்கிருந்து வெளிப்படுவாருமாக ஒரு கூட்டத்தைப் பார்க்கிறார். சிலர் குழந்தையைப் பார்த்து, சாமுத்திரிகக் கலை தெரிந்தவர்களைப் போல், 'ஆண் குழந்தைகளில் இவனுக்கு நிகராக வேறொரு குழந்தையும் இல்லை' என்று சொல்வதும் இவர் காதில் விழுகிறது. அந்தக் காட்சியையும் பார்க்கிறார்.

'ஓணத்தான் உலகாளும்' என்று சிலர் கூறுவதையும் கேட்டு நமக்குச் சொல்லுகிறார். திருமாலுக்கு உரிய திருவோண நட்சத் திரத்தைக் குறிப்பிடுவதால் ஆயர்களின் மனோபாவத்தோடு பெரி யாழ்வாரின் பக்தி-மனோபாவமும் கலந்து பரிமளிப்பதை இங்கே காண்கிறோம்.

ஆய்ப்பாடியில் மகிழ்ச்சிவெறி அதிகரித்த வண்ணமாயிருக் கிறது. 'அதோ பாலும் தயிரும் வெண்ணெயும் இருக்கிற உறிகளை அறுத்துக் கொண்டுவந்து முற்றத்திலே உருட்டிவிட்டு ஆடுகிறார் களே சிலர்!' என்று அந்தக் காட்சியையும் கண்டு காட்டுகிறார். 'நந்தன் பிள்ளைக்கு நன்மையுண்டாக வேணும்' என்று நெய் பால் தயிர் முதலியவற்றைப் பலருக்கும் அள்ளி வழங்குவோரையும் பார்க் கிறார்; காட்டுகிறார். தலைமுடி அவிழ்ந்ததும் தெரியாமல் சிலர் கூத்தாடுவதையும் பார்க்கிறார்.



'ஆய்ப்பாடி முழுவதும் ஒரே பைத்தியமாயிருக்கிறது!' என்று தாம் கண்ட சில காட்சிகளைக் குறிப்பிட்டும், வேறு காட்சிகளை உய்த்துணர வைத்தும், பாடுகிறார் பெரியாழ்வார்:

உறியை முற்றத்(து)
　　உருட்டி நின்(று) ஆடுவார்;
நறுநெய் பால் தயிர்
　　நன்றாகத் தூவுவார்;
செறிமென் கூந்தல்
　　அவிழத் திளைந்(து), எங்கும்
அறி(வு) அழிந்தனர்
　　ஆய்ப்பாடி ஆயரே!

ஆயர்கள் எண்ணெய் தேய்த்துக்கொண்டு 'நெய்யாடல்' என்ற அந்த மகிழ்ச்சி விழாவையும் கொண்டாடுகிறார்களாம் கிருஷ்ண மந்திரத்திலே. நந்தகோபன் மாளிகைதான் இப்போது குட்டிமகாராசாவின் இல்லமாகிவிட்டதே! இந்த ஆயர்கள் இந்த மாளிகைக்கு வரும்போதே உறிகளுடனும், பசு மேய்க்கும் கோலுடனும், படுக்கும் ஓலைப்பாயுடனும், மழு என்னும் ஆயுதத் துடனும் வந்திருக்கிறார்களாம். அவர்கள் ஆனந்தத்தால் பற்கள் வெளியே தோன்றச் சிரித்துக்கொண்டு நெருங்கிப் புகுந்து நெய் யாடிய நிகழ்ச்சியையும் கண்டு காட்டுகிறார் பெரியாழ்வார்.

**யசோதையின் குதூகலம்**

ஆய்ப்பாடியின் குதூகல வெறியைப் பாடுகிறவர் யசோதைத் தாயின் இன்ப வெறியையும் பாடிப் பரவசமாகிறார். நல்ல வாசனைத் திரவியங்களைச் சேர்த்துக் காய்ச்சிய தீர்த்தத்தைக் கொண்டு யசோதை குழந்தையைக் குளிப்பாட்டுவதையும், பசுஞ்சிறு மஞ்ச ளால் நாக்கு வழிப்பதையும், அப்போது குழந்தை வாய் திறக்க அங்கே தாய் வையம் ஏழும் கண்டதையும் பெரியாழ்வார் பாடுகிறார். அந்த அதிசயத்தை யசோதை மற்றப் பெண்டுகளையும் அழைத்துக் காட்டு கிறாளாம்.

பன்னிரண்டாம் தினமாகிய நாமகரண நாளில் (பெயரிடும் விழா நாளில்) எங்கும் வெற்றித் தோரணங்களை நாட்டி அலங்கரிக் கிறார்களாம் ஆயர்கள். குழந்தையைக் கைத்தலத்தில் எடுத்து மகிழ்ச்சி பொங்க நோக்குகிறார்கள். கண்ணன் என்று பெயரிடுவ தாகவும் உய்த்துணர வைக்கிறார் பெரியாழ்வார். இந்த நாளில் யசோதைத் தாயின் மகிழ்ச்சியைச் சொல்லவா வேண்டும்?

குழந்தை தொட்டிலில் கிடக்கும்போது உற்சாகமாக உதைத்துக் கொள்வதையும், பாலுக்கு அழும்போது உதைத்துக்கொள்வதையும், தாய் குழந்தையை எடுத்து இடுப்பில் வைத்துக் கொள்வதையும், மார்பில் அணைத்துக் கொள்வதையும், அப்போது குழந்தை படுத்தும் பாட்டையும், தாய் மகிழ்ச்சியில் படும் பாட்டையும் பெரியாழ்வார்

மற்றக் காட்சிகளைக் கண்டு காட்டுவதுபோல் காட்டவில்லை; யசோதை தனக்கு அருகிலுள்ள ஒரு தோழியை நோக்கிக் கூறுவதை அப்படியே தன் கூற்ருக வெளியிடுகிருர். என்ன ஆச்சரியம்! இவரே யசோதைத் தாய் ஆகிவிடுகிருர்:

கிடக்கில் தொட்டில்
கிழிய உதைத்திடும்;
எடுத்துக் கொள்ளில்
மருங்கை இறுத்திடும்;
ஒடுக்கிப் புல்கில்
உதரத்தே பாய்ந்திடும்;
மிடுக்கி லாமையால்
நான்மெலிந் தேன், நங்காய்!

### சொந்த அனுபவம்

பெரியாழ்வார் இப்போது தனித்து நின்று காட்சி ஒன்றும் காணவில்லை; இந்தப் பக்தமணியின் தாயுள்ளம் தாயே ஆகிவிடுகிறது; கண்ணனைத் தொட்டிலில் விட்டுத் தாலாட்டப் பார்க்கிருர்; அவனுக்கு உறக்கம் வந்தால்தானே?

காலால் உதைத்துத் தள்ளுகிருன். தொட்டில் கிழிய உதைக்கிருன் என்று கூறியபோதிலும், மெத்தென்றிருக்கும் கால்களுக்கு நோவு எடுக்குமே என்ற கவலைதான் இந்தத் தாய்க்கு இப்போது!

அதற்காகத் தொட்டிலிலிருந்து எடுத்து இடுப்பில் வைத்துக் கொண்டால், 'இடுப்பை முறித்துவிடுகிருனே!' என்கிருள். ஆனால் தன் இடுப்பில் நோவு ஏற்படுகிறதே என்ற கவலை இவளுக்கு இல்லை. 'குழந்தை படுத்தும் பாட்டினால் எனக்கே இடுப்பு முறியும்போது குழந்தைக்கு எவ்வளவு நோவு உண்டாகுமோ?' என்பதுதான் இவள் கவலை.

குழந்தையை ஒரு செயலும் செய்ய முடியாதபடி மார்பிலே அணைத்துக்கொண்டால் 'கால்களால் வயிற்றில் உதைக்கிருனே' என்கிருள். இப்போதும் குழந்தைக்குக் கால் வலிக்குமே என்ற கவலைதான்.

'மிடுக்கு இலாமையால் நான் மெலிந்தேன், நங்காய்!' என்று பாடிக்கொண்டே யசோதையாகிய பெரியாழ்வார் தோழியை நோக்கவில்லை, தோழரான செல்வநம்பியை நோக்குகிருர் எனக் கருதலாம். பெரியாழ்வார் பாடிய கிருஷ்ணவதார வைபவப் பாடல்களைக் கேட்டு உருகிநின்ற செல்வநம்பி ஆழ்வாரை நோக்கி, 'அந்த ஆதி ஸ்ரீஜயந்தியையே கொண்டாடி விட்டீர்; அதிசயமாய்க் கொண்டாடினீர்!' என்று பாராட்டியதாகவும் கருதலாம்.



# 3. தேசீய கவியின் ஸ்ரீஜயந்தி

நாம் கண்ணன் பிறப்பாகிய ஸ்ரீஜயந்தியை ஆண்டுதோறும் நாடெங்கும் கொண்டாடி வருகிரேம். இமயமலை முதல் கன்னியாகுமரி வரையுள்ள இந்த உபகண்டமாகிய பாரத பூமியில் மிக்க குதூகலத்துடன் கொண்டாடப் பெறும் பண்டிகைகளில் ஸ்ரீஜயந்தியும் ஒன்ருகும். ஒவ்வொரு குடும்பத்திலும் தாய்மார் பேருவகையுடன் கொண்டாடும் பண்டிகை இது என்பதையும், பெண்களோடு ஆண்களுக்கும் முதியவர்களோடு இளைஞர்களுக்கும், குழந்தைகளுக்கும்கூட இந்தக் கண்ணன் பிறப்பு விழா உவகை ஊட்டுகிறது என்பதையும் பெரியாழ்வார் அறிந்திருக்க வேண்டும்.

### கண்ணனும் தேசபக்தியும்

சாதாரண மக்களும் சாத்திரங்களைப் பயின்றவர்களும் ஒருங்கே இன்புற்று ஸ்ரீஜயந்தி பண்டிகையில் கண்ணனை நினைத்துப் பார்க்கிருர்கள். பக்தர்கள் பரவசமாகிருர்கள். பௌராணிகர்கள் கதைகளைச் சொல்லுகிருர்கள்; காலட்சேபம் நடத்துகிருர்கள். இரசிகர்களுக்குமட்டுமா?—எல்லாருக்கும் செவிவிருந்தாகின்றன கண்ணன் கதைகள். பல நூற்ருண்டுகளாகப் பக்தர்களின் இதயத்திற்கு அமுதமாக இருந்த கிருஷ்ணபக்தி நம் தேசபக்தர்களுக்கும் இன்னமுதமாகி, இவர்களுடைய சிந்தனைகளையும் செயல்களையும் புதிய வழிகளில் தூண்டி வந்திருக்கிறது.

தேசத் தந்தையாகிய காந்தியடிகள் கண்ணன் வாக்காகிய பகவத்கீதையைத் தம் வாழ்க்கைப் பெரு நெறிக்கும் தேசத் தொண்டிற்கும் இன்றியமையாத வழிகாட்டியாகக் கொண்டிருந்தார். அதிதீவிர தேசபக்தராகத் திகழ்ந்த திலகர் பகவத்கீதைக்கு விளக்கமாக ஸ்ரீ கீதா ரகஸ்யம் என்ற ஓர் உரை எழுதியிருக்கிருர். மகாயோகியும் கடல்போல் ஞானம் வாய்ந்தவருமான அரவிந்தரும் பகவத்கீதைக்கு விளக்கமாகச் சிறந்த ஆங்கிலக் கட்டுரைகள் எழுதியிருக்கிருர். 'வஸந்தம்மை' என்ற அனிபெஸன்டின் கீதை மொழிபெயர்ப்பும் கண்ணனைப் பற்றிய கட்டுரைகளும் பிரசித்தமானவை. ஆசாரிய விநோபாவும் தம் கீதைப் பேருரைகள் வாயிலாகக் கண்ணன் வாக்கை எல்லாத் தொண்டர்களுக்கும் வழிகாட்டியாக்கப் பேருதவி புரிந்திருக்கிருர். இவர்களுக்கெல்லாம் உண்மையான கிருஷ்ண பக்தி உண்டு என்பதில் ஐயம் இருக்க முடியாது.

தேசீய கவியான நம் பாரதியாருக்கும் கிருஷ்ணபக்தி உண்டு. இவருக்குக் கிருஷ்ணபக்தி அதிகம் என்று சொன்னலும் பொருந்துவதே. இவர் இதயத்தைப் பாரதசக்தியைத் தன் அம்சமாகக் கொண்ட பராசக்தியும் கண்ணனும் பங்கிட்டு ஆண்டு வந்தனர் என்ருலும் போதாது; இவருக்குப் பராசக்தியே கண்ணன், கண்ணனே பராசக்தி என்று கூறவேண்டும். இவரது பாடல்களில் கண்ணன்

பாட்டிற்கு ஒரு சிறப்பான இடம் உண்டு; ஒரு தனிச் சிறப்பு வாய்ந் இடம் உண்டு என்றும் கூறலாம்.

இத்தகைய கிருஷ்ண பக்தரான தேசீய கவியின் உள்ளத்தி ஸ்ரீஜயந்தி என்ற கண்ணன் பண்டிகை எத்தகைய உணர்ச்சிகளை தோற்றுவித்திருக்க வேண்டும்! இது குறித்து நாம் ஊகம் செய் பார்க்கவேண்டும் என்பதில்லை; 'கண்ணன் பிறப்பு' என்ற தலை புடன் ஒரு ஸ்ரீஜயந்திப் பாட்டும் இவர் கவிதைத் தொகுதியில் இட பெற்றிருக்கிறது. இவரது சிறந்த பாடல்களில் இதுவும் ஒன்று.

## பாரதியார் கொண்டாடிய ஸ்ரீஜயந்தி

ஆவணித் திங்கள்; தேய்பிறையில் எட்டாம் நாள்; நட்ட ந நிசியில் கண்ணன் பிறந்ததாகப் புராணம் கூறுகிறதல்லவா சாதாரண பக்தர்களுக்கும் இது புராணச் செய்திதான், ஒ பண்டைப் பழஞ் செய்திதான். 'எத்தனையோ தலைமுறைகளுக் முன் பிறந்தான், எத்தனையோ நூற்றாண்டுகளுக்கு முன் பிறந்தான் என்ற செய்திதான். ஆனால் பெரியாழ்வாரைப் போல் பாரதியாருக்கு இது ஒரு புதுமைச் செய்தி. இவருக்கு அன்று தாம் வாசித் பத்திரிகைச் செய்தியைக் காட்டிலும் புதிய செய்தி; என்று புதுமையான செய்தி. இந்த நிகழ்ச்சி இவர் கண்முன் புதிதா நிகழ்கின்றது.

பாரதியார் வீட்டிலேயே கண்ணன் பிறக்கிறான். அகத்திலு புறத்திலும் நிகழ்கின்றது இந்தப் பெருநிகழ்ச்சி. காற்று என் பத்திரிகை எட்டுத்திசையிலும் இந்தச் செய்தியை வெளியிடு கிறதாம்.

*கண்ணன் பிறந்தான்,—எங்கள்*
*கண்ணன் பிறந்தான்—இந்தக்*
*காற்றதை எட்டுத் திசையிலும் கூறிடும்!*

என்று வாய் திறந்து சொல்லுகிறார்.

அகக் கண் காண்பது வாக்காகிப் பண்ணழகு பெற்றுப் பாட்டு மாகி வருவது கண்டு குதூகலம் ஏற்படுகிறது. தொடர்ந்து பாடுகிறார்:

*திண்ணம் உடையான்—மணி*
*வண்ணம் உடையான்—உயர்*
*தேவர் தலைவன் புவிமிசைத் தோன்றினன்!*

பண்ணை இசைத்துப் பாடும் பாரதியாரின் நெஞ்சிலிருந்து துயரம் மறைந்து போகிறது; கவலை பறந்து போகிறது. 'உங்கள் நெஞ்சுப் புண்ணுக்கும் இது ஓர் அமிர்த சஞ்சீவி!' என்று பிறருக்கும் சொல்ல ஆசைப்படுகிறது உள்ளம். 'இந்த நடுநிசி—ஸ்ரீஜயந்தியில் உறங்கி விழவேண்டாம்; கண்ணை விழித்துப் பாருங்கள் இந்தக் கண்ணன் பிறப்பை; கொட்டாவி விடாதீர்!' என்கிறார்.



இந்த உணர்ச்சிகள் பாட்டாகி வருகின்றன:

*பண்ணை இசைப்பீர்,—நெஞ்சில்*
*புண்ணை ஒழிப்பீர்,—இந்தப்*
*பாரினிலே துயர் நீங்கிடும் என்றிதை*
*என்னிடைக் கொள்வீர்,—நன்கு*
*கண்ணை விழிப்பீர்—இனி*
*ஏதும் குறைவில்லை; வேதம் துணையுண்டு*

(கண்ணன் பிறந்தான்)

பாகவத புராணம் கண்ணன் பிறப்பை வருணிக்கிறது. பெரியாழ்வாரைப் போன்ற பரம பக்தர்களும் தாங்கள் மனக்கண் முன் கண்ட 'கண்ணன் பிறப்பு'க் காட்சிகளை வருணித்திருக் கிறார்கள். அப்படியே பாரதியாரும் தாம் கண்ட ஸ்ரீஜயந்திக் காட்சிகளை வருணிக்கத் தொடங்குகிறார். அன்று கண்ணன் பிறந்தபோது கலி பிறந்துவிடவில்லை. இன்றோ, காலத்தால் வந்த கலியுகத்தையும், மக்களின் மூடத்தனத்தால் வந்து சேர்ந்த கலியுகத் தையும் ஒரே அடியாக மடக்க வேண்டியிருக்கிறது; மடிக்க வேண்டி யிருக்கிறது. எனவே, கண்ணன் பிறப்பை முன்னிட்டு அக்கினி வந்து கலியிருளை ஓட்டுகிறான் என்கிறார் பாரதியார்.

அக்கினி பகவானைத் தொடர்ந்து, தேவர்கள் அனைவரும் வருகிறார்களாம். சூரியன் இந்திரன்...என்று அடுக்குகிறார். தேவ ஒளி பெருக அசுர இருள் மாய்ந்து போகிறதாம். ஜயகோஷம் செய்கிறது வேதம் என்கிறார்:

*அக்கினி வந்தான்,—அவன்*
*திக்கை வளைத்தான்,—புவி*
*ஆசிருட் பொய்ம்மைக் கலியை மடித்தனன்,*
*துக்கம் கெடுத்தான்;—சுரர்*
*ஒக்கலும் வந்தார்—சுடர்ச்*
*சூரியன், இந்திரன், வாயு, மருத்துக்கள்*
*மிக்க திரளாய்ச்—சுரர்*
*இக்கணந் தன்னில்—இங்கு*
*மேவி நிறைந்தனர்; பாவி அசுரர்கள்*
*பொக்கென வீழ்ந்தார்,—உயிர்*
*கக்கி முடிந்தார்—கடல்*
*போல ஒலிக்குது வேதம் புவிமிசை!*

(கண்ணன் பிறந்தான்)

இதிகாச புராணங்களிலும் இந்து தர்ம மர்மங்களிலும் நமது நாகரிகத்திலும் பண்பாட்டிலும் சமய உணர்ச்சியிலும் தோய்ந்து எழுந்த வாக்கின் முழக்கம் இது—பாரதியாரின் இதய ஒலிபரப்பு. இதில் இருளுக்கும் ஒளிக்குமிடையே, தருமத்திற்கும் அதர்மத்திற்கு

மிடையே, தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் இடையே என்று நிகழ்ந்து கொண்டிருக்கும் போராட்டம் வெற்றி பெறுவதற் அறிகுறி கிருஷ்ணன் பிறப்பு என்று முழக்குகிறார். கடல் முழங்குவது போல் வேதம் முழங்குகிறது, ஜயமங்களம் பாடுகிறது என்கிறார்.

ஓர் இசைக் கடலின் அலைபோல் முழங்குகிறது கவிதையின் இப்பகுதி. பாடிப் பாடிக் கண்டுகொள்ள வேண்டிய அனுப உண்மை இது. பாரதியாரின் கண்ணன் பிறப்புப் பாட்டின் இதய பகுதி.

இனி, இப்பாட்டின் இறுதிப் பகுதியையும் காண்போம். இதி வெற்றியின் விளைவான சாந்தி பரிமளிக்கிறது. பாரதியாரின் சமர உணர்ச்சியும் மேலிடுகிறது:

சங்கரன் வந்தான்,—இங்கு
மங்கலம் என்றான்;—நல்ல
சந்திரன் வந்து இன் னமுதைப் பொழிந்தனன்;
பங்கம் ஒன் றில்லை,—ஒளி
மங்குவது இல்லை,—இந்தப்
பாரின்கண் முன்பு வானத்திலே நின்று
(கண்ணன் பிறந்தான்)

கங்கையும் வந்தாள்;—கலை
மங்கையும் வந்தாள்;—இன்பக்
காளி பராசக்தி அன்புடன் எய்தினள்;
செங்கம லத்தாள்—எழில்
பொங்கு முகத்தாள்—திருத்
தேவியும் வந்து சிறப்புற நின்றனள்
(கண்ணன் பிறந்தான்)

சங்கரன் வந்து மங்களம் சொல்லும்போது, சைவ-வைணவ சமரச உணர்ச்சிக்கு இடம் கிடைக்கிறது ஸ்ரீ கிருஷ்ணவதாரத்திலே இருளை மாய்க்கும் ஒளியை இதற்குமுன் சுட்டிக் காட்டும்போது சூரியன் (சுடர்ச் சூரியன்) வந்ததாகக் கூறியவர் இப்போது அந்த ஒளியை அமைதியின் அறிகுறியாக வெண்ணிலவின் தண்ணொளி யாய்க் காட்டுகிறார். 'சந்திரன் வந்து இன் அமுதைப் பொழிந்தனன்' என்று கூறுவது கவனிக்கத் தக்கது. பங்கமில்லாத வெண்ணிலவு ஒளி மங்காத சந்திரிகை என்று அடுத்துக் கூறுவதும் கூர்ந்து நோக்கத் தக்கது.

இறுதிப் பகுதியின் இறுதிப் பகுதியில் கங்கையும் கலைமங்கையும் காளி பராசக்தியும் திருமாமகளும் கலந்து நின்று கண்ணன் பிறப்பைச் சிறப்பிக்கின்றனர். இதுவும் பாரதியாரின் சமரசப் பேருணர்ச்சிக்குச் சான்றுதான்.



## என்ன கொண்டாட்டம்! என்ன உட்பொருள்!

பாரதியார் கொண்டாடிய ஸ்ரீஜயந்தியில் பழமைக்கும் புதுமைக்கும் கூடச் சமரச நிலையொன்று ஏற்படுவதைக் காண்கிறோம். கண்ணன் சாதுக்களுக்காக, அறத்தை நிலைநாட்டு வதற்காக, அசுரவதம் செய்த காரியம் அன்று முடிந்துபோன காரியமன்று, கதையன்று. இன்றும் என்றும் தொடர்ந்து நடை பெறுகின்ற காரியம்தான் தேவாசுரப் போராட்டம், தர்ம-அதர்ம யுத்தம். இதை நன்கு உணர்த்துகிறது பாரதியாரின் ஸ்ரீஜயந்திப் பாட்டு.

இந்த உண்மையை உணர்ந்துகொள்ளாதவர்கள் உண்மையாக ஸ்ரீஜயந்தி கொண்டாட முடியாது என்பது பாரதியார் குறிப்பு. கிருஷ்ணவதாரத்தின் உட்பொருளாக நம் கவிஞர் அறத்தின் வெற்றியையும் சமரசத்தின் வெற்றியையும் சுட்டிக்காட்டுவது ஆழ்ந்த சிந்தனைக்கு உரியதாகும். கிருஷ்ண பக்தியில் ஊறிக்கிடந்த தேச பக்தி புராண பரிபாஷையிலேயே, 'பழமைக்கும் பழமையானது, புது மைக்கும் புதுமையானது' என்று சொல்லத்தக்க ஸ்ரீ கிருஷ்ணவதார தத்துவத்தை வெளியிடும் முயற்சிதான் இந்த ஸ்ரீஜயந்திப் பாட்டு. அந்த முயற்சியின் வெற்றி இப்பாட்டு என்று கூறுவதும் பொருத்தமே.

பாரதியாரின் கிருஷ்ண பக்தியையும் கிருஷ்ணவதார தத்துவத்தையும் கண்ணன் பாட்டில் சிறப்பாகக் காண்கிறோம். கண்ணனைத் தோழனாகக் கண்டு காட்டுகிறார் பாரதியார். காதலனாகவும் காட்டுகிறார்; ஏன், காதலியாகவும் காண்கிறார், காட்டுகிறார்! ஆழ்வார் களும் துணிந்து கூறாத காதலி நிலையிலும் கண்ணன் பாரதியாருக் குக் காட்சி வழங்குவது தமிழிலக்கிய உலகிலேயே ஒரு புதுமை தான்!

கண்ணன் தாயாகவும் தந்தையாகவும் பாரதியாரை ஆதரிப்பதையும் காண்கிறோம். அரசனாகவும் ஆண்டவனாகவும் குல தெய்வமாக வும் பாரதியாரை ஆட்கொள்வதையும் காண்கிறோம். சற்குருவாக இவருக்குப் போதனை செய்கிறான்; சீடனாகவும் வந்து அறிவுறுத்து கிறான். சேவகனாகவும் வந்து அறிவு காட்டுகிறான்; குழந்தையாகவும் வந்து அன்புப் பாடங்களைக் கற்றுக் கொடுக்கிறான்.

இத்தகைய கண்ணன் பாடல்களிலெல்லாம் ஊடுருவிக் கிடக் கிறது பாரதியார் ஸ்ரீஜயந்திப் பாட்டில் வெளியிடும் உட்பொருள். வாழ்க்கையே ஒரு விழா, ஒரு பண்டிகை; இந்தப் பண்டிகையில் விரதத்திற்கும் இடமுண்டு, விருந்திற்கும் இடமுண்டு—இத்தகைய கருத்துக்களையும் கண்ணன் பாட்டில் குறிப்பாகவும் வெளிப்படை யாகவும் காண்கிறோம்.

'பாஞ்சாலி சபத'த்திலும் பாரதியாரின் கிருஷ்ண பக்தி பொங்கு வதைக் காண்கிறோம். ஸ்ரீ கிருஷ்ணவதார தத்துவமும் திருதராஷ்டிரன் வாயிலாக உபதேசிக்கப்படுகிறது சகுனிக்கு. பேய்க்கு வேதம்

உணர்த்துவது போல உணர்த்தப்படும் இந்தத் தத்துவம் அவதாரத்தின் உட்பொருளை அதிசயமாக வெளியிடுவதையும் காண்கிறோம். பாஞ்சாலியின் கண்ணன் துதியிலும் கிருஷ்ண பக்தி வெள்ளமிடுகிறது. இங்கும் அவதாரத்தின் துஷ்டநிக்கிரக சக்தி இரணியவதத்தின் வாயிலாக வருணிக்கப்படுகிறது.

கண்ணன் அருளால் துகில் வளரப் பெறும் அற்புதத்திலே இழந்த உரிமைகளை இந்தியா பெற்று ஒரு புதிய பாரத சக்தியாக விளங்கப் போகிறது என்பதைப் பாரதியார் தீர்க்கதரிசனமாய்க் காண்பதுபோல் கண்டு காட்டுகிருர். கண்ணன் அருளால் பாரத சக்தியாகிய பாஞ்சாலி வெற்றி பெற்றதுபோல் பாரத சக்தியாகிய இந்தியாவும் வெற்றி பெறுவது திண்ணம் என்ற குறிப்பையும் இங்கே காண்கிறோம்.

பாரதியாரின் சில தனிப்பாடல்களிலும் கிருஷ்ண பக்தி பொங்கி வெள்ளமிடுவதைக் காணலாம். தோத்திரப் பாடல்களில் மட்டுமல்ல, அரசியல் பாடல்களிலும் கிருஷ்ண பக்தியைக் காண்கிறோம்.

என்று தணியும் இந்தச்
சுதந்திர தாகம்

என்று தொடங்கும் தேசிய கீதம் பாரதியாரின் சுதந்திரதாகத்தைப் புலப் படுத்துவதுதான்; எனினும் இங்கே கிருஷ்ணபக்தியின் தாகத்தையும் காண்கிறோம். அன்று ஒரு பாரதம் ஆக்க அவதரித்தவன் இன்றும் ஒரு புதிய பாரதம் ஆக்கத் துணை புரிவான் என்ற கருத்து இங்கே நன்கு வெளிப்படுகிறது.

'கண்ணனை வேண்டுதல்' என்ற தலைப்பில் சில தோத்திரப் பாடல்கள் காணப்படுகின்றன. இதில் பக்தியுடன் தேசபத்தியும் கலந்து கண்ணனுக்குத் துதி பாடுவதைக் காண்கிறோம். 'வருவாய் கண்ணா!' என்ற தலைப்பில் பல்லவியும் சரணங்களுமாக அமைந்திருக்கும் பாட்டில் 'அரியும் சிவனும் ஒன்று' என்ற சமரச உணர்ச்சியுடன் 'அசுரர் தலைகள் சிதற'க் கண்ணன் எழுகின்ற அவதாரச் செயல் வற்புறுத்தப்படுவதைக் காண்கிறோம். 'கண்ண பெருமானே' என்ற பாட்டில் பொய்யரை மாய்த்து எளியவர்களை இறையருள் காப்பாற்றும் என்ற தத்துவம் குறிக்கப் பெறுவதையும் காண்கிறோம்.

'கண்ணன் திருவடி' 'கண்ணம்மாவின் காதல்' 'கண்ணம்மாவின் எழில்' 'கண்ணம்மாவின் நினைப்பு' 'வேய்ங்குழல்' முதலான தோத்திரப் பாடல்களும் பாரதியாரின் கிருஷ்ண பக்தியை நினைவூட்டுவனவே. 'ராதை பாட்டு'ம் இவர் கிருஷ்ணபக்தியின் பகுதிதான். 'நந்தலாலா' என்ற பாட்டிலே கிருஷ்ணபக்திக்குத்தான் என்ன கொண்டாட்டம்!

'ஆரிய தரிசனம்' என்ற தலைப்பில் பாரதியார் பாடியிருக்கும் கவில் முதற்பகுதி புத்த தரிசனம்; பிற்பகுதி கிருஷ்ணுர்ச்சுன தரி



சனம்; இந்தப் பிற்பகுதியில் கீதையின் சாரமும் கண்ணனின் காட்சியும் எவ்வளவு குதூகலமாய் வெளியிடப் பெறுகின்றன!

'பாரத சமுதாயம் வாழ்கவே!' என்ற பாட்டில் 'நாம் எல்லாரும் இந்நாட்டு மன்னர்!' என்று பாரதியார் அறிவிக்கிருர் அல்லவா? இந்தச் சமதர்ம முழக்கத்திற்கும் 'எல்லா உயிர்களிலும்நானே இருக்கிறேன்' என்று உரைத்த கண்ணன் கொள்கையையே உயிர்நிலைக் கொள்கை ஆக்குகிருர்—இல்லையா?

இப்படியெல்லாம் கிருஷ்ண பக்தியில் ஊறிக்கிடந்த தேசபக்தர் கொண்டாடிய ஸ்ரீஜயந்தி அதிசயமாகத்தானே இருக்கவேண்டும்? எவ்வளவோ புதுமையாகவும் பொருள் புதைந்ததாகவும் இருக்க வேண்டுமே அந்தக் கொண்டாட்டம். ஏன், இரசிகர்கள் எதிர்பார்ப்பதற்கு மேலான பொருளாழமும் கவிதை அழகும் வாய்ந்திருக்கின்றன பாரதியாரின் ஸ்ரீஜயந்திப் பாடல்களில் என்பதில் ஐயமும் உண்டோ?

## 4. கண்ணன் பிறந்த கதை

அசுர சுபாவமுள்ள அரசர்களின் பாரத்தைத் தாங்க முடியாமல் நிலமகள் பசுவின் உருவங்கொண்டு படைப்புக் கடவுளான பிரமனிடம்போய் முறையிட்டாள். பிரமன் நிலமகளையும் விண்ணவர்களையும் அழைத்துக்கொண்டு பாற்கடலின் கரையை அடைந்தான். அங்கே ஒருமையுள்ளத்துடன் 'பரம புருஷன்' என்று சொல்லப்படும் தேவதேவனைத் தோத்திரம் செய்தான். புருஷ ஸூக்தத்தால் தோத்திரித்ததாகப் பாகவத புராணம் தெரிவிக்கிறது. புருஷ ஸூக்தம் என்ருல் புருஷனைக் குறித்த நல்லுரை அல்லது 'திருமொழி' என்று பொருள்.

### திரை மறைவில்

அப்போது பிரமன் சமாதி நிலையில் இருந்ததாகவும், ஆகாயத்தில் ஓர் அசரீரி வார்த்தை எழுந்ததாகவும் புராணம் தெரிவிக்கிறது. அந்த வார்த்தையைச் செவியுற்ற பின் பிரமன் விண்ணவர்களை நோக்கி, 'அந்தப் பரம புருஷனின் பேச்சை நான் என் மொழியில் பெயர்த்துச் சொல்லுகிறேன், கேளுங்கள்' என்ற பீடிகையுடன் சில வார்த்தைகள் சொல்லத் தொடங்கினுன். இறைவனது திருவுள்ளத்தைத் தன் மொழியில்கேட்டபின் அவர்கள் அதற்கு இணங்க ஏற்பாடுகள் விரைவில் செய்ய வேண்டும், தாமதம் கூடாது என்றும் பிரமன் சொன்னுன்.

நிலமகளின் வேதனை ஏற்கெனவே பரம்பொருளால் அறியப்பட்டிருக்கிறது என்ருன். தேவர்கள் யாதவரிடையே பிறவி யெடுக்க வேண்டும் என்றும், பகவானும் மனிதனுகப் பிறந்து தன் கால சக்தி

யைக் கொண்டு பூமியின் பாரம் குறைப்பதற்காகப் பூமிமீது ச சரிப்பான் என்றும் அறிவித்தான். 'பரம புருஷன் வசுதேவனுடை இல்லத்தில் பிரத்தியட்சமாக அவதரிக்கப் போகிருன்; அவனை வ படுவதற்காகத் தெய்வப் பெண்களும் பிறவி கொள்ளட்டும்' என்று தெரிவித்தான்.

முனிவர்கள் பசுக்களாய்ப் பிறப்பார்கள் என்ருன். இறை னுடைய அம்சமான அனந்தன் என்ற ஆயிரம் முகம் கொண் ஆதிசேஷனும் பகவானுக்குத் தமையனுகப் பிறக்கப் போவதாய் சொன்னுன். திருமாலின் மாயை என்ற பகவதி சக்தியும் கூடப்பிறந் உதவி புரிவாள் என்றும் கூறிய பிரமன் விண்ணவர்களையெல்லா அனுப்பிவிட்டான். நிலமகளையும் தேற்றி அனுப்பிவைத்த பி படைப்புக் கடவுள் தன் இடம் போய்ச் சேர்ந்தான்.

## தேவகி திருமணம்

சூரசேனன் என்ற யதுவம்சத்து அரசன் மதுரை (வட மதுரை என்ற நகரத்தை இருப்பிடமாக்கிக்கொண்டு அரசாளத் தொட கினுன். அதுமுதல் இந்த மதுராபுரி யதுகுல அரசர்களுக்கெல்லா தலைநகரமாயிற்று. இந்த அரசர்களில் சூரசேனன் என்பவனுக் வசுதேவன் என்ற புதல்வன் இருந்தான். இவன் உக்கிரசேனனுடை புதல்வியான தேவகியை மணஞ் செய்துகொண்டான். தேவகிக்கு கம்சன் என்று ஒரு சகோதரன் இருந்தான். அவனுக்குச் சகோத யிடம் பிரியம் உண்டு.

தேவகிக்குப் பலவகைச் சீர்வரிசைகளையெல்லாம் கொடுத்த கள். மேலும் அவளைத் திருப்தி செய்வதற்காகக் கம்சன் தானே மணப்பெண்ணையும் மாப்பிள்ளையையும் வீட்டில் கொண்டுபோ விட்டுத் திரும்ப வேண்டுமென்று தீர்மானித்தான். சீர்வ களுடன் பல இரதங்கள் புறப்பட்டன. தன் சகோதரியும் மாப்பிள் யும் ஏறிக்கொண்ட இரதத்தில் கம்சன் தானும் ஏறிக்கொண்டு குதி களின் கடிவாள வார்களைக் கையில் பிடித்துக்கொண்டான். ஆ தானே அந்த இரதத்தை ஓட்டிக்கொண்டு போவதில் அவனுக் அவ்வளவு திருப்தி.

மங்களச் சங்குகள் ஊதப்பட்டன. மிருதங்கங்கள் முழங்கி துந்துபிகளும் தூரியங்களும் ஒலித்தன. உற்சாகமாகக் கம்ச இரதத்தை ஓட்டிக்கொண்டு போனுன். அப்போது திடீரென் 'அட மூடா!' என்று ஒரு சத்தம் கேட்டது.

பேசியவர் காணப்படவில்லை. அசரீரி தொடர்ந்து பேசிய எவளுக்கு நீ இப்போது சாரதியாக இருந்து தேரைச் செலுத்தி கொண்டு போகிருயோ, அவளது எட்டாவது கர்ப்பம் உன்னை கொல்லப் போகிறதே!' என்றது. அந்த அசரீரி வாக்கு அப்படி நின்றுவிட்டது.

கம்சன் உடனே கத்தியைக் கையில் எடுத்தான்; சகோதரியி கூந்தலைப் பற்றி இழுத்தான். வசுதேவன் குறுக்கிட்டு, 'உடன் பிற



வளை வெட்டிக் கொல்லப் போகிருயா? வீரனே! மணச்சடங்கின் நடுவிலேயே மரணச் சடங்கும் நடத்தப் போகிருயா? இவளைக் கொன்றுவிட்டால் உனக்கு மரணமே இல்லாமல் போய்விடுமா? சிறு பெண்; செல்லப் பெண்; உன் தங்கை; இவளைக் கொல்வது உனக்குத் தகாது' என்று சமாதானம் சொல்லித் தடுக்க முயன்ருன். எனினும், கம்சனுடைய புத்தி அந்தக் கொடுஞ் செயலிலிருந்து உடனே திரும்பிவிடச் சித்தமாக இல்லை.

அது கண்ட வசுதேவன் திடுக்கிட்டுச் சும்மா இருந்துவிடவில்லை. 'இவளைக் கொல்லாமல் விட்டுவிடு; எனக்குக் குழந்தைகள் பிறந்தால் உனக்கே கொடுத்துவிடுகிறேன்!' என்று முடிவாக வசுதேவன் கூறி மன்ருடியதும், கம்சனும் சம்மதித்தான். கம்சனைப் பெருமைப் படுத்திப் பேசியே காரியசித்தி பெற்ருன் வசுதேவன் என்கிறது புராணம்.

கம்சனைப் புகழ்ந்துவிட்டு வசுதேவன் தன் வீடுபோய்ச் சேர்ந்தான். வசுதேவனும் தேவகியும் குடும்பம் நடத்தினர்கள். முதலாவது புதல்வன் பிறந்ததும் 'கீர்த்திமான்' என்று பெயரிடப்பெற்ற அந்தக் குழந்தையை வசுதேவன் மிக்க மன வருத்தத்துடன் கம்சனிடம் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டான். பொய் பேசுவது என்ருல் அது வசுதேவனுல் கொஞ்சமகூட இயலாத காரியம்.

வசுதேவனின் சத்தியவாக்கு அசுரசுபாவமுள்ள கம்சனையும் ஓரளவு வசீகரித்து விட்டது. அவன் கலகலவென்று சிரித்துக்கொண்டு, இந்தப் பையன் திரும்பிப் போகட்டும்; எனக்கு இவனிடம் பயம் இல்லை; எட்டாவது பிள்ளைதானே எனக்குப் பகைவன்' என்று சொல்லிவிட்டான். 'சரி' என்று குழந்தையை எடுத்துக்கொண்டு வசுதேவன் வீட்டிற்குத் திரும்பிவிட்டான்.

பிறகு நாரத மாமுனிவர் கம்சனிடம் வந்து சேர்ந்தார். அவனுக்கும் அவன் தோழர்களுக்கும் தெய்வசுபாவம் உள்ளவர்களால் நாசம் வருவது நிச்சயம் என்ருர். அது கேட்ட கம்சன் கொதித்துக் கோபித்துத் தன் கொடிய சுபாவம் புலப்படக் குழந்தையைக் கொன்று, தேவகியையும் வசுதேவனையும் விலங்கினுல் கட்டி வீட்டிற்குள்ளேயே சிறை வைத்தான். இவர்களுடைய குழந்தைகளைப் பிறக்கப் பிறக்கக் கொன்று வந்தான். நல்லவர்களிடம் தயவு காட்டிய உக்கிரசேன மகாராஜாவையும் சிறையிலிட்டுத் தானே முடி சூட்டிக்கொண்டு சாதுக்களையெல்லாம் ஹிம்சிக்கத் தொடங்கினுன்.

கம்சனைச் சுற்றி ஒரு பெருந் துஷ்டர் குழாம் உருவாகித் தர்ம நாசத்திற்கு இன்றியமையாத செயல்களில் ஈடுபட்டு வந்தது. பிரலம்பன், பகன், சாணூரன் முஷ்டிகன், அரிஷ்டன், கேசி, பூதனை, தேனுகன், பாணுசுரன், மகத மன்னனுகிய ஜராசந்தன் முதலானவர்கள் கம்சனுக்குத் தோழர்களாகவும் ஏவல் செய்பவராகவும் இருந்தனர்.

தேவகிக்கு ஆறு ஆண் குழந்தைகள் பிறந்தன. பிறந்தவுடனேயே அவர்களைக் கல்லில் மோதிக் கொன்றுவிட்டான் கம்சன். தேவகி ஏழாவது கர்ப்பமும் தரித்தாள். அனந்தன் என்ற ஆதிசேஷனுடைய அம்சமாக இந்தக் கர்ப்பம் தோன்றியது. தேவகி முதல் முதல் மகிழ்ச்சிதான். ஆனால் தன் நிலையை நினைத்துப் பார்த்ததும் துக்கம் அதிகரிக்கலாயிற்று.

அதே சமயம் திரை மறைவில் ஒரு தெய்வ நாடகம் : திருமால் யோகமாயை என்ற தனது சக்தியை அழைக்கிறான். 'தேவியே! மங்களம் பொருந்தியவளே! மதுராபுரிக்கு அப்பால் யமுனை ஆற்றின் அக்கரையில் கோகுலம் என்ற ஆய்ப்பாடி இருக்கிறதல்லவா? அங்கே நந்தகோபன் என்ற யாதவர் தலைவன் இருப்பதால் அது நந்த கோகுலம் என்று சொல்லப்படுகிறது. அங்கே வசுதேவனுடைய மூத்த மனைவி ரோகிணி என்பவளும் வசித்து வருகிறாள். கம்சன் பயத்தால் அவள் அங்கே இருக்கிறாள். யோகமாயா தேவியே! தேவகியின் ஏழாவது கர்ப்பத்தை ரோகிணி வயிற்றில் வைத்துவிடு. நான் தேவகியிடம் எட்டாவது புதல்வனாய்ப் பிறக்கப் போகிறேன். நீயும் நந்தகோபன் மனைவியான யசோதையின் கர்ப்பத்தில் பெண்ணாய்ப் பிறக்க வேணும்' என்று ஏவுகிறான்.

பகவான் தன் பரிபூரண ரூபத்துடன் தேவகிபுத்திரன் என்ற தன்மையை அடையப் போவதாக யோகமாயையிடம் தெரிவித்தான் என்கிறது புராணம். யோக மாயை தேவகியின் ஏழாவது கர்ப்பத்தை ரோகிணியிடம் சேர்த்துவிடவே, ஆய்ப்பாடியில் கண்ணனுக்கு அண்ணனாக—நம்பி மூத்த பிரான் என்று பக்தர்கள் கொண்டாடும்படி—ஆதிசேஷனுடைய அம்சம் பலராமனாய்ப் பிறக்கிறது என்றும் புராணம் சொல்லுகிறது. யோகமாயைதான் துர்க்கை, காளி என்றும் சொல்லுகிறது.

தேவகிக்கு ஏழாவது கர்ப்பம் கலைந்து போய்விட்டது என்ற வதந்தி பரவிக் கம்சன் காதிலும் விழுந்தது. 'ஐயோ, நழுவிப் போயிற்றே!' என்று நகரம் கூக்குரலிட்டது. பிறகு தேவகி எட்டாவது கர்ப்பம் தரித்திருக்கிறாள் என்ற வதந்தியும் எங்கும் பரவிக் கம்சனுக்கும் எட்டியது.

பகவானை வயிற்றில் தரிக்கும் பாக்கியம் பெற்ற தேவகி விசேஷ அழகுடனும் ஒளியுடனும் விளங்கிய அதிசயமும் ஊரெங்கும் பேசப்பட்டது. எல்லா மக்களும் மகிழ்ந்திருக்க, கம்சன் மட்டும் 'அந்தோ! எனக்குச் சத்துரு பிறக்கப் போகிறானே' என்று கலங்கினான். எனினும் பூர்ண கர்ப்பிணியாக இருந்த அவளைக் கொலை செய்ய விரும்பவில்லை; இந்த எட்டாவது குழந்தையின் பிறப்பையே எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

தேவகி கர்ப்பத்திலுள்ள தெய்வக் குழந்தையைத் தேவர்கள் மனிதர் அறியாமல் நெருங்கி வந்து, தோத்திரம் செய்து போனார்கள்.



'உன்னையே அடைக்கலமாக நாங்கள் அடைந்திருக்கிறோம்' என்றார்கள். 'உலகத்திற்குப் பிறப்பிடம் நீ ஒருவனேதான்; நீயே மறையும் இடம்; நீதான் நிலைக்கும் இடம்!' என்றார்கள்.

சாதுக்களுக்கு இன்பம் அளித்துத் தீயோருக்கு அமங்களமாக உள்ள உருவங்களை இறைவன் அடிக்கடி எடுத்துக்கொள்ளுகிறான் என்ற அந்த அவதார தத்துவத்தையும் உணர்ந்து, கர்ப்பத்திலுள்ள சிசுவை நோக்கிப் பிரார்த்தனை செய்து கொண்டார்கள். 'உன் அவதாரத்தினால், உன் திருவடிகள் படுவதால், இந்தப் பூமியைப் பேரின்ப உலகமாகப் பார்க்கப் போகிறோம். சந்தோஷம்!' என்று சொல்லிப் போனார்கள். 'யதுகுல சிரேஷ்டனே!' என்றும் பகவானை வாயார அழைத்து வந்தனம் செய்து போனார்கள்.

## பிறவியற்றவன் பிறக்கிறான் !

என்றும் இல்லாத ஒரு சோபை வசுதேவனும் தேவகியும் இருந்த சிறைச்சாலையில் காணப்படுகிறது; உள்ளும் புறமும் வியாபிக்கிறது. திக்குகளெல்லாம் என்றும் இல்லாத தெளிவுடன் சோபிக்கின்றன. வான வீதியிலுள்ள நட்சத்திரக் கூட்டங்களும் என்றுமில்லாத பிரகாசத்துடன் உதயமாகிவிட்டனவோ என்று தோன்றுகிறது. நாடும் நகரமும், முக்கியமாக ஆய்ப்பாடியும், மங்கள அம்சங்களுடன் விளங்குகின்றன. ஆறு குளங்களெல்லாம் ரமணீயமாய்க் காண்கின்றன. சோலைகளில் பறவைகளும் வண்டுகளும் மகிழ்ந்து பண் பாடுகின்றன. காற்று ஓர் அசாதாரண வாசனையுடன் வீசுகிறது. சாதுக்களின் உள்ளங்கள் பெருமகிழ்ச்சியால் பூரித்துப் போகின்றன.

'பிறவியற்றவன் பிறக்கிறான்!' என்று ஆகாய துந்துபிகள் முழங்குகின்றன. சித்தர்களும் சாரணர்களும் துதிக்கிறார்கள். கின்னரர்களும் கந்தர்வர்களும் பாடுகிறார்கள். தெய்வப் பெண்கள் ஆடுகிறார்கள். விண்ணிலிருந்து மண்மீது பூமாரி பெய்கிறது. மேக கர்ச்சனைகளுக்கிடையே, கிழக்குத் திக்கில் பூரணசந்திரன் உதயமாவதுபோல் பகவானுடைய பரிபூர்ண அவதாரம் உதயமாகிறது தேவகியின் கர்ப்பத்திலிருந்து.

ஆவணித் திங்கள், கிருஷ்ண பட்சம், ரோகிணி நட்சத்திரம், அஷ்டமி திதி இரவில் இடப லக்கினத்தில் தேவதேவன் தேவகி கர்ப்பத்திலிருந்து ஓர் ஆச்சரியமான குழந்தையாக நாலு கைகளோடும் சங்கு சக்கரங்களோடும் அவதரித்தருளுகிறான். 'திருமாலின் மார்புக் குறியாகிய ஸ்ரீவத்ஸம் இதோ இருக்கிறது; அடர்ந்த நீலமேகத்தின் அழகும் இருக்கிறதே; இது தெய்வக் குழந்தை' என்று தோன்றியது வசுதேவனுக்கு.

அப்போது குழந்தை அரையில் பீதாம்பரமும் கழுத்தில் கௌஸ்துப மணியும் தலையில் கிரீடமுமாகக் காட்சியளிப்பதையும், அந்தத் தெய்வ மேனியில் அணிகள் சுற்றிலும் ஒளி வீசுவதையும் கண்ணுற்றான் வசுதேவன் ஆச்சரியத்தால் மலர்ந்த கண்களுடன்

குளிரக் கண்டான் அந்தக் காணுத காட்சியை. இறைவனே புதல்வனாக வந்துவிட்டான் என்று ஆச்சரியத்திலும் ஆனந்தத்திலும் மூழ்கிப் போனான். சிறையகம் முழுவதும் குழந்தையின் ஒளியாலும் வனப்பாலும் ஜொலித்தது கண்டு பிரமித்தான்.

வசுதேவனின் உள்ளத்தில் பக்தி பெருகியது; தத்துவ சிந்த கள் உதயமாயின. 'ஓ பிரபுவே!' என்றான். ஒரு சமயம் குழந்தையை நோக்கி, 'சர்வேச்வரா!' என்றான். அடுத்த கணத்திலே 'கம்ச பயத்திலிருந்து உலகத்தைக் காப்பாற்ற என் வீட்டில் வந் பிறந்தாயே!' என்றான். 'தேவா! உன் அண்ணன்மார்களை கொன்றுவிட்டானே பாதகக் கம்சன்' என்று கதறினான். 'இந்த பிறவியைச் சேவகர்களால் தெரிந்துகொண்டு ஆயுதபாணியா வந்துவிடுவானே அவன்' என்றும் பதறினான்.

தேவகியும் பரமபுருஷனுக்குரிய இலக்கணங்கள் வாய்ந்த த பிள்ளையை நன்றாக நோக்கினாள். நிர்மலமான புன்சிரிப்புட தோத்திரம் செய்தாள். 'ஸாக்ஷாத் விஷ்ணுவே!' என்றாள். 'உன்னை நான் சரணம் அடைகிறேன்' என்றாள். தெய்வத் திருமேனியுட காட்சியளிக்கும் பிள்ளையை நோக்கி, 'கம்சனை நினைத்து நடுங்கி கொண்டிருக்கும் எங்களைக் காப்பாற்றுவாய்!' என்றாள். 'இந்த பிறவியை அந்தப் பாவி அறிய வேண்டாமே!' என்றும் எண்ண மிட்டாள்.

'இப்போது உன் பொருட்டே கம்சனை நினைத்து அதிக பய கொண்டு நடுங்குகிறேன்!' என்கிறது தாயுள்ளம். தெய்வ அழ தெய்வசக்தியை மறைத்துக் காட்ட, 'இந்த உன் திவ்ய ரூபம் இந் மக்களுக்குக் காட்டத் தக்கது இல்லையே. இந்த வடிவை மறைத்து கொள்வாய்' என்று பிரார்த்திக்கிறாள். தெய்வக் குழந்தையை கண்டு ஒரே மகிழ்ச்சிதான். எனினும் இறைவனே தனக்கு குழந்தையாகப் பிறந்திருக்கிறான் என்ற மகிழ்ச்சியிலும், கம்சனுடை நினைவு அச்சத்தை அதிகரிக்கச் செய்கிறது!

பிறந்த குழந்தை வாய் திறந்து பேசுகிறது: 'உத்தமியே நீயும் உன் கணவரும் பாக்கியசாலிகள்; என்னை ஆராதித்த கள்; இனி நீங்கள் என்னைப் புதல்வனாகவே காண்பீர்கள்.' பிற தெய்வக் குழந்தை சாதாரணக் குழந்தை ஆகிவிட்டது. அ சமயத்தில் ஆய்ப்பாடியில் நந்தகோபன் மனைவி யசோதைக்கு ஒரு குழந்தை பிறந்தது. ஆம், யோகமாயை என்ற தேவிதா பெண் குழந்தையாகப் பிறந்தாள்.

### ஒளித்து வளர்கிறான்!

துவார பாலகர்களும் நகரவாசிகளும் ஒரே உறக்கத்தில் ஆழ்ந் கட்டை போல் கிடக்கிறார்கள். வசுதேவன் தன் குழந்தை எடுத்துக்கொண்டு 'எப்படியாவது காப்பாற்ற வேண்டுமே' என் எண்ணமிடுகிறான். மழை இருட்டு. வசுதேவன் குழந்தையுட புறப்படுகிறான்.



மழை நீர் குழந்தை மீது விழாதபடி ஆதிசேஷன் படங்களைக் கொண்டு குடை பிடிக்கிறான். வசுதேவன் எவரும் அறியாமல் விரைவில் யமுனைக் கரையை அடைகிறான். யமுனையோ கம்பீரமான வேகத்துடன் அலைகளும் நுரைகளும் பயங்கரமான சுழிகளுமாய்க் கொந்தளித்துக் குமுறி ஓடுகிறது. எனினும் இந்த நதி வசுதேவன் செல்ல வழி விடுகிறது!

ஆய்ப்பாடியை அடைகிறான் வசுதேவன். அங்கும் மக்கள் ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கிறார்கள். நந்தகோபனின் இல்லத்திற்குள் போகிறான். யசோதையின் பெண் குழந்தையைப் பார்க்கிறான். தான் கொண்டுவந்த குழந்தையை யசோதையிடம் விட்டு அந்தப் பெண் குழந்தையைக் கையில் எடுத்துக்கொண்டு திரும்புகிறான். மறுபடியும் யமுனை வழி விடுகிறது. வெகு விரைவில் பெண் குழந்தையை வசுதேவன் தேவகியிடம் வைத்துவிட்டு, முன்போல் விலங்குகளைக் கால்களில் பூட்டிக்கொள்கிறான். கதவுகளும் முன்போல் அடைத்துக் கொள்கின்றன.

குழந்தையின் அழுகுரல் கேட்டுக் காவலாளர்கள் விழித்தெழுகிறார்கள் 'தேவகி குழந்தை குவா குவா என்று அலறுகிறது' என்று கம்சனிடம் ஓடிப்போய்ச் செய்தி சொல்லுகிறார்கள். 'இந்த எட்டாவது குழந்தைதானே என்னுடைய பகைவன்; இதோ முளையிலே அழித்துவிடுவேன்' என்று கம்சன் கட்டிலிலிருந்து அவசரமாய்க் குதித்துத் தடுமாறிக்கொண்டு, அவிழ்ந்து தொங்கும் மயிர் முடியுடன் அலங்கோலமாக ஓடிவருகிறான் பிரசவ வீட்டை நோக்கி.

இந்த நிலையில் கம்சனைக் கண்ட தேவகி, 'அண்ணா, இவள் மருமகள்; ஆண் குழந்தை தானே பகைவன்; என்னுடைய பல குழந்தைகளையும் கொன்றுவிட்டாய்! இந்தப் பெண் குழந்தை ஒன்றை எனக்குக் கொடுத்துவிடலாகாதா? உன் தங்கை யல்லவா நான்?' என்று மன்றாடி அழுது வேண்டிக்கொண்டாள். அந்தப் பெண் குழந்தையைக் கைகளால் மார்பில் அணைத்துக்கொண்டு, 'பிரபுவே! என் உடன் பிறப்பே! ஏழையாகிய எனக்குக் குழந்தைப் பிச்சை தர வேணும்' என்றாள் தேவகி. கம்சனோ அவளை மிரட்டித் தொந்தரவு செய்து குழந்தையைப் பிடுங்கிக்கொண்டான்.

குழந்தையைக் கல்லில் மோத முயன்றான் கம்சன். ஆனால் இந்தக் குழந்தை அடிபட்டு இறந்து போகவில்லை; அப்படியே நழுவிப் போயிற்று. கீழே விழுந்துவிடவுமில்லை; அவன் கையிலிருந்து நழுவி மேலே கிளம்பிவிட்டது! ஆச்சரியத்துடன் மேலே பார்த்தான் கம்சன். எட்டுப் பெருங் கைகளும் அந்தக் கைகளில் பயங்கர ஆயுதங்களுமாக ஒரு பெண்ணுருவைக் கண்டான். 'ஐயோ, காளி!' என்று வாய் குழறியது.

தேவலோகத்திற்குரிய ஆடையும் மாலையும் சந்தனப் பூச்சும் இரத்தின ஆபரணங்களும் கோரமான கொலைக்கருவிகளும் தரித்

துக்கொண்டு வான வீதியில் நின்ற துர்க்காதேவி கீழே நோக்கி பயங்கரமான ஒரு புன்முறுவலுடன், 'அடா மந்தபுத்தியே! என் னையா கொல்லப் பார்த்தாய்? உன்னைக் கொல்ல வந்தவன் ஒளித்து வளர்கிறான். வீணாக ஹிம்சை நெறியில் உழன்றே நாசமடைய போகிறாயா?' என்றாள்.

### பச்சாத்தாபமும் பகைமையுணர்வும்

கம்சன் திகைத்தான், திடுக்கிட்டான். துர்க்கை உருவு மறைந்து போயிற்று. உடனே ஓடிப்போய்க் கம்சன் தங்கையை யும் மாப்பிள்ளையையும் விடுவித்தான். அவர்களிடம் விநயமாய்ப் பேசினான். 'ஐயோ, என் தங்கையே! ஐயோ, என் தங்கை கணவனே! உங்களுக்கு நானே அரக்கனாக வந்து சேர்ந்தேன். ப குழந்தைகள் கொலையுண்டு போனார்கள். மூச்சு விட்டுக்கொண் டிருக்கும் பிணம்தான் நான் இப்போது!' என்றெல்லாம் கண்ணீ சொரிந்து புலம்பினான். வசுதேவன் காலில் விழுந்தான். தங்கை காலிலும் விழுந்து கதறினான். அப்பால் கம்சன் அவர்களிட விடை பெற்றுத் தன் அரண்மனைக்குப் போய்விட்டான்.

ஆண் குழந்தை பிறந்த வைபவம் ஆய்ப்பாடியில் குதூகலமாக கொண்டாடப் பட்டது. நந்தகோபன் முதலானவர்கள் அந்த தினத்தை ஒரு பெரிய திருநாளாகக் கொண்டாடினார்கள். குழந்தை யைக் காண எல்லாரும் வந்து கூடினார்கள்; ஆடினார்கள். எங்கே பார்த்தாலும் ஒரு புதுமையான செழிப்பும் கொழுமையும் காண பட்டன. ஆயர்கள்—ஆய்ச்சிமார் உள்ளங்களில் மகிழ்ச்சி வெ ஏற்பட்டது.

நந்தகோபன் கம்சனுக்குக் கட்ட வேண்டிய ஆண்டு கப்பத்தை மதுரைக்குப் போய்ச் செலுத்தினான். அப்போது நண் பனை வசுதேவன் விடுதலை பெற்றுத் தேவகியுடன் வாழ்ந்துகொண் டிருப்பது கண்டு களிப்புற்றான். வசுதேவன் அவனை நோக்கி, 'ச சரி, கப்பம் செலுத்தியாகிவிட்டதே; இனி நீ குழந்தையைப் பா காக்கப் போ. தாமதமின்றி ஆய்ப்பாடி புறப்படு' என்று துரித படுத்தினான். ஏன் இந்த எச்சரிக்கை? கம்சன்தான் பச்சாத்தாப துடன் வசுதேவனுக்கும் தேவகிக்கும் விடுதலையும் வாழ்வு அளித்துவிட்டானே!

இவர்களை விடுவித்த மறுநாட் காலையிலேயே கம்சன் தன் அமைச்சர்களை வரவழைத்தான். இரவில் நடந்ததை யெல்லாம் தெரிவித்தான். 'பகவான் பகைவன்தான் எனக்கு!' என்றான் மந்திரிமாரும் அந்தக் கருத்தை ஆதரித்து, 'பகவானுக்குப் பிரி மான பொருள் பசு, சாதுவின் நலம், பூஜை, தவம் முதலியவை எனவே, அவற்றைக் கெடுக்க வேண்டும். அதை ஹிம்சை நெறியி தான் செய்யவேண்டும்' என்று 'புத்தி' சொன்னார்கள். இந்த செய்தியை வசுதேவன் கேள்விப்பட்டிருந்ததால் நந்தகோபனை குழந்தை விஷயமாக எச்சரிக்கை செய்து அனுப்பினான். இப்படி செல்லுகிறது கண்ணன் பிறந்த கதை.



பல இந்திய மொழிகளிலும் சுமார் பதினாயிரத்துக்கு மேற்பட்ட நூல்கள் கண்ணன் கதையைச் சொல்லுகின்றன என்று அறிஞர் தீரேந்திரநாத் பால் கூறியுள்ளார். இவற்றுள் இன்று மிகவும் பிரசித்த மாக இருப்பது ஸ்ரீமத் பாகவதபுராணம், விஷ்ணு புராணம் முதலியன. வேறு புராணங்களிலும் கண்ணன் கதைகளைக் காண்கிறோம். ஹரி வம்சத்திலும் கண்ணன் கதைகள் விவரமாய்க் கூறப்படுகின்றன. இதிகாசமாகிய மகாபாரதத்தில் கண்ணன் சிறப்பாக அரசனாகவும், இராஜ தந்திரியாகவும் பேசப்படுகிறான். பகவத்கீதையில் ஜகத்குரு வாகவும் தெய்வமாகவும் கண்ணன் காட்சி வழங்குவது உலகப் பிரசித்தமான செய்தி.

கண்ணன் பிறந்த இடத்திலே இன்று ஒரு கோயில் காணப் படுகிறது—கண்ணன் கோயில்தான். கோயிலுக்கு அருகில் ஒரு கிணறும் உண்டு. தெய்வக் குழந்தையின் துணிகளை யசோதைத் தாய் இந்தக் கிணற்று நீரில்தான் தோய்த்துக் கழுவினளாம். கிணற் றின் பெயர் 'பாதாள குண்டம்' யாத்திரிகர்கள் இந்தக் கிணற்று நீரில் இன்றும் புனித நீராட்டத்திற்கு வருகிறார்கள். இப்படி யெல் லாம் கண்ணன் பிறந்த பிரதேசம் கண்ணன் பிறந்த கதையைத் தன் நினைவில் இன்றும் வைத்துக் கொண்டிருக்கிறது.

## 5. தீராத விளையாட்டுப் பிள்ளை

'உன்னைக் கொல்லப் பிறந்தவன் ஒளித்து வளர்கிறான்' என்று தான் கொல்ல முயன்ற பெண் குழந்தை கோர ரூபத்துடன் எச் சரித்து மறைந்ததைக் கம்சனால் மறக்கவே முடியவில்லை. சாதுக்களை ஒழிப்பதால் தெய்வ சக்தி குறைந்து போகும் என்ற அமைச்சர்களின் அபிப்பிராயமும் கம்சனுக்குப் பூர்ண திருப்தி அளிக்கவில்லை.

'என்னைக் கொல்ல வந்திருக்கும் அந்தக் குழந்தையைக் கண்டு பிடித்துக் கொன்றொழித்தால் அல்லவா நான் கவலை தீர்ந்து வாழ்க்கை நடத்த முடியும்?' என்று மந்திரிகளை நோக்கிக் கேட் டான். அதற்கு அந்தத் துஷ்ட மந்திரிகள், 'ஊர்களிலுள்ள குழந்தை களை யெல்லாம் கொன்றுவிடுமாறு கட்டளையிடு. அப்படியானால் கண்டுபிடிக்க வேண்டிய சிரமம்தான் எதற்காக? உன் சத்துருவான குழந்தையும் வதமாகிவிடுமே!' என்று பதில் சொன்னார்கள். உடனே கம்சன் பல அசுரர்களையும் வரவழைத்து, 'நீங்கள் பல வேடங் களிலும் சஞ்சரித்துக் குழந்தை வதம் நடத்த வேண்டும்; சாதுக் களையும் ஹிம்சித்து வாருங்கள்' என்று கட்டளையிட்டான். இப்படிக் கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களில் பூதனையும் ஒருத்தி.

தேவகிக்கும் வசுதேவனுக்கும் பிள்ளையாகப் பிறந்து யசோதைக் கும் நந்தகோபனுக்கும் பிள்ளையாக வளர்ந்தவனுக்குக் கிருஷ்ணன் என்று பெயரிட்டார்களல்லவா? கிருஷ்ணனைத் தமிழ் மக்கள் 'கண்ணன்' என்று செல்லமாக அழைக்கிறார்கள். இந்தக் குழந்தை

யின் பால லீலைகள் மிகவும் அதிசயமானவை. இந்த லீலைகள் பூத வதத்துடன் ஆரம்பமாகின்றன.

### தாய்போல் வந்த பேய்

பூதனை ஒரு பேய் மகள். ஓர் அழகிய பெண் வடிவில் இ விலே இவள் ஆய்ப்பாடிக்கு வந்து சேர்ந்தாள். குழந்தையை கண்டு குறுநகை புரிந்தவளாய், உறங்கிக் கொண்டிருந்த அ பிள்ளையை மெல்ல எடுத்தாள். மடிமீது வைத்துக்கொண் கொஞ்சிப் பாலூட்டுவதுபோல் நஞ்சு கலந்த அந்தப் பாலினு கண்ணனைக் கொன்றுவிடலாமென்று எண்ணினாள். தெய்வ குழந்தையும் பால் பருகுவது போல் பாவனை செய்தது. ஆ அவள் உயிரை அப்படியே உறிஞ்சிவிட்டது.

இந்தக் கதையை ஆழ்வார்கள் ஆஷாடபூதிகளுக்கு ஓர் எ சரிக்கையாகவும் குறிப்பிடுகிறார்கள். 'பெற்ற தாய்போல் வ பேய்ச்சி' என்று பூதனையைக் குறிப்பிடுகிறார் திருமங்கையாழ்வ பூதனையின் வஞ்சனை வடிவம் 'பெண்மை மிகு வடிவு' போல தோன்றியதாம். 'முலையுண்பான் போலே முனிந்துண்டு' அந் பேய்ச்சியின் ஆவியைப் 'பாலுள் வாங்கி'விட்டதாகப் பூதத் வாரும் திருமழிசையாழ்வாரும் பாடியிருக்கிறார்கள்.

### கால் நிமிர்ந்தது, வண்டி முறிந்தது

பூதனை வதத்திற்குப் பின் யசோதை குழந்தையை அணைத்து கொண்டு அஞ்சிக் கொஞ்சி, 'கண்ணே! பயந்துவிட்டாயா?' என் 'ரட்சை' கட்டினளாம். கண்ணனோ துள்ளி விளையாடத் தொட கினான்.

சில சமயங்களில் யசோதை குழந்தையை அந்த மாளிகையி ஒரு வண்டியின் கீழே தூளித்தொட்டில் கட்டிக் கண் வளர வி வதும் உண்டு.

மாணிக்கம் கட்டி
வயிரம் இடைகட்டி
ஆணிப்பொன் னால்செய்த
வண்ணச் சிறுதொட்டில்

என்று பெரியாழ்வார் வருணிக்கும் விலை உயர்ந்த தொட்டிலில் க வளரும் குழந்தை துணித்தொட்டிலையும் அபேதமாய்க் கருதிக் க வளரத் தொடங்கியதாம்.

'ஆட்டி உறங்கச் செய்துவிட்டோம்' என்று ஆய்ச்சி எண்ணி கொண்டே நீராடப் போனாள். பிள்ளையோ 'உறங்குவான் போலே கிடந்தான்' என்றுதான் பெரியாழ்வார் தெரிவிக்கிறார். அப்போ கம்சனால் ஏவப்பட்டிருந்த அசுரன் ஒருவன் அங்கே வந்தா 'இந்தச் சகடத்தில் நாம் ஆவேசித்து இந்தக் குழந்தை மே



விழுந்து நசுக்கிவிடுவோம்; இதுவும் ஒரு வேடிக்கைதான் எனக்கு!' என்று எண்ணமிட்டான்.

எண்ணம் விரைந்து செயலாகத் தொடங்கியதும் கண்ணனுக்குப் பசி வந்துவிட்டது! பாலுக்கு அழுகிற பாவனையில் தன் சிறிய மலரடிகளை மேலே தூக்கி உதைத்தான். இந்த உதையைத் தாங்க முடியாமல், சகடு (வண்டி) திரும்பி விழுந்து அச்சு முறிந்து அசுரனுடன் அழிந்து போயிற்று! இதைச் 'சகடாசுர வதம்' என்று சொல்லுகிறார்கள். நசுக்க வந்தவன் நசுங்கிப் போனான்!

வண்டி முறிந்த ஓசை கேட்டு ஓடிவந்தார்கள் யசோதையும் தோழிகளும். காலை நிமிர்த்துக் கண்ணன் உருளும் சகடம் உதைத் தருளிய லீலையை அவர்களால் எப்படிப் புரிந்துகொள்ள முடியும்? 'ஐயோ, என்ன விபத்து!' என்று அஞ்சினார்கள். 'பிள்ளை தப்பிப் பிழைத்தானே!' என்று அதிசயமும் மகிழ்ச்சியும் அடைந்தார்கள். எல்லாரையும் இரட்சிக்கப் பிறந்தவனுக்கு மறுபடியும் 'ரட்சை' கட்டினாள் யசோதையம்மாள்.

### பிள்ளை வாயில் வையம் ஏழும் கண்டது

யசோதை குழந்தைக் கண்ணனை ஒருநாள் நீராட்டிக்கொண் டிருக்கும்போது, மஞ்சளைக்கொண்டு நாக்கு வழிக்கப் பார்த்தா ளல்லவா? குழந்தையின் திறந்த வாய்க்குள்ளே உலகங்களை யெல்லாம் அப்போது அவள் கண்டுகொண்ட கதையைப் பெரியாழ்வார்,

கையும் காலும்
நிமிர்த்து, கடாரநீர்
பைய ஆட்டிப்
பசுஞ்சிறு மஞ்சளால்
ஐய நாவழித் -
தாளுக்(கு) அங்காந்திட,
வையம் ஏழும்கண் -
டாள்பிள்ளை வாயுளே!

என்ற பாசுரத்தில் வெளியிடுகிறார்.

கண்ணன் மண்ணைத் தின்றபோது, அன்புற்று நோக்கி, 'அடித்தும் பிடித்தும் அனைவர்க்கும் காட்டி'னாள் யசோதை என்ற ஒரு கதையையும் பெரியாழ்வார் குறிப்பிடுகிறார். இதை ஒட்டிப் பாகவதம் கூறும் கதை-விளக்கத்திலே, 'தம்பி மண்ணைத் தின்னுகிறானே!' என்று பலராமன் கூச்சலிட்டதாகவும், யசோதை ஓடிவந்து குழந்தையை வாரி எடுத்துக்கொண்டு 'ஏன் மண்ணைத் தின்னுகிறாய்?' என்று கோபித்ததாகவும், அப்போது கண்ணன் 'அம்மா, நான் மண்ணைத் தின்னவில்லையே' என்று வாயைத் திறந்து காட்டியதாகவும், அப்போது பிள்ளை வாய்க்குள்ளே

யசோதை மண்ணுலகத்தையே கண்டுகொண்டதாகவும் விவரங்க[ள்]
காணப்படுகின்றன.

இந்த அற்புதம் கண்டதும் யசோதை 'ஆயர் புத்திரன் அல்ல[ன்]
அருந்தெய்வம்' என்று நினைத்தாளாம் கண்ணனை. மறுபடி[யு]
கண்ணன் முகத்தைப் பார்த்தாள். 'என் குழந்தைதான் இவ[ன்]'
என்றே எண்ணி முத்தமிட்டாள். ஒவ்வொரு தாய்க்கும் குழந்[தை]
தெய்வம்தான்! ஞானிகளுக்கோ தெய்வமும் குழந்தைதான்!

## வெண்ணெய் திருடிய கள்வன்

கண்ணன் வெண்ணெய் திருடினன் என்ற லீலை மிகவு[ம்]
பிரசித்தமானது. கண்ணனுக்கும் வெண்ணெய்க்கும் நெருங்கி[ய]
தொடர்பு உண்டு என்பதை அறியாதார் இல்லை. எ[ன]
வெண்ணெயையும் வெண்ணெய்போல் உருகும் உள்ளங்களையு[ம்]
கண்ணன் களவாடினன் என்பதும் பிரசித்தம். இன்றும் கண்ண[ன்]
உள்ளம் கவர் கள்வன்தான்!

நடக்கப் படித்தது முதல் காலில் தண்டைகளும் அரையி[ல்]
கிங்கிணிகளும் கலகலவென்று ஒலிக்கக் குறுநடை நடந்தும் ஓடியு[ம்]
போய்க் கண்ணன் வெண்ணெய் திருடத் தொடங்கினனும். தயி[ர்]
பால் முதலிய உணவுப் பொருள்களையும் களவாடத் தொடங்கினு[ம்].
தன் வீட்டில் மட்டுமல்ல, அயல் வீடுகளிலும் வெண்ணெய் திரு[ட]
ஆரம்பித்தான். தன் அண்ணனை பலராமனையும் வேறு சிறுவ[ர்]
களையும் சேர்த்துக்கொண்டு இத்தகைய லீலைகளில் ஈடுபட்டான்.

களவாடிய வெண்ணெய் முதலியவற்றைத் தோழர்களுக்குத்
தாராளமாக வழங்கினன். இந்தத் தோழர் கூட்டத்தில் ஆயச்
சிறுவர்கள் தவிர விலங்கினத் தோழர்களுக்கும் இடமுண்டு என்றும்
கூறுவதுண்டு. பூனை குரங்கு பறவைகள் முதலான தோழர்களுக்கும்
பகிர்ந்து கொடுப்பானும். அன்புக் கண்ணன் எல்லாப் பிராணி[க]
ளுக்கும் தோழனுகத் திகழ்ந்தான் என்றும், இவனுடைய அன்பும்
அழகும் அருளும் மக்களை வசிகரித்ததுபோல் பிராணிகளையும்
வசீகரித்தன என்றும் சொல்லுகிருர்கள்.

ஆய்ச்சிமார் குழந்தைகளுக்கும் பூனைகளுக்கும் எட்டாதபடி
உறிகளில் பால் தயிர் வெண்ணெய் நெய் முதலியவற்றை வைத்திருப்
பார்கள் அல்லவா? கண்ணன் அவர்கள் உறங்கும்போது ஓசைப்படா
மல் போய், பர உரலை உருட்டிப் போட்டுக்கொண்டு அதன்மேல்
எட்டாத வெண்ணெய் முதலியவற்றை எட்டி எடுத்துக்
கொள்வானும். இன்னும் அதிக உயரத்தில் உறியைத் தொங்க
விட்டிருந்தால், கண்ணன் தன் கூட்டாளிகளை ஒருவன்மேல் ஒரு
வனுகச் சுவரைப் பிடித்துக்கொண்டு நிற்கச்செய்து அவர்கள்
மேல் தான் ஏறி நின்று விரும்பிய பொருள்களைக் கவர்ந்து
கொள்வானும்.



ஏறிப் பார்த்தும் எட்டவில்லை என்ருல், கையில் உள்ள
கோலால் பால் வைத்திருந்த சட்டியைத் தொளைத்து விடுவானும்.
பால் ஒரு சிற்றருவியாக விழும்போது கண்ணனும் அவனுடைய
தோழர்களும் அந்தப் பாலருவியைச் சாமர்த்தியமாகத் தங்கள்
வாயில் விழச் செய்துகொள்வார்களாம். உண்டபின், மிகுதியான
பால் முதலியவற்றைத் தரையில் கொட்டி வீணுக்குவதும் உண்டு.
குழந்தைகளின் இயற்கைதானே?

இப்படியெல்லாம் கண்ணனுடைய துஷ்டத்தனங்கள் அதிகரித்து
வந்தன. 'கன்றை அவிழ்த்துப் பசுவிடம் விட்டுவிட்டான்;
அதனுல் எங்களுக்கு இன்று பால் கிடைக்கவில்லை.' என்று சில
ஆய்ச்சிமார் கண்ணன்மீது குற்றம் சாட்டுவார்கள். 'வெள்ளி மலை
போல் குவித்திருந்தோம்; அந்த வெண்ணெய் காணப்படவில்லையே!'
என்று குற்றம் சாட்டுவார் சிலர். உளம் குளிர அமுது செய்தவனே
வெள்ளி மலை போன்ற சிறு பற்கள் இலங்கச் சிரிப்பான். அந்தச்
சிரிப்பிலே கோபிகைகள் கோபத்தை மறந்து போவார்கள்.

'வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளற் பெரும் பசுக்கள்' நீங்காத
செல்வமாக நிறைந்திருந்த ஆய்ப்பாடியில் அணி விளக்காகத்
தோன்றிய கண்ணன் வெண்ணெய் விழுங்கியும் எண்ணெய்க்
குடத்தை உருட்டியும் பானையில் பாலைப் பருகியும் லீலைகள் புரிந்து
வந்தது குறித்து, 'என் வீட்டில் அப்படிச் செய்தான்; அவள் வீட்டில்
அப்படிச் செய்தான்; இவள் வீட்டிலும் வெண்ணெய்த் திருடன்
புகுந்துவிட்டான்' என்றெல்லாம் ஆய்ச்சியர் தங்கள் யசோதைப்
பிராட்டியிடம் போய் முறையிட்டுக் கொண்டார்கள். 'ஏன்
வெண்ணெய் திருடினுய் எங்கள் வீட்டிலே என்று கேட்டால்,
கண்ணைப் புரட்டி விழிக்கிருன்' என்றும் சிலர் புகார்
செய்தார்கள்.

'அதோ அந்த வீட்டிலே வெண்ணெய் திருடிக் கொண்டிருக்
கிருன்!' என்று ஆய்ச்சி ஒருத்தி முறையிட்டுக் கொண்டிருக்க,
'இதோ தூங்கிக் கொண்டிருக்கிருனே அவன்' என்று யசோதை
பிள்ளையைக் காட்டிவிடுவாள்! அங்கே வெண்ணெய் விழுங்கிய
வண்ணம் இங்கே விரைந்து உறங்கிக் கொண்டிருக்கும் அதிசயம்
கண்டு ஆய்ச்சி வாய் இழந்து திரும்புவாள். திரும்பியவளைக்
கண்ணன் அங்கே எதிர்ப்பட்டுக் கணகணவென்று சிரித்துக்
கொண்டே போய்விடுவான்!

## கையும் களவுமாய்

'தித்தித்த பாலும் தடாவினில் வெண்ணெயும் மெத்தத் திரு
வயிறு ஆர விழுங்கி'யதால் வெண்ணெய் நஷ்டமாகிவிட்டதே
என்ற கவலை யசோதைக்கும் இல்லை, மற்ற ஆய்ச்சிமாருக்கும் இல்லை.
அவ்வளவு வெண்ணெயும் ஜீர்ணமாக வேண்டுமே என்பதுதான்
அவர்கள் கவலை. ஆனுல் அந்த ஜீர்ணசக்தியை யார்
அறிவார்?

வெண்ணெய் உண்டது போல் மண்ணையும் உண்ட மனப்பான்மையைத்தான் யசோதை அறிவாளா?— ஆய்ச்சியர்கள் அறிவார்களா? கள்ளனைக் கையும் களவுமா பிடித்துக்கொள்ள முடியவில்லையே என்றும் அவர்கள் கவ பட்டார்கள்.

பலநாள் திருடியவன் ஒரு நாள் பிடிபட்டான் என்பது கண்ணனும் கையும் களவுமாக அகப்பட்டுக் கொண்டானும். கொடுத்த வெண்ணெயை உண்பதைக் காட்டிலும் தாய்க்கு தெரியாமல் உறியிலிருந்து திருடி உண்பதில் விருப்பம் கொ டிருந்த கண்ணன் ஒரு நாள் அன்புத் தாயிடம் அகப்பட் கொள்ள வேண்டும் என்றும் தீர்மானித்துவிட்டானும்.

'என் மகனுவது, திருடுவதாவது, சுத்தப் பொய்! வெண்ணெ காணப்படவில்லை யென்ருல் கண்ணன் மீதுதானு பழி சும வேண்டும்?' என்று சொல்லிக் கொண்டிருந்த பெரிய ஆய் 'கண்ணு! என் கார்முகிலே! நீ வெண்ணெய் திருடினுயா, என் என்று கண்ணனையே கொஞ்சிக் கேட்பதும் உண்டு. அதற் கள்ளக் கிருஷ்ணன் சிரித்துக்கொண்டு, 'நானுவது, திருடுவதா அவர்களே என்பொருளைத் திருடி வைத்துக் கொண்டிருக்கிருர்க என்று பதில் சொல்லுவான். சொல்லிக்கொண்டே ஓடிப் போ விடுவான், வேருெரு வெண்ணெய்த் திருட்டுக்காக!

தாயின் அன்புப் பாசத்திற்குக் கட்டுப்பட வேண்டும் என் கண்ணன எண்ணமும் ஒரு நாள் நிறைவேறுகிறது. நிறைவேரு எப்படி இருக்க முடியும்? வெண்ணெய்க் குடத்தில் கையிட் அளைந்து எடுத்து வெண்ணெய் உண்டுகொண்டிருந்த கண்ண யசோதை பார்த்து விடுகிருள். ஓடி வருகிருள் அழகிய ஒரு சி தாம்புக் கயிற்றுடன். அடிப்பதற்குக் கூசி நிற்கும் அந்த நிலை அவளை வெண்தயிர் தோய்ந்த செவ்வாயுடன் மேல் நோக்கி பார்க்கிருன் கண்ணன்.

அழுகை வந்துவிடுகிறது. தாயை அஞ்சி நோக்குகிரு அழகிய சிவந்த சிறிய வாய் துடிக்கிறது. அழுதுகொண்டே தொ கிருனும் அன்னையை. யசோதையின் நிலைதான் என்ன இப்போது உடன் இருந்து உற்று நோக்கியதுபோல் இந்தக் காட்சியைப் பா கிருக்கிருர் குலசேகராழ்வார்:

முழுதும் வெண்ணெய்
அளைந்துதொட்(டு) உண்ணும்
முகிழ்இள ஞ்சிறுத்
தாமரைக் கையும்,

எழில்கொள் தாம்புகொண்(டு)
அடிப்பதற்(கு) எள்கு



நிலையும், வெண்தயிர்
தோய்ந்த செவ்வாயும்,

அழுகையும், அஞ்சி
நோக்கும்அந் நோக்கும்,
அணிகொள் செஞ்சிறு
வாய்நெளிப் பதுவும்,

தொழுகையும் இவை
கண்ட அசோதை
தொல்லை இன்பத்(து)
இறுதிகண் டாளே!

பரமபத இன்பத்தைப் பூலோகத்தில் அனுபவிக்கிருளே யசோதை என்று தேவகி புலம்பியதாகப் பாடுகிருர் குலசேகரர்.

வேருெரு சமயம் கண்ணன் தயிரைக் களவாடி உண்ணும்போது யசோதை கண்டு ஒரு சிறிய கோலுடன் விரைந்து வருகிருளாம். உடனே கண்ணன் அவளைக்காட்டிலும் விரைந்தோடிப் போய்த் தயிருண்ட வாயைத் துடைத்துக் கொள்கிருனும். இந்தக் காட்சியைக் காணும் ஆழ்வார் ஒருவர், 'தாய் எடுத்த சிறு கோலுக்கு உளைந்து ஓடி, தயிர் உண்ட வாய் துடைத்த மைந்தன்' என்று கண்ணனைப் பாடியிருக்கிருர்.

ஆனல் வாயைச் சரியாகத் துடைத்துக் கொண்டானு? களவுக்குச் சான்று மறைந்துவிட்டதா? தயிரை மறைப்பதாகத் துடைத்துக்கொள்ளத் தொடங்கி-முகம் முழுதும் பூசிக்கொண்டான் என்பது குறிப்பு.

உரலில் கட்டுண்டது

வேருெரு சமயம் கண்ணனுடைய விரல்களிலும் வாயிலும் தோய்ந்திருந்த வெண்ணெய் கண்டு பெரிய ஆய்ச்சி, 'அப்படியா செய்தி? இவ்வளவு வெண்ணெய் சாப்பிட்டால் எப்படி ஜீரணமாகும்? பார், உன்னைத் தண்டிக்கப் போகிறேன்' என்று சொல்லிக் கொண்டே பிள்ளையை ஒரு மர உரலோடு சேர்த்துக் கட்டி விடுகிருள்.

இந்தப் பிள்ளையோ 'எனக்கும் ஜீரணம் ஆகாதா?' என்று கத்துவதும் ஏங்குவதுமாக இருக்கிருன். அயல் வீட்டுப் பிள்ளைகள் வந்து வேடிக்கை பார்க்கிருர்கள். கண்ணனுக்கும் இது ஒரு வேடிக்கை போலவே இருக்கிறதாம். வெட்கம் இல்லை; கொஞ்சம் முகம் வெளுத்திருந்ததும் வெண்ணெயினுல்தான்!

இந்தக் கிருஷ்ணலீலையைப் பொய்கையாழ்வார் பாடுகிருர்:

விரலோடு வாய்தோய்ந்த
வெண்ணெய் கண்(டு) ஆய்ச்சி

உரலோ(டு) உறப்பிணித்த
நான்று - குரல் ஒவா(து)
ஏங்கி, நினைந்(து) அயலார்
காண இருந்திலையே?
விங்(கு) ஓத வண்ணா!

உரை.

வெண்ணெயை விரல்களால் அள்ளியெடுத்து வாயில் போட் கொண்டபோதே யசோதை கண்டு கண்ணனைப் பிடித் கொண்டாளாம். அப்பொழுதும் அந்த வெண்ணெய் தோய் வாயினாலேயே, 'நான் திருடவில்லை!' என்றான் கண்ணன். 'திரு தோடு பொய்யும் சொல்லுகிறாயா?' என்று ஒரு பெரிய உரலே கட்டி வைத்தாள். வெறுமனே கயிற்றில் கட்டினால் துஷ்டப்பிள் அறுத்துக்கொண்டு போய்விடுவானே என்றுதான் அப்ப செய்தாளாம்.

நெடு நேரம் ஏங்கி ஏங்கி அழுது கொண்டிருந்தான். போதும் 'நான் திருடவில்லை; அம்மா, நான் திருடவே இல் என்றுதான் கத்திக்கொண் டிருந்தானும். அதே சமயத்தில் 'இ னும் எங்கே திருடலாம்? எப்போது, எப்படித் திருடலாம்?' என நினைத்துக் கொண்டிருந்தானும்.

அந்த நிலையில் எத்தனையோ ஆய்ச்சிமார் வந்து வ வேடிக்கை பார்த்துப் போனார்களல்லவா? அவர்களை நோக்கி, 'நா திருடவில்லை; நீங்களே என் உடைமையைத் திருடுகிறீர்கள்!' என் னும். ஆம்; 'என் பொருளை நான் எடுத்துக்கொண்டேன்!' எ பது கண்ணன் மனநிலை. எல்லாம், உடையவன் உடைமைதா

பொய்கையாழ்வாரும் இந்தக் காட்சியைப் பார்க்கிறார்; ஆன வேடிக்கையாகப் பார்க்கவில்லை. 'கண்ணா! நீயும் களவு செய்தாய கயிற்றினால் கட்டப்பெற்றாயா? கட்டு அவிழ்க்கத் தெரியாமல் அ தாயா? கண்ணா! கடல் வண்ணா! உரைப்பாய்' என்று பரிந்து கே கிறார். பக்திக் கயிற்றால் உள்ளம் கவர் கள்வனைக் கட்டிவைக்க மு யும் என்பது குறிப்பு.

## மரங்களுக்கும் அருள் புரிந்தான்!

யசோதை கண்ணனை வயிற்றிலே கயிற்றால் கட்டியிருந்ததால் கண்ணனுக்குத் தாமோதரன் என்ற ஒரு பெயரும் ஏற்பட்டது. கண்ண பிரானின் எளிமையைப் புலப்படுத்தும் பெயர்களில் இதுவும் ஒன்று இத் தாமோதரனின் எளிமை அன்னை சுற்றத்தார் அயலார் என் வேற்றுமையின்றி அனைவர்க்கும் அருள்பொழிய வல்லது என்பதற்கு உரலோடு கட்டுண்டிருந்த கண்ணன் நிகழ்த்திய ஓர் அற்புதமு சான்றாகக் காட்டத் தக்கது.



உரலில் கட்டிவைத்த
யசோதை புறக்கடையில் கண்ணனை உள்ளே போய்விட்டாள். கண்
பின், வீட்டு வேலைகளைக் கவனிக்க பிறருக்கு அருள்புரியும்
ணனும் தன் வேலைகளில் ஈடுபடலானான்.
வேலைகளில் ஈடுபடத்தானே கண்ணன் பிறந்திருக்கிறான்?

இப்போது கண்ணன் அழுகையை நிறுத்திவிட்டான். உரலையும் இழுத்துக்கொண்டே தவழத் தொடங்கினான். பக்கத்திலிருந்த இரட்டை மருத மரத்தின் இடையே குழந்தை சென்றதும், உரல் குறுக்காக நின்றுவிட்டது. அதற்காகக் கண்ணன் நின்றுவிடப் போகிறானா?

அந்த நிலையிலும் கண்ணன் முன்னேறிச் சென்றுகொண்டே
போய்விட்டான்.
யிருந்ததால் உரலையும் இழுத்துக்கொண்டே
என்ன அதிசயம்!
அதனால் மரங்கள் இரண்டும் முறிந்துவிட்டன.
மரங்களும் முறிந்தன; குபேர புத்திரர்களின் சாபமும் முறிந்தது!
அந்த மரங்கள் உண்மையில் மரங்கள் இல்லை; மதுபான மயக்கத்
திால் நாணம் இன்றி மரம்போல் இருந்துவிட்டு. நாரதரின் சாபத்
தால் மரங்களே ஆகிவிட்ட நளகூபன் மணிக்கிரீவன் என்ற
இருவருமே!

இந்தக் கதையைக் குறிப்பிடும் பொய்கையாழ்வார், உலகளந்த
உத்தமனே இப்படியும் ஒரு பால லீலை செய்து அசுரத் தன்மை
யோடு மரம்போல் இருந்தவர்களுக்கும் அனுக்கிரகம் செய்தான்
என்று குறிப்பாகக் கூறுகிறார். சாபத்தால் குபேர புத்திரர்கள் மருத
மரங்கள் ஆனதும், இம்மரங்களில் கம்சனால் ஏவப்பட்ட இரண்டு
அசுரர்கள் ஆவேசித்துக் கிடந்தனர் என்றும் புராண கதை ஒன்று
உண்டு. 'பொய்ம் மாய மருதான அசுரரை' என்பது பெரியாழ்வார்
வாக்கு.

ஊரெல்லாம் காண உரலில் கட்டுண்டு கிடந்து 'விண்ணெல்
லாம் கேட்க' அழுது சாகசம் செய்த பிள்ளை, உரலையும் இழுத்துக்
கொண்டுபோய் 'எண் திசையோரும் வணங்க' 'ஒருங்கு ஒத்த இணை
மருதம்' என்ற அந்த இரட்டை மருதத்தினிடையே தவழ்ந்து போய்
'பொய்ம் மாய' அசுரரை முடித்து நாரத கோபத்தால் சாபத்திற்கு
உட்பட்டிருந்தவர்களுக்கும் விமோசனம் அருளினான் என்ற கதை
பக்தருலகத்தை எவ்வளவு காலம் பரவசமாக்கி வந்திருக்கிறது!
இதில் கண்ணபிரானுடைய கருணை குபேர புத்திர் அசுரர் மரங்கள்
என்ற வேற்றுமை பாராட்டாது எல்லோருக்கும் கதியளிக்க வல்லது
என்ற பாடத்தை விரும்பியவர்கள் கற்றுக் கொள்ளலாம்.

## கன்றினால் விளாமரத்தை வீழ்த்தியது

கம்சனால் ஏவப்பட்ட அசுரர்களில் ஒருவன் விளாமரமாக நின்று,
கண்ணன் தனக்குக் கீழே வரும்போது மேலே விழுந்து கொன்று
விடுவதாக எண்ணியிருந்தானும். வேறொரு அசுரன் கண்ணனை
முட்டிக் கொல்ல வேண்டுமென்று ஒரு முரட்டுக் கன்றின் வடிவம்

கொண்டு ஓடிவந்தான். கன்றால் துரத்தப்பட்ட கண்ணன் வி மரத்தை அடைந்ததும் இரண்டு சூழ்ச்சிக்காரர்களும் கம்சனுடை நோக்கம் எளிதில் நிறைவேறிவிட்டதாகவே துஷ்ட குதூக கொண்டனர், தங்கள் உள்ளத்திலே. கன்று முட்டிக் கொ முற்பட்ட அதே சமயத்தில் விளாமரம் விழுந்து கொன்று கொ போட்டியில் கம்சனிடம் பரிசு பெற விரும்பியதாம். ஆ நடந்ததென்ன?

கண்ணன் கன்றைப் பின்னிரண்டு கால்களையும் தூக்கிப்பிடித்து சுழற்றி விளாமரத்தின் மேல் வீசுகிறான். இரண்டு அசுரர்களு உருக் குலைந்து அசுரவடிவத்துடன் விழுந்து இறந்து போகிறார்க முள்ளை முள்ளால் களைவதுபோல் இரண்டு அசுரர்கள் அநாயாசம வதஞ் செய்யப்பட்டார்களாம் இந்தத் திருவிளையாட்டினை காட்டிலே விளாங்காய் உதிரக் கன்றுகொண்டு எறிந்து நி லீலையைப் பெரியாழ்வாரும் குறிப்பிடுகிறார். கன்றால் விளாங்க உதிர்த்த திருவிளையாடல் என்று பிறரும் இந்த லீலையை குறிப்பிடுகிறார்கள்.

## கொக்கின் வாய் கிழித்தது முதலியன

பகன் என்னும் ஓர் அசுரன் கொக்கு வடிவம் கொண் கண்ணனைக் கொல்ல வர, அந்தப் பறவையின் வாய் அலகுகளை கிழித்துக் கண்ணன் அந்த அசுரனை அழித்து ஒழித்தான் என் கதையையும் பெரியாழ்வார் குறிப்பிடுகிறார். இந்தப் பகாசுரன் வேறு பாரதத்தில் பீமனால் கொல்லப்படும் பகாசுரன் வேறு.

அகாசுரன் என்பவனும் கண்ணனால் வதஞ் செய்யப்படுகிறான் இவன் மலைப்பாம்பின் உருவம் கொண்டு ஆயச்சிறுவர்களையு கன்றுகளையும் விழுங்கினானாம். கண்ணன் தானும் பாம்பின் வாய்க்குள் புகுந்து தன் திருமேனியைப் பெருக்கிக்கொள்ளவே பாம்பு வயிறு வெடித்து இறந்து போயிற்றாம். பிறகு கண்ணன் கன்று களையும் சிறுவர்களையும் காப்பாற்றி வீடுகளில் கொண்டுபோய் விட்டான் என்பது கதை.

பிள்ளைகளும் கன்றுகளும் விழுங்கப்பட்டதும், 'எங்கள் பிள்ளை கள் எங்கே என்று தாய்தந்தையர் கேட்டால் நான் என்ன பதில் சொல்லுவேன்?' என்று உருகியதாம் கண்ணனின் உள்ளம். 'கன்று களை இழந்த பசுக்கள் என்னைக் கண்டு தீனக் குரலில் கத்துமே அந்தக் குரலை என்னால் பொறுக்க முடியாதே!' என்றும் உருகியதாம் கண்ணனின் கருணையுள்ளம்.

கேசி என்ற அசுரன் ஒருவன் குதிரையுருவத்தில் கண்ணனால் வதைக்கப்பட்டதாகவும் ஒரு கதை உண்டு. எருது வடிவம் கொண்டு வந்த அரிஷ்டன் என்ற அசுரனை வதைத்ததாகவும், கழுதை வடிவம் கொண்டு வந்த தேனுகன் வதைக்கப்பட்டதாகவும் கதைகள் உண்டு. பிரலம்பன் என்ற அசுரனைப் பலராமன் கொன்றொழித்த கதையும் திவ்யப் பிரபந்தத்தில் பிரஸ்தாபிக்கப் படுவதைக் காண்கிறோம்.



## காளியன் உச்சியில் நடம் புரிந்தது

ஐந்து வயது நிறைந்துவிட்டது கண்ணனுக்கு. தோழர்களுடன் கன்றுகளை யமுனைக்கு அருகில் மேய்த்துக் கொண்டிருந்தான். ஆனி மாத வெயில்; சூரியன் உச்சிக்கு வந்துவிட்டது. சிறுவர்களுக்குத் தாகம் பொறுக்க முடியவில்லை. கண்ணன் கன்றுகளை ஓட்டிக் கொண்டு ஒருவரும் சஞ்சரியாத வழியொன்றில் போவது கண்டு, மற்றைப் பிள்ளைகள் 'அந்த வழியில் ஆபத்து இருப்பதாகக் கேள்விப் பட்டிருக்கிறோம்' என்று எச்சரிக்கை செய்தார்கள்.

'அது என்ன ஆபத்து?' என்று கண்ணன் கேட்க, 'யமுனை ஆற்றில் அங்கே ஒரு மடு இருக்கிறது. அந்த மடு முழுவதையும் காளியன் என்னும் ஐந்தலைப் பாம்பு விஷத்தைக் கக்கி அசுத்தப் படுத்திக் கொதிப்படையவும் செய்திருக்கிறது' என்று பதில் கிடைத்தது. அதற்குக் கண்ணன், 'அப்படியானால் அந்தத் துஷ்ட நாகத்தைத் தண்டிக்க வேண்டும்' என்று அதே வழியில் அவர் களையும் அழைத்துக்கொண்டு போனான்.

காளியன் மடுவில் குடும்பத்துடன் வசித்துக் கொண்டிருந்தது என்பதையும் கண்ணன் அறிந்துகொண்டான். மடு ஓரத்தில் கடம்ப மரம் ஒன்று இருந்தது. மேலாடையை இடையில் இறுகக் கட்டிக் கொண்டு அந்த மரத்தின் மேல் ஏறினான் கண்ணன். 'ஐயோ! நந்த குமாரா!' என்று அலறினார்கள் தோழர்கள். கண்ணன் மடுவில் குதித்து விட்டான். தோழர்கள் ஏங்கி நின்றார்கள். மடு கலங்கித் தண்ணீர் பொங்குகிறது. பெருஞ்சத்தம் கேட்கிறது. கண்ணனை இறுகக் கட்டிவிடுகிறது அந்த ராட்சசப் பாம்பும். தோழர்கள் நடு நடுங்கிப் போகிறார்கள். கன்றுகளும் கதறுகின்றன.

ஆனால் அந்தப் பாம்பினால் கண்ணனைக் கடிக்க முடியவில்லை. பாம்பு வேதனையுடன் கண்ணனை விட்டுவிடுகிறது. ஒரு கணம்; எனினும் அடுத்த கணத்திலேயே ஐந்து படங்களையும் விரித்துச் சீறிக்கொண்டு வருகிறது. கண்ணன் பாய்ந்து அந்தப் படங்களின் மேல் ஏறிக்கொள்கிறான். அது மறுபடியும் தன்னை வாலால் பிணித்து விடாமல் அந்த வாலைக் கையிலே பிடித்துக் கொள்கிறான்.

காளிய நடனம் ஆரம்பமாகிவிட்டது. ஆம்; கண்ணன் காளியன்மீது கூத்தாடுகிறான். இராட்சசப் பாம்பு நடுங்கி ஒடுங்கி வலியடங்கிப்போக, கண்ணன் அதற்கு உயிர்ப்பிச்சை கொடுத்து, 'நீ குடும்பத்தோடு இம்மடுவை விட்டு வெளியேறிவிட வேண்டும்' என்று கட்டளையிடுகிறான். இந்த லீலையைக் 'காளியமர்த்தனம்' என்றும் கூறுவதுண்டு.

'ஆய்ச்சிமார்களும் ஆயரும் அஞ்சிடப் பூத்த நீள் கடம்பு ஏறி' என்று ஆண்டாள் கூறுவதால், கண்ணனுக்கு வந்த ஆபத்தைக் கேள்விப்பட்டு நந்தகோபன் முதலான ஆயர்களும் யசோதை உள்ளிட்ட ஆய்ச்சிமாரும் மடுக்கரைக்கு வந்து அஞ்சிக் கண்ணீர் வடித்தார்கள் என்று ஊகிக்கலாம். இந்த மடுவைத் 'தாமரைப்

பொய்கை' என்று கூறுவதும் உண்டு. 'விடம்படு நாகத்தை
பற்றி ஈர்த்துப்பட்டம்படு பைத்தலை மேல் எழப் பாய்ந்திட்டு' மேனி
அசைத்துக் கண்ணன் காளிய நடனம் புரிந்ததைப் பெரியாழ்வா
குறிப்பிடுகிறார்; 'நீள் முடி ஐந்திலும் நின்று நடம் செய்த' இ
அற்புத லீலையை ஆண்டாளும் குறிப்பிடுகிறாள்.

கண்ணனின் அந்தச் செயற்கருஞ் செயலைக் கண்ணுரக் க
'இவன் என் பிள்ளை! தெய்வம் அல்லவா?' என்று அதிசய
யசோதை கரையேறிய கண்ணனைக் கட்டியணைத்து முத்தமிட்
கொண்டதும், அந்தத் தாயன்பிலே கண்ணனின் தெய்வ நிலை
முற்றும் மறந்துவிடுகிறாள். கண்ணனின் அருளால் மடுவின்
விஷம் நீங்கி அமிர்தம்போல் ஆகிவிடுகிறது. 'இப்படித் தீமை
அடக்கி ஆளுகிறது இறைவனது சக்தி!' என்று முனிவர்
அதிசயிக்கிறார்கள். விண்ணவர்கள் களிகூர்ந்து, 'இனி அதர்
முற்றும் நசிப்பது திண்ணம்' என்று இன்பக் கூத்தாடுகிறார்கள்.

### பிருந்தாவனத்திலே

ஆயர்பாடியில் கண்ணன் தோன்றிய நாள் முதல் சீ
செல்வமும் செழிப்பும் அதிகரித்து வந்ததுபோல் ஆபத்துக்க
அதிகரிக்கின்றனவே என்று நந்தகோபரும் யசோதையும் கவ
பட்டார்களாம். பூதனை என்ற பேய்ப் பெண் வதமானதும், சக
முறிந்துவிழுந்ததும்,மருத மரங்கள் முறிந்துவிழுந்ததும் ஆகிய நிகழ்
களை அவர்களால் மறக்க முடியவில்லையாம்; ஆனால் தங்களுடை
அன்புமிகுதியாலும் பகவானுடைய மாயையாலும் கண்ணனுடை
தெய்வ சக்தியை மறந்துவிட்டார்கள்.

கோவர்த்தன கிரிக்கு அருகில் யமுனையாற்றங் கரை
பிருந்தாவனம் என்ற காடு இருப்பதை அவர்கள் நன்ருக அறிவார்க
அங்கே புல்லாந்தரைகளும் மரங்களும் செடி கொடிகளும் நீரோ
களும் சிறு குன்றுகளும் இருப்பதாகவும் அறிவார்கள். அ
இடத்தில் அவர்கள் மாடு கன்றுகளுடன் போய்த் தாற்காலிகமா
குடியேற விரும்பினார்கள். வண்டிகளில் சாமானை ஏற்றிக்கொண்
அங்கே போய்ச் சேர்ந்து, 'இது நமக்கு ஆடுமாடுகளை மேய்
மிகவும் வசதியுள்ள இடம்' என்று ஆயர்கள் மகிழ்ச்சியடைந்தார்க
கண்ணனும் பலராமனும் தோழர்களுமோ, 'நாம் விளையாடுவதற்
இங்கே நல்ல நல்ல இடங்கள் இருக்கின்றன' என்று பூரித்
போனார்கள்.

கண்ணன் வளர்ந்த பிருந்தாவனத்திலே அழகும் வளர்ந்தது;
மும் அதிகரித்தது. பசுக்கள் நல்ல ஊட்டம் பெற்றுக் குடங்கு
மாய்ப் பாலைச் சொரிந்து கொடுத்தன. மயில்கள் ஆடக் குயில்க
பாடக் கன்றுகள் துள்ள, சிறுவர்களும் துள்ளி விளையாடினார்க
ஓடினார்கள்; ஆடினார்கள்; பாடினார்கள். ஆயர்கள் மாடு மேய்
சிறுவர்கள் கன்றுகளை ஆனந்தமாக மேய்த்தார்கள். பிருந்தாவன



ன் மலைச்சாரல்களில் மாடு கன்றுகளை மேயவிட்டுக் கண்ணன்
லராமனுடனும் வேறு பிள்ளைகளுடனும் விளையாடிக் கொண்
ருப்பான்.

இந்த நிலையில்தான் கன்றுக வந்த அசுரனும், விளாமரமாக
ன்ற அசுரனும், கொக்கு வடிவில் வந்த கொடியவனும், மலைப்பாம்பு
டிவில் வந்த அசுரனும் வதஞ்செய்யப் பட்டார்களாம். பிருந்தா
னத்தில் ஆயர்கள் குடியேறி யிருக்கும்போது தான் எருது வடிவம்
காண்ட அசுரன், கழுதை வடிவம் கொண்டவன் முதலானவர்
ளும் வதஞ் செய்யப்பட்டார்களாம். பிரலம்பன் என்ற அசுரனைப்
லராமன் வதைத்ததும் பிருந்தாவனத்திலே நிகழ்ந்ததுதான்
ன்பர்.

### காட்டுத் தீயை விழுங்கியது

கன்றுகள் ஒரு நாள் புல் மேய்ந்துகொண்டு ஒரு நாணற்காட்டை
அடைந்தன. அங்கே தீப்பிடித்தது. அது காட்டுத் தீ ஆகிப் பரவி
விட்டது. தீயும் புகையும் கன்றுகளையும் சிறுவர்களையும் சூழ்ந்து
காண்டன. 'கண்ணா! என்ன செய்வோம்? வெப்பம் தாங்க முடிய
வில்லையே' என்று கதறினார்கள். 'புகையால் கண்ணையும் விழிக்க
முடிய வில்லையே' என்று அலறினார்கள். அது கேட்ட கண்ணன்,
ங்கள் கண்களை நன்ருக மூடிக்கொள்ளுங்கள்' என்று ஆலோசனை
சான்னான்.

'கண்களை மூடிக்கொண்டால் அபாயம் நீங்கிவிடுமா?' என்று
அவர்கள் வாதம் செய்யாமல் கண்ணனை நம்பிக் கண்களை மூடிக்
காண்டார்கள். அவர்கள் விழித்துப் பார்க்கும்போது காட்டுத் தீ
அணைந்துபோயிருந்தது.கண்ணன் தீயைவிழுங்கிவிட்டானாம். அந்தப்
பெருந்தீயை அதன் சுவாலைகளோடும் புகையோடும் பானம் செய்து,
சிறுவர்களையும் கன்றுகளையும் ஆலமரத்தடியில் கொண்டுசேர்த்துக்
காப்பாற்றிவிட்டானாம். எல்லாம் ஆகிய இறைவன் 'காண்கின்ற
வெந்தீ எல்லாம் யானே!' என்று சூறைக்காற்றால் அங்கும் இங்கும்
ரவிக் கொண்டிருந்த காட்டுச் செந்தீயை மொண்டு விழுங்கிய
ந்த லீலையில் ஆழ்வார்களும் ஈடுபடுவதைக் காண்கிறோம்.

### ததிபாண்டன் கதை

கண்ணன் ஒரு நாள் யசோதை தனக்குப் பால் கொடுக்க
வில்லை என்று வெகுண்டு, தயிர்த்தாழிகளை உடைத்தெறிந்து
ட்டு, தன்னை அடிக்கக் கோல் எடுத்து வந்த அவளுக்கு அகப்
படாமல் ததிபாண்டன் என்பவனுடைய வீட்டில் ஒளித்துக் கொண்
டானாம். கண்ணனது தெய்வ நிலையை எப்படியோ உணர்ந்து
கொண்டிருந்த ததிபாண்டன் இந்த இளம்பிள்ளையின் காலைக்
கட்டிக்கொண்டு 'எனக்கு முத்தியளிக்க வேண்டும்' என்றானும்.
கண்ணனோ 'என் காலைவிடப்பா! அம்மா அடிக்க வருகிறாள்' என்று
ததிபாண்டனை வேண்டிக்கொண்டானும்.

'நீ எனக்கும் என் தயிர்த்தாழிக்கும் பரமபதம் கொடுக்க... இல்லாவிட்டால் நான் உன் காலே விடாமல் யசோதை... காட்டிக் கொடுப்பேன்!' என்று ததிபாண்டன் உறுதியாகச்... விட்டான். கண்ணனும் அவன் வேண்டுகோளுக்கிணங்க... புரிந்து, அம்மையிடம் அகப்பட்டுக் கொள்ளாமல் தப்பிவி... என்பது ஒருகதை.

### மாடு கன்றுகள் மேய்த்ததன் உட்பொருள்

இப்படி யெல்லாம் கோகுலத்திலும் பிருந்தாவன... கண்ணன் நிகழ்த்திய திருவிளையாடல்கள் குறித்து எத்தனை... கதைகள் வழங்கி வருகின்றன. பகவானுடைய லீலைகள் அன... கண்ணனுடைய திருவிளையாடல்களும் அப்படியே. இது பக்த... மனநிலை. இந்த லீலைகளில் கோல் கைக்கொண்டு காலில் ச... கள் ஆரவாரிக்க அண்ணனுன பலதேவன் பின் ஓடிப்போய்... நினங்களையும் மாடுகளையும் மேய்த்துத் திரிந்த திருவிளையா... பெரியோருள்ளம் பெரிதும் ஈடுபட்டிருப்பதைக் காண்கிறோம்.

மறைக்கு முன்னே காணும் திருவடிகளை மாடுகன்றுக... பின்னே காணலாம் என்றும், மறைகளுக்கு மறைந்து வந்... காட்டிலே மாடு மேய்த்தான் என்றும் கூறிக் கடவுளின் எளிமை... வற்புறுத்துகிறது இத் திருவிளையாடல் என்று உட்பொருள் க... துண்டு. 'இட்டமான கன்றுகளை இனிது மறித்து நீரூ... விளையாட்டிலும், 'கறவைகள் பின் சென்று கானம் சே... உண்ணும்' லீலையிலும் ஆண்டாள் பரமாத்மாவுக்கும் ஜீவாத்ம... கும் இடையே உள்ள தொடர்பை நினைவூட்டிக் கொள்கிருள்.

★

கண்ணனுடைய விளையாடல்களைத் தீராத விளையாட்டு... கூறுவதுண்டு, ஏசப்போகிறீர்களே! தெரியாதா? தெரிந்தும்... படிச் செய்வானேன்? இந்தக் கவலை இவனுக்கு இல்லை— இந்தத் தீராத விளையாட்டுப் பிள்ளைக்குத்தான். இந்தத் தீராத... யாட்டால் ஆய்ச்சிமாருக்கும் பிறருக்கும் ஓயாத தொல்லை ஏற்... தாகவும் கவிகள் பாடியிருக்கிருர்கள். ஓயாத தொல்லை... தெவிட்டாத இன்பமும் அடைந்தார்களாம் கோகுலத்திலும் பி... வனத்திலும் உள்ளவர்கள்.

ஏதோ ஒரு காலத்தில் கோகுலத்திலே, பிருந்தாவனத்... நடந்ததுதானு கண்ணன் விளையாட்டு? 'கடவுளின் அறக்க... யும் விளையாட்டே, மறக்கருணையும் விளையாட்டே!' என்ற எவ்... பெரிய தத்துவத்தை எவ்வளவு எளிமையாகவும் வேடிக்கையா... வெளியிடுகிறது கள்ளக் கிருஷ்ணனின் விளையாட்டு! தீராத... லும் இருக்கிறதல்லவா?

# 6. விளையாட்டே உலகத் தொண்டு!

ஒரு நாள் கண்ணனும் பலராமனும் தங்கள் தோழர்களுடன் ...ற்றங்கரையில் பசுவின் கன்றுகளை மேய்த்துக்கொண் டிருந்தார் ...ள். திடீரென்று கன்றுகளைக் காணவில்லை. 'என்ன அதிசயம் ...து?' என்று பலராமன் கண்ணனிடம் சொல்லிக்கொண் டிருக்கும் ...பாதே, தோழர்களும் மறைந்துவிட்டார்கள்! கண்ணன் சற்று ...ஆலோசித்தான். 'படைப்புக் கடவுளான பிரமன் இவர்களை யெல் ...ாம் மறைத்து வைக்கிருன்' என்று தெரியவந்தது.

### பிரமனும் பரமனும் (பிரமன் கர்வபங்கம்)

தன் விளையாட்டைப் பார்க்க ஆசைப்பட்டுத்தான் பிரமன் அப் ...டிச் செய்திருக்கிருன் பிறகு மயக்கமும் செருக்கும் கலந்து கொண் ...ன, என்பது பரமனுகிய கண்ணனுக்குத் தெரியாததா? மாலைப் ...பொழுதானதும் கண்ணன் அண்ணனை நோக்கி, 'நாம் மட்டும் ...வீட்டுக்குத் திரும்பினல் நியாயமாயிருக்குமா?' என்று கேட்டான். அதற்குப் பலராமன் 'நாமும் போகாவிட்டால் நியாயமாகி விடுமா?' ...என்று எதிர்க்கேள்வி யொன்று கேட்டான்.

இருவரும் அங்குமிங்கும் ஓடித்தேடிப் பார்த்தார்கள். தோழப் பிள்ளைகளும் கன்றுகளும் அதிசயமாகக் கிடைத்துவிட்டார்கள். பிரமன் அவர்களைத் தன் மாயையால் மறைத்து வைத்திருந்தும், அவர்கள் எப்படிப் பலராமனையும் கண்ணனையும் தொடர்ந்து ...போகிருர்கள்?

பரமனது மாயை பிரமனது மாயையை வென்றுவிடுகிறது. கண்ணனுடைய மாயையால் தோன்றிய தோழர்களும் கன்று களுமே இவர்கள்! தோற்றம் தொழில் குரல் குணம் முதலிய அம்சங் களில் ஒரு மாறுபாடும் தெரியவில்லை. ஆடைகளிலும் ஆபரணங் களிலும் நடை பாவனை முதலியவற்றிலும் வேறுபாடு சிறிதும் காணப் படவில்லை. கண்ணன் தன் மாயையால் தானே தோழர்களுமாகிக் கன்றுகளுமாகிவிட்டான்! எல்லாரும் வீடுபோய்ச் சேர்ந்தார்கள். எந்த எந்தப் பிள்ளை, எந்த எந்தக் கன்று, எந்த எந்த வீட்டுக்குப் போக வேண்டுமோ, அங்கங்கே அப்படி அப்படியே போய்ச் சேர்ந்து விட்டார்கள்!

'பாலகிருஷ்ணன் தானே; மயக்கிவிட்டோம்' என்று இறு மாந்து தன் இருப்பிடம் சென்ருன் பிரமன். முதல் முதல் கண்ணன் விளையாட்டைப் பார்க்க விரும்பியவன் கண்ணனது சக்தியையே சோதித்துப் பார்ப்பதாக எண்ணிவிட்டான். இந்த மயக்கத்திலே பிரமலோகம் சென்று தன் ஆசனத்தில் உட்காரப் போனுன். ஆனல் அந்த ஆசனத்திலே வேருெரு பிரமன் அங்கே கொலுவீற்றிருந்தான். புதிய பிரமன் பழைய பிரமனை மதிக்கவே இல்லை. திகைத்தான்; திடுக்கிட்டான் படைப்புக் கடவுள். 'இதுவும் கோகுல-பிருந்தா வன-பாலனுடைய லீலையா?' என்று பிருந்தாவனத்துக்கு மறுபடி யும் வந்தான்.

இதற்குள் பூமியில் ஓராண்டு கழிந்துவிட்டது. கண்ண
பலராமனும் வழக்கம்போல் தோழர்களுடன் கன்றுகளை மேய்த்
கொண்டிருந்தார்கள். படைப்புக் கடவுளின் மூளை சுழன்
'நாம் கவர்ந்து வானத்திலே மறைத்து வைத்திருந்தவர்கள்
கும் இருக்கிறார்கள்; இங்கும் இருக்கிறார்களே!' என்று ஒரே பிர
யில் மூழ்கிப் போய்விட்டான். அப்போது கன்றுகளும் சிறுவர்க
சங்கு சக்கரங்களோடு கூடிய பரமாத்மாவாகத் தோற்ற மளித்த
'எல்லாம் விஷ்ணுமயம்' என்கிறபடியே எல்லாம் தானாய் விள
கிறான் கண்ணன் என்று தெளிந்தான் பிரமன்.

வெட்கமுற்றான்; பாலகோபாலனின் காலில் விழுந்தான். சிறு
களையும் கன்றுகளையும் கொண்டுவந்து சமர்ப்பித்தான். ஆனால்
தப் பிள்ளைகளும் கன்றுகளும் எங்கே? மாயப் பிள்ளைகளும் மா
கன்றுகளும் மாமாயனாகிய கண்ணனுக்குள்ளே மாயமாக மறை
போனார்கள் என்பதைப் பிரமன் ஊகித்துக் கொண்டான். மறுபடி
கண்ணனை வணங்கி விடைபெற்றுக்கொண்டு போய்விட்டா
'கண்ணனுடைய திருவிளையாட்டெல்லாம் லோகோபகாரம் தா
என்ற உண்மையைப் பிரமன் அறிந்துகொண்டான்.

எனினும் ஞானிகள்,'பரமன் பெருமையைப் பிரமனும் அறியா
என்று பேசிக் கொண்டார்கள். இந்த நிலையில் கண்ணன் நிகழ்
திய மாய லீலையைப் பிருந்தாவனத்திலுள்ள ஒருவரும் அறி
கொள்ளவில்லை. என்ன அதிசயம் இருக்க முடியும்? கண்ணனுடை
பெருமையைத் தோழர்களும் அறிந்துகொள்ளவில்லை. அண்ணனாகி
பலதேவனும் அறிந்துகொள்ளவில்லையாம். ஏன், தன் பெருமை
தனக்குத்தான் தெரியுமா இந்தக் கண்ணனுக்கு?

## மலை குடை ஆயிற்று! (தேவராஜாவின் கர்வபங்கம்)

ஆயர்கள் ஆண்டுதோறும் தேவராஜாவாகிய இந்திரனுக்கு
பூஜை செய்துவந்தார்கள். இந்திரன் மழைக் கடவுள் ஆனத
அவன் அருளால் மழை பெய்து, தாங்கள் மாடு மேய்த்து வந்
கோவர்த்தன கிரிப் பிரதேச மெங்கும் புல்லும் தண்ணீரும் ஏரா
மாய்க் கிடைத்தன என்று நம்பினார்கள். இந்திர பூஜை செய்யாவி
டால் இந்திர கோபம் ஏற்பட்டு மழை பெய்யாமல் பஞ்சம் வந்
விடும் என்றும் பயந்தார்கள்.

இந்திர விழா நீண்ட காலமாக நடைபெற்று வந்தது. ஆய
களிடையே மட்டுமல்ல; மற்ற மக்களிடத்திலும் இந்திரனுக்குப் பூஜை
போடும் வழக்கம் காணப்பட்டது. 'வழக்கம் போல் இந்த ஆண்
டும் இந்திர விழாவைச் சிறப்பாக நடத்துவோம்' என்று தீர்மானி
தார்கள் ஆயர்குலமுதியவர்கள். வண்டி வண்டியாகச் சோறு தயி
நெய் பாயசம் வடை முதலான பட்சணங்கள் எல்லாம் சித்தமா
விட்டன. வாத்திய முழக்கங்களுடன் முதியவர்கள் பூஜைக்கு
கிளம்பிவிட்டார்கள். கண்ணன் ஆயர்களை நோக்கி, 'ஏன் இந்
ஆரவாரங்கள்?' என்று மெள்ளக் கேட்டான்.



'பசிக்கிற வயிற்றுக்குக் கஞ்சி வார்ப்பது போல் நமது பசுக்களுக்கும் கன்றுகளுக்கும் புல்லும் தண்ணீரும் கொடுத்து, நமக்கும் உணவு கொடுத்துவரும் தேவராஜாவுக்கு நன்றி தெரிவிக்க வேண்டாமா?' என்றார்கள் ஆயர்கள். கண்ணன் நகைத்தான். 'கோவர்த்தன கிரியல்லவா நம் பசுக்களுக்குப் புல்லும் தண்ணீரும் கொடுக்கிறது?' என்றான்.

'அப்படியானால் மலைக்கா பூசை போடுவது?'

'கண்ணுக்கு முன்னே நின்று உபகாரம் செய்கிறவர்களுக்குத்தானே நன்றி தெரிவிக்க வேண்டும்?'

'இந்திரனால் நமக்குப் பயன் ஒன்றுமில்லையா?'

'ஒன்றும் இல்லை.'

'பூஜைக்குச் சித்தமாக இருக்கும் இந்தப் பொருள்களை யெல்லாம் என்ன செய்வது?'

'இந்த மலைக்கே இடுங்கள்!'

'மலை உண்ணுமா?'

'இட்டுப் பாருங்கள்!'

கண்ணனுடைய சாகசச் செயல்களை அவர்கள் கண்டும் கேட்டும் வியந்து கொண்டிருப்பவர்கள். கண்ணனுடைய தெய்வத் தன்மையை மறந்துவிட்டாலும், 'இவனே நம் குலக்கொழுந்து; இவன் இட்ட கட்டளைப்படியே நடப்போம்' என்று தீர்மானித்தார்கள். சோற்றையும் காய்கறிகளையும் மலைக்கு முன் மலைபோல் குவித்தார்கள்; தயிரையும் நெய்யையும் குளம்போல் தேக்கி வைத்தார்கள்.

'மலை சாப்பிடுவதைப் பார்ப்போம்!' என்றான் ஒருவன் சிரித்துக் கொண்டே. 'அட, மலை சாப்பிடுகிறது!' என்றான் ஒருவன் திகைப்புடன். ஆம்; அந்த உணவு வகைகள் எல்லாம் குறைந்து கொண்டே வந்தன; விரைவில் மாயமாக மறைந்துவிட்டன. ஆம்; கண்ணன் தானே அவற்றை மாயமாக அமுது செய்து தீர்த்து விட்டான்! அங்கு ஒரு 'பூத வடிவு கொண்டு முற்ற வாரி வளைத்து' உண்டான் என்கிறார் ஆழ்வார்.

தேவராஜாவுக்குக் கோபமும் பசியும் பொறுமையும் பொங்கி விட்டன. இந்திர கோபத்தால் மழை பெய்யாமல் இருந்து விடுமோ என்றல்லவா அஞ்சினார்கள் ஆயர்கள்? இப்போது அந்தக் கோபம் மேகங்களை ஏவி ஏழு நாள் இடைவிடாது மழை பெய்வித்தது. 'ஓ மேகங்களே! அடித்துக் கொட்டுங்கள்; ஆயர்களுக்கும் ஆய்ச்சிகளுக்கும் கண்ணன் விரும்பி மேய்க்கும் பசுக்களுக்கும் நாசம் ஏற்படும்படி மழை பொழிய வேண்டும்' என்று கட்டளையிட்டான் தேவராஜா.

மழை தாரை தாரையாகக் கொட்டியது. யானைத் துதிக்கை போல் விழுந்தது. பயங்கர இடி முழக்கங்களும் சுழல் காற்றும்

சேர்ந்து கொண்டன. அந்த மழை கற்களையும் வாரி இறைத்து 'கல்லொடு கார் பொழிய' என்று சொல்லும்படி மேகங்கள் பொழிந்தன. 'இந்திர கோபம் வந்து விட்டதே? என் செய்வது' என்று நடுங்கிக் கொண்டிருந்த ஆயர்கள் கண்ணன் மழைக்கும் ஒரு குடை பிடிப்பது கண்டு பேராச்சரியம் அடைந்தார்கள்.

அந்தக் கல் மழைக்கு எந்தக் குடையை எப்படித்தான் பிடிப்பது? கோவர்த்தன மலையையே குடையாகத் தூக்கிவிட்டானும் கண்ணன். 'வண்ண மால்வரையே குடையாக' என்று சொல்லும்படி, தாமரைக் கை விரல் ஐந்தினையும் கப்பாகமடுத்து மணிநெடுந்தோள் காம்பாகக் கொடுத்து'க் குடைபிடித்த வைபவத்தை, கல்லெடுத்துக் கல்மாரி காத்த அந்த அநாயாச வெற்றியை ஆழ்வார்கள் அழகாய்ப் பாடியிருக்கிறார்கள்.

ஆயர்களும் ஆய்ச்சியரும் குழந்தை குட்டிகளுடனும் பசுக்களுடனும் கன்றுகளுடனும் அந்த மலைக்குடைக்குக் கீழே சுகமாக ஏழு தினங்களையும் கழித்தார்கள். இந்த அற்புதத்தைக் கண்ட இந்திரன் நாணிச் செருக்கு அழிந்து கண்ணனை வணங்கினான். கண்ணன் செய்த இந்த லோகோபகாரச் செயலைக் குறிக்கும் சிற்பம் ஒன்று மாமல்லபுரத்தில், பகீரதன் கொண்டுவந்த கங்கையைச் சிவபெருமான் சடையில் தாங்கிவிட்ட லோகோபகாரச் செயலைக் குறிக்கும் ஒரு சிற்பத்துக் கருகே காணப்படுகிறது.

இந்தக் கதையின் பொருளாழத்தைத்தான் என்னென்பது? லோகோபகாரச் செயல்களை இறைவனது கருணை எவ்வளவு அநாயாசமாகச் செய்து முடிக்கிறது என்ற பக்தர் படிப்பினை ஒரு பக்கம் இருக்கட்டும். 'கண்ணுக்குத் தெரியாத இந்திரனைக் காட்டிலும் கண்ணுக்கு முன் நின்று உங்கள் மாடுகளை ஊட்டி வளர்க்கும் கோவர்த்தன மலைக்கே (இயற்கைக்கே) நன்றி செலுத்துங்கள்' என்று கண்ணன் ஒரு பகுத்தறிவு, வாதம் செய்ததாகப் பகுத்தறிவு வாதிகளும் இக்கதையில் ஒரு படிப்பினை காணக்கூடு மல்லவா?

### கோவிந்த பட்டாபிஷேகம்

பிரமன் செருக்கழிந்து கண்ணனே பரமன் என்று தெரிந்து கொண்டதுபோல் தேவராஜாவும் செருக்கழிந்து ஜகன்மோகனன் கோபாலனே பரமபதநாதன் என்று தெரிந்துகொண்டான். அதற்குச் சான்றாக இந்த மோகன அழகு போதுமே! மலையைக் குடையாகப் பிடித்த சக்தியும் சாட்சி சொல்ல வேண்டுமா? இப்படி வியந்தான் இந்திரன்.

கண்ணன் தேவராஜாவை நோக்கி, 'பதவியில் இருப்பவர்கள் செருக்குற்று அழிந்து போவது எவ்வளவு அறியாமையைக் காட்டுகிறது! தேவ சிங்காசனமும் தேவலோகத் தலைமைப்பதவியும் உலகத் தொண்டு புரிவதற்கு ஒரு வாய்ப்பே ஆகும். இதை நீ மனத்தில்



கொள்ளவேண்டும்' என்றான். தேவேந்திரனும் அப்படியே செய்வதாக வாக்களித்தான்.

தேவராஜாவின் ஆணையால் பட்டத்து யானையாகிய ஐராவதமும் தெய்வப் பசுவாகிய காமதேனுவும் வந்து நின்றன. காமதேனு நீல நிறத்துக் கோபாலனைத் தன் பாலால் அபிஷேகம் செய்ததாம். ஆகாய கங்கையின் பால் நிறத் தீர்த்தத்தைத் துதிக்கையால் முகந்து முகந்து வெள்ளையானை நீலமணி வண்ணனை நீராட்டியதாம். தேவராஜா ஒரு தெய்வ மணிமுடியைக் கண்ணனுக்குச் சூட்டி, 'நீயே ராஜாதி ராஜா, தேவாதி தேவன். பசுக்களைக் காத்த உன்னைக் கோவிந்தன் என்று உலகம் போற்றும்' என்று வாயார வாழ்த்தி மனமாரத் தோத்திரம் செய்தான்.

பிறகு காமதேனு கண்ணனை நோக்கி, 'நீ ஆயர்குலத்தில் அவதரித்து மாடு மேய்த்ததாலும், மாடுகளை இப்போது காப்பாற்றியதாலும் எங்கள் குலமே ஈடேறிவிட்டது என்று நான் மகிழ்ச்சியடைகிறேன். ஆயர்குலக் கொழுந்தாகிய நீ எங்கள் பசுக் குலத்திற்கும் ராஜா; நீயே உலகங்களுக்கெல்லாம் இந்திரன்; நீயே தெய்வம்' என்று சொல்லிற்று. கோவிந்த பட்டாபிஷேகம் ஆகிவிட்டதென்று மூன்று உலகங்களும் மகிழ்வு எய்தின.

தேவேந்திரன் கோபமாக இருந்தபோது கல்மாரி பொழிந்த வானம் இப்போது பூமாரி பொழிந்தது. கோவிந்த பட்டாபிஷேகத்திற்குப் பின் கோவிந்தன் கோபாலன் கண்ணன் ஆயர்தேவு ஆயர் குலக் கொழுந்து என்ற பெயர்களே நாராயண நாமத்தைக் காட்டிலும் புகழ் பெற்றுவிட்டன என்று பெரியோர் உளங்குளிர்ந்து பேசுவதுண்டு.

### ஜகன்மோகன வேணுகோபாலன்

கம்சன் ஏவிய அசுரர்களைக் கண்ணன் ஒழித்த போதிலும் கம்சனை ஒழிக்க இன்னும் முயலவில்லை. சாதுக்களும் முனிவர்களும் தேவர்களும் 'கம்சனுடைய ஹிம்சையைத் தாங்க முடியவில்லையே' என்று துடித்துக் கொண்டிருந்த போதிலும் கண்ணன் வேணுகானம் செய்வதும், கோபிகைகளோடு கூத்தாடுவதுமாய்ப் பொழுது போக்கிக்கொண்டிருந்தான். ஏன், கம்ச வதத்திற்குக் காலம் இன்னும் சரியாக வாய்த்துவிடவில்லை என்றே கருதியதுபோலத் தோன்றியது. தெய்வம் பொறுத்துப் பொறுத்துப் பார்க்கிறது; காலம் வந்ததும் தெய்வ கோபம் எரிமலைபோலக் கிளம்பிவிடுகிறது!

வடமதுரையில் கம்சனுடைய கொடுங்கோலாட்சிதான்; பிருந்தாவனத்திலோ கண்ணன் இயற்கையழகு நிறைந்த இடங்களில் புல்லாங் குழலும் கையுமாக நின்றும் உலாவியும் பொழுது போக்குகிறான். சில சமயங்களில் சிறுவர்கள் சூழ்ந்து நிற்கக் குழல் ஊதுகிறான். வேறு சமயங்களில் தனியாக நின்று குழல் இசைக்கிறான்; அப்போது ஆறும் நீரோடைகளும் மடுக்களும

இயற்கையின் வேறு காட்சிகளுமே சாட்சிகள்; பரவசமாகு ரசிகர்கள்!

சில சமயங்களில் கன்றுகளையும் பசுக்களையும் அழைப்பதற்காக குழல் ஊதுவான். மாடுகள் மேய்ச்சற் காட்டிலே பல இடங்களிலும் மேய்ந்துகொண்டிருக்கு மல்லவா? அவை வெகுதூரம் போய் விடாமல் திரும்பி வருவதற்காக ஆயர்கள் குழல் ஊதுவதுண்டு. கண்ணனும் பசுக்களை அப்படி அப்படியே நிற்கச் செய்வதற்கும் புல்லாங்குழலின் ஒருவகைக் கீதத்தைப் பயன்படுத்திக் கொள்வான்.

கண்ணன் குழலிசை குறித்துப் பல பாடல்கள் வழங்கி வருகின்றன. இவற்றுள் பெரியாழ்வாரின் திருமொழியில் 'நாவலம் பெரிய தீவினில்' என்று தொடங்கும் பதிகம் மிகவும் சிறந்ததாகும். குழல்களும் கீதமும் ஆகிக் கண்ணன் கூட்டமாக வருவதை 'மழை கொலோ வருகின்றது?' என்று மங்கைமார் பேராவலுடன் காத்திருந்து பார்ப்பார்கள் என்றும் பெரியாழ்வாரே வருணித்திருக்கிறார். தாமே ஒரு கோபிகையாகி அந்த இசையை நேரில் அனுபவித்ததுபோல் அவ்வளவு அதிசயமாக அனுபவித்தும் பாடியிருக்கிறார்.

'பெண்களே! இந்த அற்புதச் செய்தியைக் கேளுங்கள்' என்று பீடிகையுடன் கோபிகைகள் கண்ணன் குழலோசை கேட்டுப் பட்ட பாடுகளைப் பேசுகிறார்; குதூகலத்தையும் பாடுகிறார். அவர்கள் காவல் கடந்து கண்ணன் குழலூதும் இடத்திற்கே வந்து விடுகிறார்களாம். ஒரு கயிற்றிலே தொடுத்த பூமாலைபோல் வந்து நின்று வெள்கித் தலை கவிழ்ந்து அவன் முகத்தை முகம் கொண்டு பார்க்காமலே தரையைக் கீறி நின்றுகொண் டிருக்கிறார்களாம்.

கண்ணன் எப்படிக் குழல் ஊதுகிறான் என்பதையும் விவரமாக வருணிக்கிறார். 'மடமயில்களொடு மான்பிணை போலே மங்கைமார்கள் மலர்க் கூந்தல் அவிழ' வந்து நிற்பதை 'அதோ பாருங்கள்' என்று சுட்டிக் காட்டுகிறார். பரமபதத்துக்கு இளவரசு என்கிறார் குழல் ஊதும் கோபாலனை; நந்தகோபனுக்கு இளவரசு என்றும் கூறுகிறார். 'கோவிந்த பட்டாபிஷேகம் செய்து கொண்டவன் குழலூதிப் படுத்துகிற பாடுகளைப் பாருங்கள்' என்று சொல்வது போல்,

கோவிந்தன் குழல்கொடு
ஊதினபோது

என்று சொல்லிக்கொண்டு போகிறார்.

மண்ணுலகத்துப் பெண்களுடன் விண்ணுலகத்துப் பெண்களும் நெஞ்சுருகிக் கலந்து திகைத்து நிற்கும் காட்சியையும் கண்டு காட்டுகிறார். மேனகை திலோத்தமை அரம்பை ஊர்வசி முதலான தெய்வப் பெண்களும் மயங்கி வெள்கித் தங்கள் ஆடல் பாடல்களை



விட்டொழிந்து விண்ணிலும் மண்ணிலும் வாய்திறவாது வந்து நிற்கிறார்களே!—என்கிறார். தும்புரு நாரதர் என்ற வீணைகான நிபுணர்களும் தங்கள் வீணைகளை மறந்தொழிந்து வந்து நிற்கிறார்களாம்.

கண்ணன் குழலிசை என்ற அமுதகீத வலையிலே சுருக்குண்டு விண்ணும் மண்ணும் ஒன்றுபட்டு நிற்கும் அற்புதத்தைப் பாடுகிறார். கறவைப் பசுக்களோடு பறவைக் கூட்டங்களும் வசீகரிக்கப்படுவதையும், மரங்களும் வேணுகோபாலனை நோக்கித் தொழுவதையும் வருணித்துப் பாடுகிறார். அசையும் பொருள்கள், அசையாப் பொருள்கள் எல்லாம் எழுதி வைத்த சித்திரங்கள்போல் காணப்படுகின்றனவாம் குழலிசை ஒலிக்கும் இடங்களில் எல்லாம்.

### குரவைக் கூத்து முதலியன

ஆயர் குரவை என்ற நாட்டியம் இன்றும் பிருந்தாவனத்தில் ஒரு விழாவாக நடக்கும் நடனமாகும். இது மிகவும் பழமையான நாட்டிய வகையைச் சார்ந்தது. 'ராஸ லீலை' என்று கண்ணன் கதைகளில் பிரசித்தமாய்ச் சொல்லப்படுகிறது அல்லவா? ராஸம் என்றால் 'கூட்டமாய் விளையாடும் ஆயர்களின் உல்லாசப் பொழுது போக்கு.' குரவைக் கூத்தைப் பற்றிப் பண்டைத் தமிழ் நூல்களும், ராஸ லீலை குறித்து வடமொழி நூல்களும் வருணிக்கின்றன. இந்தக் காலத்து ராஸ நடனம் முஸ்லிம் காலத்துக் கவிஞரான ஸ்ரீவல்லபருடைய பாணிதான் என்று சொல்லுகிறார்கள்.

குரவை என்பது கை கோத்து ஆடுவது. பலராமனுடனும் நப்பின்னையுடனும் கண்ணன் கை கோத்துக் குரவைக் கூத்து ஆடியதாகப் பழைய தமிழ் நூல்கள் கூறுகின்றன. இச் செய்தி விஷ்ணுபுராணம் பாகவதம் முதலிய வடநூல்களில் காணப்படவில்லை. கோவர்த்தனத்தைக் குடையாகத் தாங்கிய பின் கண்ணன் கோபியர்கள் எல்லாருடனும் ராஸக்கிரீடை என்ற ஒருவகைக் கூத்து நடத்தினான் என்றுதான் வடமொழிப் புராணங்கள் கூறுகின்றன.

ஒவ்வொரு ஆய்ச்சியின் பக்கத்திலும் ஒவ்வொரு கண்ணனைத் தோன்றி நின்று கை கோத்து ஆடிய ஒருவகைக் கூத்தே ராஸக் கிரீடை. இத்தகைய கூத்தையும் நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் குறிப்பிடுகிறார்கள். குடக்கூத்து என்ற ஒருவகைக் கூத்தும் ஆழ்வார்களால் பிரஸ்தாபிக்கப்படுகிறது.

குடங்கள் இரண்டு ஏந்தித் தெருவில் ஆடும் கூத்தைக் கண்ணன் ஆடிய குடக்கூத்து என்பார் திருமங்கையாழ்வார். பல குடங்களை மேல் எழ வீசிப் பிடித்து அம்மானை போல் ஆடும் ஒருவகைக் குடக்கூத்தைப் பெரியாழ்வார் பிரஸ்தாபிக்கிறார். இந்த இருவகைக் குடக்கூத்துக்களும் தமிழ்நாட்டு வழக்கங்களே. இக்

கூத்துவகை எல்லாம் பக்தர்களுக்குத் தங்களைக் கூத்தாட்டி வைக்கும் பகவானை வசீகர நிலையில் நினைப்பூட்டுகின்றன.

கண்ணனிடம் பக்திக் காதல் செலுத்த வேண்டுமென்று முனிவர்களே கோபிகைகளாகப் பிறந்தார்கள் என்று புராணம் கூறுகிறது. கோபிகைகளுடன் கண்ணன் நடத்திய ராஸ லீலை ஜீவாத்மாக்களுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள தொடர்பை நினைவூட்டுகிறது என்பது பக்தர் கொள்கை.

## குருந்தம் ஒசித்த கதை

'குருந்தம் ஒசித்த' கதை ஒன்று திவ்யப் பிரபந்தத்தில் குறிக்கப் பெற்றிருக்கிறது. கண்ணன் யமுனை ஆற்றில் நீராடிக்கொண்டிருந்த கோபியர்களின் துகில்களை ஒருங்கே கவர்ந்து ஆற்றங்கரையிலுள்ள ஒரு குருந்த மரத்தில் ஏறப்போனனும். அப்போது அங்கே கம்ஸனுல் ஏவப்பட்ட அசுரன் ஒருவன் வந்து அக் குருந்த மரத்தை ஆவேசித்துக் கிடந்தானும், கண்ணனைக் கொல்ல அதுதான் தருணம் என்று. அதை அறிந்த கண்ணன் அந்த மரத்தை முறித்து அந்த அசுரனை அழித்துவிட்ட கதைதான் 'குருந்தம் ஒன்று ஒசித்த' கதை என்கிருர்கள். ஆனல் சீவக. சிந்தாமணி இக் கதையை வேறொரு வகையாகக் கூறுகின்றது.

கண்ணன் விளையாட்டாகக் கோபியர்களின் துகில்களைக் கவர்ந்து கொண்டு யமுனை ஆற்றங்கரையிலுள்ள குருந்த மரத்தில் ஏறிக்கொண்டானும். அப்போது தமையனுகிய பலராமன் அங்கே வந்துகொண்டிருந்தான். அதை அறிந்த கண்ணன் தன் செய்கையை அவன் கண்டால் தனக்குப் பழி உண்டாகும் என்று நினைத்து, கோபியர்கள் தழையை உடுத்துத் தங்கள் மானத்தைக் காத்துக் கொள்ளும் பொருட்டு அக் குருந்த மரத்தை வளைத்துக் கொடுத்தானு. இதே கதை அகநானூறு என்ற சங்க நூலிலும் காணப்படுகிறது.

குருந்த மரக் கிளையைக் கண்ணன் தாழச் செய்ததும், கோபியர்கள் அதற்குள்ளே அடங்கி மறைந்து கொண்டார்களாம். பலராமன் போகுமளவும் கோபியர்கள் அந்தத் தழையை உடுத்து மானங் காத்துக்கொள்ளும்படியாகக் கண்ணன் அந்த மரக் கிளையைத் தாழ்த்திக் கொண்டிருந்தான் என்று சிலர் கூறுவதாகவும் பழைய உரைகாரர் ஒருவர் தெரிவிக்கிருர். எனவே, சங்க காலத்தில் வழங்கிய கதை இதுதான். சீவக சிந்தாமணியில் 'வளையிருர்க்குக் குருந்து அவன் ஒசித்தது' என்று வருவதற்கும் இப்படிப் பொருள் கொள்வதுதான் பொருத்தமாகும். சிந்தாமணிச் செய்யுளுக்கு வேறு விதமாய்ப் பொருள் கொள்வதும் உண்டு.

பெரியாழ்வார் பாட்டிலே 'குருந்தம் ஒன்று ஒசித்தானெடும்' என்று வருவதற்கும், 'குருந்த மரம் ஒன்றின் கிளைகளிலே மறைந்து மானங் காத்துக்கொள்ளும்படி அதைக் கோபியர்களுக்காக



வளைத்துக் கொடுத்த கண்ணனேடும்' என்பதுதான் சரியான பொருள் என்று துணியலாம். ஒசிதல் - வளைதல்; ஆகவே ஒசித்தல் - வளைத்தல். 'குருந்து ஒசித்தது' என்பதில் ஒசித்தலுக்கு முறித்தல் என்று பொருள் கூறுவது பொருத்தமன்று. இது காலஞ்சென்ற பண்டிதர் மு. இராகவையங்கார் ஆராய்ச்சி முறையில் கண்டு வெளியிட்டிருக்கும் அபிப்பிராயம்.

இந்தக் கதையின் பொருள்தான் என்ன? பற்றற்ற இறைவனைப் பற்றற்ற நிலையில் ஆன்மாக்கள் பற்றிக்கொள்ள வேண்டும் என்பது இதன் உட்பொருள் என்பர்.

பற்றுக பற்றற்ருன் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

என்ற திருக்குறளில் இக் கதையின் தத்துவப் புதைபொருளையும் கண்டு கொள்ளலாம் என்று தோன்றுகிறது.

## தமிழ் நாட்டின் ராதை

நப்பின்னை என்றும், நப்பின்னைப் பிராட்டி என்றும் குறிக்கப்படும் பெண்மணி தமிழ் நூல்களில் மிகவும் சிறப்பாய்க் கூறப்படுகிருள். சிலப்பதிகாரம் மணிமேகலை சிந்தாமணி ஆகிய ஜைன பௌத்த நூல்களிலும், தேவாரம் திருக்கோவையார் என்ற சைவ நூல்களிலும் நப்பின்னையின் பிரஸ்தாபம் வருகிறது. ஆழ்வார்களில் நம்மாழ்வாரும் பெரியாழ்வாரும் சில இடங்களிலேதான் கண்ணன் மிகவும் உகந்த தேவி என்று பாகவதம் கூறும் உருக்குமிணியைக் குறிப்பிடுகிருர்கள். மற்ற இடங்களில் எல்லாம் நப்பின்னையைத்தான் திவ்யப் பிரபந்தம் குறிப்பிடுகிறது.

நப்பின்னையைப் பின்னை என்றும் கூறுவதுண்டு. 'நப்பின்னை' என்பதில் 'ந என்பது பின்னை என்ற பெயருடையவளைச் சிறப்பிக்கிறது. கீரனை நக்கீரன் என்பது போலத்தான் பின்னையை நப்பின்னை என்கிருர்கள்.

நப்பின்னையைக் கண்ணன் மணந்துகொள்வதற்காக ஏழு எருதுகளை வலியடக்கி வென்றதாய்ப் பழைய தமிழ் நூல்கள் தெரிவிக்கின்றன. சீதா கலியாணத்திற்குக் கன்யா சுல்கமாக வில்லை வைத்திருந்தார்கள் அல்லவா? அப்படியே நப்பின்னை திருமணத்திற்குக் கன்யா சுல்கமாக ஆயர்கள் ஏழு எருதுகளை வைத்திருந்தார்களாம். கூர்மையான கொம்புகளையுடைய முரட்டுக் காளைமாடுகளை வெளியில் விட்டு அவற்றைத் தழுவிப் பிடிப்பவனுக்கே மகளைக் கொடுப்பது என்பது தமிழ் நாட்டிலே ஆயர்கள் பின்பற்றிவந்த ஒரு பழைய மண விதியாகும்.

நப்பின்னை திருமணத்திற்குப் பின் அவளுடன் கண்ணன் நிகழ்த்திய சரிதைகளைப் பழைய தமிழர்கள் நாடகமாக நடித்து வந்தார்கள். இது சிலப்பதிகாரத்திலிருந்து தெரிய வருகிறது. இக்

கதை ஸ்ரீ பாகவத புராணத்திலும் சில வேறுபாடுகளுடன் புகுந்துவிட்டது. யசோதைக்கு உடன்பிறந்தவனுக்குக் கும்பன் என்னும் பெயருடைய ஆயன் ஒருவன் ஆய்ப்பாடியில் இருந்ததாகவும், அவனுடைய மகளாக நப்பின்னை தோன்றியதாகவும் சொல்லுகிறார்கள். நப்பின்னையை வைணவ ஆசாரியர்கள் நீளாதேவி என்று குறிப்பிடுகிறார்கள்.

வடநாடு ராதைக்கு அளித்திருக்கும் பதவியைத் தமிழ்நாடு பண்டைக் காலந்தொட்டு நப்பின்னைக்கு அளித்து வந்திருக்கிறது. 'தோகை மயில் அனைய நப்பின்னை' 'ஆயர் மடமகள் பின்னை' என்றெல்லாம் ஆழ்வார்கள் நப்பின்னைப் பிராட்டியைக் குறிப்பிடுகிறார்கள். ஆண்டாளின் திருப்பாவை நப்பின்னையைச் சிறப்பித்துப் பேசுவதும் பிரசித்தமானது.

### தமிழ் நாட்டுக்கே உரிய கதைகள்

கிருஷ்ண லீலைக் கதைகளில் விளையாட்டாக உலகத் தொண்டு புரிந்த திருவிளையாடல்கள் பல. இவற்றில் தமிழ் நாட்டிலேயே வழங்கும் சில கதைகளும் உண்டு. குருந்தம் ஒன்று ஒசித்த கதை தமிழ் நாட்டு வழக்கைத் தழுவியது என்பதை ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறோம். இப்போது வேறொரு, கண்ணன் திருவிளையாட்டாகிய, தமிழ்க் கதை ஒன்றைப் பார்க்கலாம்.

மாலிகன் என்று கண்ணனுக்கு ஒரு தோழன் இருந்தான். 'அவன் ஸ்ரீ கிருஷ்ணன் என்றால் நான் ஸ்ரீ மாலிகன்' என்று மார் தட்டியவன் இவன். கண்ணனிடமே பல்வகை ஆயுதப் பயிற்சிகளும் பெற்று 'இனி நமக்கு நிகராவார் யாருமில்லை!' என்று செருக்குற்றுப் பலரையும் ஹிம்சித்துக் கொண்டிருந்தானும். கண்ணன் துஷ்ட நிக்கிரக மூர்த்தி அல்லவா? ஆனால் இந்தத் துஷ்டன் தோழனாகவும் பழகிவிட்டானே! என் செய்வது?

கண்ணன் மாலிகனை நோக்கி, 'நீ இப்படிச் செய்வது நியாயமா?' என்று கேட்டான். 'நியாயமோ, இல்லையோ? நான் உன் நண்பன் தானே?' என்று நிமிர்ந்து பதில் சொன்னான் மாலிகன். தனக்குக் கண்ணன் பல ஆயுதப் பயிற்சிகளிலும் உதவியிருப்பதுபோல் சக்கராயுதப் பயிற்சியும் செய்வித்திருக்க வேண்டும் என்றும் மாலிகன் நிர்ப்பந்தம் செய்தான்.

'இப்பயிற்சி அபாயகரமானது.'

'பழகிவிட்டால் என்ன அபாயம் ஏற்படப் போகிறது?'

'இதில் பழகுவதே உனக்கு ஆபத்து.'

'உனக்கு இந்தப் பழக்கத்தால் என்ன ஆபத்து வந்துவிட்டது? கண்ணா! எனக்கு உன் எச்சரிக்கை தேவையில்லை; உன் பயிற்சி தான் வேண்டும்.'



கண்ணன் தன் சக்கராயுதத்தை எடுத்து ஒற்றை விரலால் சுழற்றி மேலெறிந்து கையில் ஏற்றுக்கொண்டான். 'இது உன்னால் செய்ய முடியாதே' என்றான். மாலிகனோ 'என்னால் முடியாததும் உண்டோ?' என்று செருக்குடன் நிமிர்ந்து அந்தச் சக்கராயுதத்தைத் தானும் கண்ணனைப் போல் சுழற்றி எறிந்தான். எறிந்து கை நீட்டிப் பிடிப்பதற்குள் அது சுழன்று விழுந்து மாலிகன் தலையைக் கொய்து தள்ளிவிட்டது.

அசுரச் செருக்கானது தன்னைத் தானே அழித்துக் கொள்ளுகிறது என்ற கருத்தமைந்த இக் கதையைப் பெரியாழ்வார் பாடியிருக்கிறார். 'அசுரச் செயல்களில் துணிந்து இறங்கிவிட்ட தோழனும் தன் விதியைத் தானே விதித்துக் கொள்ள வேண்டியதுதான், அந்த விதிக்கு உட்பட வேண்டியதுதான்!' என்று சங்கற்பம் செய்து கொண்ட கண்ணன், தோழனைக் கொன்றான் என்ற பழி வராமல் தன்னாலேதான் முடிந்தான் என்று சொல்லும்படியாக, இந்தத் துஷ்ட நிக்கிரகம் செய்து முடித்துவிட்டான் என்பது பெரியாழ்வார் கருத்து. இக் கதைக்கு வடமொழிப் புராண ஆதரவு கிடையாது; தமிழ் நாட்டிலே கிளைத்து வளர்ந்த கண்ணன் கதைதான் இது.

புராணப் பிரசித்தமாகவும், இதிகாசப் பிரசித்தமாகவும் உள்ள கண்ணன் கதைகள் சில வற்றிலும் தமிழ் நாட்டின் மனோபாவம் தனக்கே உரிய முறையில் சில விவரங்களையும் துணுக்குகளையும் சேர்த்து வைத்திருக்கிறது. இதற்கு ஓர் உதாரணமாக 'உஷா பரிணயம்' என்று பிரசித்தமாக வழங்கும் கதையைக் குறிப்பிடலாம். கண்ணனுடைய பேரனாகிய அநிருத்தனைப் பாணாசுரனுடைய மகளான உஷாதேவி காதலிக்கத் துணிந்தாள் என்று அந்த அசுரன் இக் காதலனைச் சிறைப்படுத்தினான். அது தெரிந்து கண்ணன் அந்த அசுரனுடன் போர் புரிந்து பேரனை விடுவித்துக் கொண்டான் என்பது பிரசித்தமான கதை. இதில் தமிழர்கள் தங்கள் மனோபாவம் தோன்றச் சேர்த்திருக்கும் அம்சம் கண்ணன் பாணாசுரனது நகரிலே போய்க் குடக்கூத்தாடினான் என்பது. இக் கதைத்துணுக்கைச் சிலப்பதிகாரத்தில் காணலாம்.

கண்ணன் கதைகளில் ஈடுபட்ட பெரியாழ்வாரின் உள்ளம் இதிகாச புராணங்களில் உள்ள கண்ணனை நாடிக் கண்டதோடு, தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு வழங்கிவந்த கதைகளிலும் தன் இஷ்ட தெய்வத்தைக் கண்டுகொள்ள முயன்றது. இத்தகைய முயற்சியுடன், பெரியாழ்வார் கற்பனை யுலகிலும் பறந்து திரிந்து புதிய விவரங்களாலும் பழைய கதைகளை அணி செய்து பார்த்திருக்கிறார். கண்ணனின் திருவிளையாடல்களில் உலகத் தொண்டாற்றும் கருணையையும் எளிமையையும் வற்புறுத்தவே பெரியாழ்வார் இப்படியெல்லாம் செய்திருக்கிறார்.

பெரியாழ்வாரின் 'பிள்ளைத் தமிழ்' என்று சொல்லத்தக்க பாடல்களில் 'குழந்தையை வந்து பாருங்கள்' என்று தாய் அழைப்பதும்,

தாலாட்டுவதும், 'அம்புலிமாமா வாவா' என்பதுபோல் பாடியி[ருப்]பதும், ஐந்தாம் மாதத்தில் கண்ணன் தலையை நிமிர்த்திக்கொண்[டு] இங்கும் அங்கும் அசைந்து ஆடும் அழகைப் பாடியிருப்பதும், [சப்பாணி] கொட்டி விளையாடுவதையும் நடை பயிலும் அழகையும் பாடியி[ருப்]பதும், 'அச்சோ, அச்சோ' என்று பாடுவதும், வேறு சில பால [லீலை]களின் அருமை பெருமைகளைப் பாடியிருப்பதும் எல்லாம் தமி[ழர்]களின் மனப்பான்மைக்கும் பண்பாட்டிற்கும் சான்று தருவன[வா]யாகும்.

வெண்ணெய் திருடுவது போன்ற லீலைகளைக் குறித்துத்தா[ன்] எத்தனை வசீகரமான துணுக்குகளைக் காண்கிறோம் பெரியாழ்வா[ர்] வாக்கிலே! ஆய்ச்சி ஒருத்தி யசோதையிடம் வந்து, 'அம்மா! உ[ன்] மகன் எங்கள் வீட்டிலே வந்து வெண்ணெய் விழுங்கி, வெ[றுங்] கலசத்தைக் கீழே போட்டான்—மண்ணிலே அல்ல, கல்லி[லே] அம்மா! அந்த ஓசையில் ஒரு மகிழ்ச்சி அவனுக்கு! இப்படி ஒ[ரு] கல்வி கற்றிருக்கிருன்!' என்று அந்தக் கைவரிசையை விரித்துரை[க்]பதைத்தான் பாருங்கள்.

வேருெரு ஆய்ச்சி—வயதானவள்—வந்து, 'உருக்க வைத்திரு[ந்த] வெண்ணெய் உருகி நெய் ஆவதற்கு முன்னமே உறிஞ்சிவிட்டா[ன்] தாழியோடே! தாழியையும் உடைத்துவிட்டான் அம்மா! உடைத்து[ப்] விட்டு என் அருகே வந்து நிற்கிருன்!' என்கிருள். இன்னெரு ஆய்ச்[சி] வந்து,'பாலைக் கறந்து அடுப்பில் ஏற்றிவைத்தேன், காய்ச்சுவதற்கா[க] மேலண்டை வீட்டிற்குப் போய் நெருப்பு எடுத்து வந்தேன். அங்[கே] கொஞ்சம் பேசிக்கொண் டிருந்துவிட்டேன் அம்மா! அதற்குள்[ளே] உன் மகன் ஒரே பாய்ச்சலில் வந்து அந்தக் காய்ச்சாத பா[லை] சாய்த்துப் பருகிவிட்டான். இங்கே வரும்போது கூட அவன் அங்[கே]தான் நின்று கொண்டிருந்தான்' என்கிருள்.

இன்னும் ஒருத்தி வருகிருள். 'நோன்புக்குப் பட்சணங்கள் சித்[தம்] செய்து வைத்திருந்தேன். பாயசம் வைத்திருந்தேன்; திரட்[டுப்] பாலும் வைத்திருந்தேன்; தேவ பூஜைக்கு முன்னமே விழுங்[கி] விட்டான் அம்மா!' என்று ஆர்ப்பாட்டம் செய்கிருள். 'சீடை, எள்[ளு]ருண்டை முதலிய பட்சணங்களைப் பாத்திரங்களில் வைத்திருந்தே[ன்] அத்தனை கலங்களும் காலி! இவனே ஒன்றும் அறியாதவன்போ[ல] இங்கே வந்து நிற்கிருன்!' என்று ஏற்கெனவே முறையிட்[டுப்] போனவள் மறுபடியும் ஓடி வருகிருள் யசோதையிடம். 'கண்ண[ன்] மறுபடியும் எங்கள் வீட்டுக்கு வந்து "உறியில் வெண்ணெ[ய்] இருக்கிறதா?" என்று சோதனை போட்டுப் பார்த்தான்' என்கிருள்.

இதோ ஒருத்தி வந்து, 'கண்ணன் என் மகளின் கையி[ல்] வளையைப் பார்ப்பதுபோலக் கழற்றிக் கொண்டான்' என்கிருள். 'காடுகளிலிருந்து நாவற்பழங்களைச் சேகரித்துத் தெருக்களி[ல்] கொண்டுவந்து விற்கும் ஒரு பெண்ணிடம் என் பெண்ணின் [கை] வளைகளைக் கொடுத்து நல்ல நாவற்பழங்களாகப் பொறுக்[கிக்]



தொடங்கினுன் கண்ணன்' என்கிருள். 'போதும் போதும் பழங்கள் அந்த வளைக்கு!' என்ருளாம் நாவற்பழம் விற்றவள். 'போதாது, போதாது' என்று கண்ணன் வழக்காடினுனும். 'சத்தம் கேட்டு நான் அங்கே போனேன்; நாவற்பழக்காரியிடம் என் மகளின் வளையைக் கண்டேன். நான் ஒன்றும் கேளாதிருந்தும் கண்ணன் "இந்த வளையை நான் களவாடவில்லை" என்று தானுகவே சொன்னுன்.' என்கிருள் இந்தக் கோபிகை.

'இல்லை யென்று கண்ணனே சொல்லிவிட்டால் நீ அதை நம்ப வேண்டியதுதானே!' என்பது யசோதையின் முகபாவம். ஆனுல் அந்த ஆய்ச்சியோ 'கண்ணன் அப்படிச் சொல்லித் தன் திருட்டுத்தனம் வெளியானதைத் தானே அறிந்துகொண்டு, "ஓ மோசம் போனேனே!" என்று சிரித்தான்' என்று அந்த நாடகத்தைப் பூர்த்தி செய்தாள். யசோதைக்கும் சிரிப்பு வந்துவிட்டது. குற்றம் சுமத்திய ஆய்ச்சியும் சிரித்துவிட்டாள். அப்போது பக்கத்திலே அவர்களுக்குத் தெரியாமல் வந்து நின்றுகொண்டிருந்த கண்ணனும் சிரித்துவிட்டான்.

'இப்படித்தான் சிரித்தான் அப்போதும்' என்கிருள் ஆய்ச்சி. 'நான் திருடனு? அம்மா!' என்று கண்ணன் தாயைக் கேட்க, 'இப்போது ஏன் சிரித்தாய்? கண்ணே!' என்று கேட்கிருள் யசோதை. 'என் கதையை இவள் எவ்வளவு அழகாய், எவ்வளவு ரசமாய்ச் சொல்லுகிருள்! அந்தக் கதையிலே இவளுக்குத்தான் என்ன பிரேமை!' என்று மறுபடியும் சிரிக்கிருனும் கண்ணன்.

இப்படியெல்லாம் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் குழந்தை-மனேதத்துவத்தைத் தமிழர்கள் புரிந்துகொண்டிருந்த நிலைக்கு இசையப் பாடியிருக்கிருர் பெரியாழ்வார். இந்த லீலா சுகத்தைக் கவியுள்ளம் படைத்த ரசிகர்கள் இன்றும் அனுபவிக்கலாம் இத்தகைய பாசுரங்கள் வாயிலாக.

ஸ்ரீ கிருஷ்ண லீலைகளைக் கோபிகைகள் அனுபவித்தார்கள் என்பது கதை. பெரியாழ்வார் போன்ற பக்தமணிகளோ மனேபாவ உலகில் கோபிகைகள் ஆகிப் பாடுவதால், கதை கவிதையில் உண்மையாகிவிடுகிறது. இத்தகைய திருவிளையாடல்களும் இவற்றைப் பாடியிருக்கும் பாடல்களும் உலகத் தொண்டேயாகும் என்பதில் ஐயமுண்டோ?

## 7. மறக்கருணையும் அறக்கருணையும்

'கம்சா! நீ எவ்வளவோ புத்திசாலி. எனினும் ஏமாறிப்போனுயே!'
'நானு ஏமாறிப்போகிறவன்? என்ன புதிர் போடுகிறீர், கலகப் பிரியரே!'

'கலகம் பிறந்தால் நியாயம் பிறக்கும்; நான் உள்ளதைச் சொல்கிறேன்; ஆத்திரக்காரர்கள் என்னைக் கலகக்காரன் என்கிறார்கள். என் கலகத்தால் முடிவில் விளைவது நன்மைதான்!'

கலகப் பிரியரான நாரதரிடம் கம்சனுக்கும் பிரியம்தான். 'தேவ ரிஷியாகிய தாங்கள் தேவ ரகசியங்களையும் என் காதில் ஊதி விடுகிறீர்கள். உண்மைக்குப் பயப்படுகிறவன் கம்சனாக இருக்க முடியுமா?' என்று நாரதருக்குப் பதில் சொன்னான். 'குழந்தை மாறிப் போயிற்று; நீ ஏமாறிப்போனாய்' என்று அந்தச் செய்தியைக் கம்சனுக்கு விவரித்தார் நாரத முனிவர். 'இந்த உண்மையும் என்னைப் பயமுறுத்தவில்லை; இந்த உண்மை ஒழிக!' என்றான் கம்சன்.

## தனுர் யாகம்

நாரதர் விடைகொண்டதும் கம்சன் தேவகியையும் வசுதேவனையும் மறுபடியும் சிறைப்படுத்தினான்; கைகால்களில் கனமான விலங்குகளையும் பூட்டி வைத்தான். தன் மந்திரிகளுடன் ஆலோசித்து 'வரும் சதுர்த்தசியில் தனுர் யாகம் ஒன்று செய்ய வேண்டும். அதற்குப் பல அரசர்களையும் வரவழைக்க வேண்டும்; கண்ணனையும் பலராமனையும் அழைத்து வந்து வஞ்சகமாய்க் கொன்றுவிட வேண்டும்' என்று முடிவுகட்டினான்.

சாணூரன் முஷ்டிகன் முதலிய மல்லர்களை நோக்கி, 'கண்ணன் வந்தவுடன் அவனுடன் மற்போர் செய்து கொன்றுவிடுங்கள்' என்று கட்டளையிட்டான். பிறகு யதுகுலத்தைச் சேர்ந்தவரும் தன் ஏவலாளரில் ஒருவருமான அக்ரூரர் என்பவரை அழைத்து 'நீர் விரைவில் போய் நந்தகோபன், கண்ணன், பலராமன் முதலானவர்களைத் தனுர்யாகம் காண அழைத்து வரவேணும்' என்று கட்டளையிட்டு அனுப்பிவைத்தான்.

அக்ரூரர் நல்லவர்; அறிவாளி; பக்தர். கண்ணனை நந்தகோபன் மாளிகையில் காணவில்லை; ஒரு மாட்டுத் தொழுவத்தில் கண்ணன் தான் மேய்த்து வந்த மாடுகளைக் கட்டிக்கொண்டிருந்ததைப் பார்த்து விட்டார். மேய்க்கும் கோல் இன்னும் கையிலேதான் இருந்தது. இடுப்பில் கட்டிய பொன்னுடையில் புல்லாங்குழலைச் சொருகியிருந்தான். கழுத்திலே வனமாலை, முடியிலே மயில்தோகை. அக்ரூரரின் பக்தி நிறைந்த மனோபாவம் கோகுலச் சிறுவனை நீலஜோதியான நிர்மல மூர்த்தியாகத் தரிசித்தது.

அக்ரூரரைக் கண்ணன் க்ஷேமம் விசாரித்த பின், வந்த காரியத்தையும் விசாரித்துத் தெரிந்து கொண்டான். 'யாக சாலையில் ஒரு பெரிய வில் வைத்திருக்கும்; அதைப் பல அரசர்களும் போட்டியிட்டு வளைக்க முயல்வார்கள்' என்று தனுர் யாகத்திற்கு விளக்கம் கூறியபின் அக்ரூரர் அந்த வேள்வியை வியாஜமாகக் கொண்டு கண்ணனைக் கம்சன் கொல்லச் சூழ்ச்சி செய்திருப்பதையும் தெரிவித்தார். 'தன் வினை தன்னைச் சுடும்!' என்றான் கண்ணன்.



கம்ச ராஜாவுக்குக் காணிக்கையாகத் தயிர் முதலியவற்றைப் பல வண்டிகளில் ஏற்றிக்கொண்டு நந்தகோபன் முதலானவர்கள் புறப்பட்டார்கள். அக்ரூரரின் இரதத்தில் கண்ணனும் பலராமனும் ஏறிக் கொண்டார்கள். அக்ரூரர் இரதத்தை ஓட்டிக்கொண்டு போனார்.

சூரியாஸ்தமன சமயத்தில் இரதம் மதுராபுரியை நெருங்கி விட்டது. ஓர் உத்தியான வனத்தில் கண்ணனும் பலராமனும் சில ஆயர்களுடன் இராப்பொழுதைக் கழித்துவிட்டுச் சூரியோதயம் ஆனதும் மதுரையில் பிரவேசித்தார்கள். அக்ரூரர் முன்கூட்டியே போய்க் கம்சனிடம் செய்தி சொன்னார்.

கம்சனின் தலைநகரம் கோட்டைகளும் கோபுரங்களும் அகழிகளும் மாடமாளிகைகளும் ராஜவீதிகளும் கடைவீதிகளும், இடையிடையே சோலைகளும் பூந்தோட்டங்களும் உள்ளதாக அமைக்கப் பெற்றிருந்தது. கண்ணன் வீதி வழியாகச் செல்லும்போது அந்த வட மதுரைப் பெண்கள் மேல் மாடங்களிலிருந்து கண்ணனுடைய திவ்ய சௌந்தரியத்தைக் கண் கொட்டாமல் பார்த்தார்கள்; பூமாரி பொழிந்தார்கள். ஆண்மக்களும் வீதிகளில் நின்று நின்று 'வள்ளல் முகம் விருந்தானதம்மா!' என்ற உணர்ச்சியுடன் நோக்கிய வண்ணமா யிருந்தார்கள்.

கண்ணன் ஒரு பெருந்தெருவை விட்டுச் சிறு வழி ஒன்றிலே போய் ஒரு வீட்டு வாசலில் நின்றான். அந்த வீட்டுக்காரனைச் சுதாமா என்றும், மாலைக்காரன் என்றும் அழைப்பதுண்டு. பூமாலைகள் கட்டி விற்றுப் பிழைத்துவந்தான். கம்சனுக்கு மாலை கட்டிக் கொடுப்பது அவனுக்கு முக்கியமான தொழில். அவன் கண்ணனைக் கண்டதும் அழகான பூமாலைகளைப் பொறுக்கியெடுத்துக் கொடுத்தான்.

'இந்தக் குறுந்தெருவில் என் குடிசை தேடி வந்தாயே கண்ணா! இந்த அழகிய பூக்களைப் பயன்படுத்தத் தெரியாமல் கொடுங்கோலனுக்கு விலைப்படுத்தி வயிறு வளர்க்கும் சிறியேன் இப்பொழுதே பெரும் பேறு பெற்றேன்' என்று சொல்லிக்கொண்டே அளித்த மாலைகளைக் கண்ணன் அணிந்துகொண்டதுமே, மாலைக்காரன் தான் ஒரு புது வாழ்வு பெற்றுவிட்டதாகப் பெருமகிழ்வு எய்தினான்.

பிறகு கண்ணன் அந்தப் பூமாலைகளை அணிந்துகொண்டு பலராமனுடன் ராஜவீதியில் சிறிது தூரம் சென்றதும், ஒரு கூனி சந்தனக் கிண்ணமும் கையுமாக எதிரே வந்து கொண்டிருந்தாள். அந்தச் சந்தனம் திவ்விய பரிமளம் வீசியது. 'தங்காய்! நீ யாருக்குச் சந்தனம் கொண்டுபோகிறாய்?' என்று கேட்டான் கண்ணன். 'கம்ச மகாராஜாவுக்கு' என்றாள் அந்த வேலைக்காரி.

'நமக்கும் இதைப் பூசிக்கொள்ள வேண்டும் என்று ஆசையாக இருக்கிறதே!' என்றான் கண்ணன். இந்த முகத்தைக் கூர்ந்து பார்த்தாள் அவள். 'உன் திருமேனிக்கு மிகவும் இசைந்ததுதான்

இந்தச் சந்தனம்' என்றாள். குதூகலமாய்க் கண்ணன் சந்தனத்தை வாங்கிப் பூசிக்கொண்டான்; 'மனக்கோணல் இல்லாத உனக்கு ஏன் இந்த உடற்கோணல்?' என்று கேட்டுக்கொண்டே அவள் கூனை நிமிர்த்தி யருளினான்.

அப்பால் வேள்விச் சாலையாகிய படைச்சாலைக்கு நேரே போய் விட்டான் கண்ணன் பலராமனுடன். கம்சனுடைய வில் ஆடம்பரமாக வைக்கப்பட்டிருந்தது. அதை வளைக்கத் தைரியம் இல்லாத அரசர்கள் கொடுமைக்கு அறிகுறியான அந்தக் கருவி மீது மலர்கள் தூவி வழிபாடு செய்து கொண்டிருந்தனர். கண்ணனே அந்த வில்லை அநாயாசமாக எடுத்துக் கரும்பை முறிப்பது போல் முறித்துத் துரும்பை எறிவதுபோல் எறிந்துவிட்டான்.

## கம்ச வதமும் பட்டாபிஷேகமும்

பிறகு இராமகிருஷ்ணர்கள் (பலராமனும் கிருஷ்ணனும்) கம்சனுடைய அரண்மனையை நோக்கிச் சென்றார்கள். வழியில், 'நடையாடும் குன்றோ அது?' என்று வியக்கும்படி இவர்களை நோக்கி வந்தது கம்சனால் ஏவப்பட்ட பட்டத்து யானையான குவலயாபீடம். அது மதம் பிடித்தது போல் வெறிகொண்டு வந்து கண்ணனைத் துதிக்கையால் பற்றிக்கொண்டது. யாதவ வீரர்கள் அந்த யானையைக் கொன்றுவிட்டார்கள்.

முஷ்டிகன் சாணூரன் முதலான பெரு மல்லர்கள், பல காட்டானைகள் திரண்டு வருவதுபோல், வந்து, 'கண்ணா, உன்னுடன் மற்போர் செய்யவேண்டும்; தினவு தின்னுகிறது தோளை!' என்று கர்ஜித்தார்கள். 'காட்டானைகளை இளங்கன்றுகள் எதிர்க்குமா? ராட்சச மரங்களைப் பூங்கொடிகளா வீழ்த்தப் போகின்றன?' என்று அதிசயித்தனர் மதுரை மக்கள். ஆனால் அசுர ஆவேசம் கொண்டிருந்த அந்த மல்லர்கள் செத்து விழுந்தார்கள்.

பட்டத்து யானையும் மல்லர்களும் அழிந்தது கண்ட கம்சன், அந்த நடுக்கத்திலே கொடுமை மேலும் அதிகரிக்க, 'வெருட்டித் துரத்துங்கள் முரட்டுச் சிறுவர்களை. நந்தகோபனையும் விலங்கிட்டுச் சிறையில் தள்ளிவிடுங்கள். வசுதேவனையும் உக்கிரசேனனையும் சிரச்சேதம் செய்துவிடுங்கள்' என்றெல்லாம் இடிக் குரலில் கட்டளையிட்ட வண்ணமாயிருந்தான்.

கண்ணனோ 'காலம் வந்து கைகூடியது' என்ற கருத்துடன் கம்சனுடைய சிங்காசனத்தின் மீது பாய்ந்தான். மாமன் வாளை உருவினான். பளிச்சென்று அதைப் பறித்துக்கொண்டான் மருமகன். சொந்த மாமன் வடிவில் அசுரச் செயல்கள் செய்துவந்த கொடியவன் வெகு விரைவில் வதஞ் செய்யப்பட்டான். பொல்லாத அசுரசக்திகள் எவ்வளவு படாடோபமாக உலகத்தை ஹிம்சித்து வந்த போதிலும், தர்மாவேசம் என்ற தெய்வ கோபத்திற்கு முன் தருணம் வந்ததும் அவை மரணம் எய்திவிடும் என்பது கம்ச வதத்



தின் உட்பொருள். 'கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்ற' தெய்வ சக்தி அந்தக் கொடியவன் உயிரையும் உண்டுவிட்டது என்று பெரியோர் கம்ச வதத்தைக் குறிப்பிடுகிறார்கள்.

மாமனை மறக் கருணைக்கு இலக்காக்கிய கண்ணன் தன் அண்ணனுடன் சென்று பெற்றோர்களைச் சிறையிலிருந்து விடுவித்தான். சிசுவாகத் தான் பிரிய நேர்ந்த பிள்ளையை இப்படிக் கண்ட தாயின் மகிழ்ச்சிக்கு அளவும் உண்டோ? உடனே இவர்கள் நால் வரும் கம்சனுக்கும் தேவகிக்கும் தந்தையான உக்கிரசேனனைப் போய்ப் பார்த்தார்கள். கண்ணனும் பலராமனும் அவனைச் சிறையிலிருந்து விடுவித்துப் பாட்டனாகிய அவனுக்கே வட மதுரையில் பட்டாபிஷேகம் செய்து வைத்தார்கள்.

## குருகுலமும் குருதட்சிணையும்

கண்ணனுக்குப் பதினொரு வயதானதும் குலகுரு இவனுக்கும் பலராமனுக்கும் உபநயனம் செய்வித்தார். பிறகு குருகுல வாசம் செய்து வித்தை கற்றுக்கொள்ள வேண்டும் என்ற அந்தப் பழைய வழக்கத்திற்கு இசைய, இராமகிருஷ்ணர்கள் அவந்தி நகரில் ஸாந்தீபினி என்ற மகாவித்துவானை அடைந்து அவருக்குப் பணி செய்து கல்வி கற்கத் தொடங்கினர். அப்போது இவர்களுடன் ஒருசாலை மாணாக்கராகக் கல்வி கற்றவர்களில் குசேலரும் ஒருவர். பரம ஏழையாக இருந்து கண்ணன் அருளால் செல்வம் பெற்ற பக்த குசேலர் இவர்தாம்.

குருகுல வாசம் முற்றுப்பெற்றது. குரு தட்சிணை கொடுக்க விரும்பிய கண்ணனை நோக்கி, ஸாந்தீபினி கண்ணனின் தெய்வ சக்தியை ஒருவாறு உணர்ந்து கொண்டிருந்ததால், 'பிரிய சிடா! பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்பு கடலில் மூழ்கி இறந்துபோன என் மகனைக் கொண்டுவந்து நீ கொடுத்தால், அதுவே நான் உகக்கும் குரு தட்சிணை!' என்றார்.

கடலுக்குள் சங்கு வடிவம் கொண்டிருந்த பஞ்சஜனன் என்ற அசுரன்தான் குருபுத்திரனைக் கொண்டுபோனவன் என்பது கண்ணனுக்குத் தெரிந்துவிட்டது. அந்த அசுரனை வதஞ் செய்த கண்ணன் அவனுடைய எலும்புகளிலிருந்து கிடைத்த 'பாஞ்சஜன்னியம்' என்ற பிரசித்தி பெற்ற சங்குடன் யமலோகத்திற்குப் போய் அங்கே இருந்த குரு புத்திரனை விடுவித்துக் கொணர்ந்தான். 'இழந்த புதல்வனைப் பெற்றேன்; தெய்வ சக்தியுள்ள கண்ணனே! உன்னை ஞானபுத்திரனாகவும் பெற்றேன்' என்று பூரித்துப் போனார் குரு.

## துவாரகை நிர்மாணம்

கம்சவதம் சாதுக்களுக்கு மகிழ்ச்சி உண்டாக்கியதுபோல், துஷ்டர்களுக்கு அச்சத்தையும் கோபத்தையும் பொறாமையையும் தூண்டி விட்டது. இத்தகைய துஷ்டர்களில் கம்சனுடைய

உறவினனான ஜராசந்தன் மிகவும் கொடியவனாகி மகத நாட்டை ஆண்டு வந்தான். அவன் 'யாதவ குலத்தையே அழித்து விடுவேன்' என்று சீறி வந்து மதுரையைப் பெரும் படையுடன் சூழ்ந்து கொண்டான். அந்தப்போரில் இராமகிருஷ்ணர்களே வெற்றி பெற்ற போதிலும், ஜராசந்தன் திரும்பப் படையெடுத்து வந்தான்.

கால யவனன் என்ற மிலேச்ச வீரன் ஒருவனும் மதுரையைத் தாக்கி யாதவர்களுடன் போர் புரியத் தொடங்கினான். அதே சமயத்தில் ஜராசந்தனும் தன் படைகளுடன் வேறொரு புறமாக வந்து மதுரையைத் தாக்கினான். அத்தகைய நெருக்கடியில் கண்ணன் மேற்குக்கடலில் துவாரகை என்ற தீவை அரணாகச் செய்துகொண்டு யாதவர்களை அங்கே குடியேற்றினான். அது முதல் துவாரகை கண்ணனுடைய தலைநகரமாயிற்று.

துஷ்டனான கால யவனன் மரணமடைய வேண்டுமென்று தீர்மானித்த கண்ணன் கையில் ஆயுதம் ஒன்றும் எடுத்துக்கொள்ளாமலே வட மதுரையை நோக்கிப் புறப்பட்டான். கால யவனன் பின் தொடர்ந்து போர் புரிய வந்தான். அந்த யவனனைக் கண்டு அஞ்சியது போல் கண்ணன் ஓட்டம் பிடித்து ஒரு மலைக் குகைக்குள் நுழைந்தான். கால யவனனும் கூடவே உட்புகுந்தான்.

அந்தக் குகைக்குள்ளே வெளிச்சமே இல்லை. அங்கே ஒருவன் படுத்திருக்கக் கண்டு அவனே கண்ணன் என்று உதை கொடுத்தான் கால யவனன். உறங்கிக் கொண்டிருந்த மகா வீரன் தீயெழ விழித்தான். அந்தப் பார்வையிலேயே யவனன் எரிந்து போய்விட்டான். அத்தகைய வீரனான முசுகுந்தன் தன் உறக்கத்தைக் கலைப்பவர்கள் ஒரே பார்வையில் வெந்து நீறாகவேண்டுமென்று வரம் பெற்றிருந்தானாம். கால யவனனுடைய மரணம் துவாரகை வாசிகளுக்கு மிக்க மகிழ்ச்சி யளித்தது.

## ருக்மிணி சுயம்வரமும் உஷா கலியாணமும்

கோகுலத்திலும் பிருந்தாவனத்திலும் பாலகோபாலனாக வாழ்க்கை நடத்தியவன் துவாரகையில் இராஜகோபாலனாக வாழ்வதைக் காண்கிறோம். தான் முடி சூடாவிட்டாலும் அரண்மனையிலும் ராஜ சபையிலும் வாழ்ந்து அரசர்களின் விவகாரங்களிலும் தலையிட்டுத் தருமத்தை நிலைநிறுத்த விரும்புகிறான். இந்த நிலையில் நடைபெறும் முதலாவது பெரு நிகழ்ச்சிதான் ருக்மிணி கலியாணம்.

விதர்ப்ப நாட்டைக் குண்டினம் என்ற தலைநகரிலிருந்து ஆண்டு வந்த ஒரு மன்னனுக்குப் புதல்வி ருக்மிணி. இவளுக்கு ருக்மி என்ற சகோதரன் உண்டு. ருக்மி துஷ்டன். ருக்மிணியோ அழகும் நல்ல குணமும் உள்ளவள்; கண்ணனையே காதலித்தாள். ருக்மியோ சிசுபாலன் என்ற துஷ்ட அரசனுக்குத் தன் சகோதரியை மணம் செய்துகொடுக்க விரும்பினான்.



ருக்மிணி சுயம்வரம் நடைபெறும் என்று ருக்மி பல நாட்டு அரசர்களையும் வரவழைத்திருந்தான். சுயம்வரத்தை வியாஜமாகக் கொண்டு அவள் சிசுபாலனுக்கே மாலை சூட்ட வேண்டுமென்று பயமுறுத்தியிருந்தான். அவளோ கண்ணனுக்குத் தூது அனுப்பி ஒரு கடிதமும் அனுப்பி யிருந்தாள். கலியாணத்திற்கு முந்தின நாள் தேவியைத் தரிசிக்கக் கோவிலுக்குச் செல்லும் போது கண்ணன் தன்னைக் கவர்ந்து செல்லவேண்டும் என்பது தன் கடிதத்திலே ருக்மிணி தெரிவித்திருந்த அபிப்பிராயம்.

சிசுபாலன் தன்னுடைய துஷ்ட நண்பர்களான தந்தவக்கிரன் ஜராசந்தன் முதலானவர்களுடன் வந்திருந்தான். கோவிலுக்குப் போய்த் திரும்பிய ருக்மிணியைக் கண்ணன் கவர்ந்து இரதத்தில் வைத்துக்கொண்டு புறப்பட்டுப் போன செய்தி காதில் விழுந்ததும், சிசுபாலனும் நண்பர்களும் விரைந்துபோய்க் கண்ணனைத் தடுத்துப் போர் புரிந்தார்கள். ருக்மியும் அவர்களுக்கு உதவி புரிந்தான். ஆனால் கண்ணனும் பலராமனும் இவர்களையெல்லாம் முதுகு காட்டி ஓடச் செய்தனர். ருக்மிணி கல்யாணம் சிறப்பாகத் துவாரகையில் நடைபெற்றது.

நப்பின்னை மணத்தைக் குறிப்பிடுவதுபோல் ருக்மிணி கலியாணத்தையும் குறிப்பிடுகிறார் பெரியாழ்வார். அந்தக் கலியாண நடபுடல்களையும் ஞாபகப்படுத்துகிறார். ருக்மிணிக்குப் பிள்ளையாகப் பிறந்த பிரத்யும்னன் கண்ணனின் அருளால் அறப் பற்று உள்ளவனாகவும் தீரனாகவும் விளங்கினான். இவனுடைய புதல்வனான அநிருத்தனைத்தான் பாணாசுரன் என்ற அசுரனின் பெண்ணான உஷாதேவி காதலித்தாள்.

உஷா கலியாணம் ருக்மிணி கல்யாணம் போல் பௌராணிகர்களையும் கவிகளையும் வசீகரித்திருக்கிறது. உஷாதேவி தன் கனவு ஒன்றில் ஒருவனைக் கண்டு காதலித்து அவனையே கணவனாக அடைய விரும்பியதும், அவளுடைய உயிர்த் தோழியான சித்திரலேகை அவள்வருணித்தபடியே அவனைச் சித்திரித்துக் காட்டியதும், 'இவரே எனக்குக் கணவர்!' என்று உஷா உறுதியாகச் சொன்னதும், இவன் அநிருத்தன்தான் என்று கண்டுபிடித்துத் துவாரகையிலிருந்து இவனைச் சித்திரலேகை தன் யோக சக்தியால் பாணாசுரனுடைய சோணிதபுரத்துக்குக் கொண்டுவந்ததும், பாணாசுரன் அநிருத்தனைப் பிடித்துச் சிறைப்படுத்தியதும், அதனால் கண்ணனுக்கும் பாணாசுரனுக்கும் போர் விளைந்ததும், பாணாசுரனின் ஆயிரம் தோள்களைக் கண்ணன் துணித்ததும், பிறகு அவனுக்கு அருள் புரிந்ததும், கடைசியாக உஷா-அநிருத்த கலியாணம் சிறப்பாக நடைபெற்றதும் புராண உலகிலும் கவிதை யுலகிலும் பிரசித்தமான செய்திகள்.

## சத்தியபாமை மணம்

ருக்மிணியின் சக்களத்தியாகிய சத்தியபாமையும் கதைகளில் பிரசித்தி பெற்றிருக்கிறாள். இவள் துவாரகையில் வசித்த சத்தி

ராஜித் என்ற யாதவனுடைய புதல்வி. இவனுக்குச் சியமந்தகம் என்ற ஒரு சிறந்த மணி கிடைத்திருந்ததாம். கண்ணன் இந்த மணியை உக்கிரசேன மகாராசாவுக்கு வாங்கிக்கொடுக்க விரும்பினன். சத்திராஜித் இணங்கவில்லை.

ஒரு நாள் சத்திராஜித்தின் சகோதரன் சியமந்தக மணியை அணிந்துகொண்டு வேட்டைக்குப் புறப்பட்டான். போனவன் திரும்பி வரவில்லை. சத்திராஜித்துக்குக் கண்ணன் மேல் சந்தேகம். கண்ணனும் சில நண்பர்களும் அந்தக் காட்டுக்குப் போய் அடிச் சுவடுகளைச் சோதித்துத் தொடர்ந்து போய், காணமற் போனவன் தான் ஏறி வந்த குதிரையுடன் மாண்டுகிடப்பதைக் கண்டார்கள். அருகே ஒரு சிங்கத்தின் அடிச்சுவடுகளையும் கண்டுபிடித்தார்கள்.

தொடர்ந்து சோதித்துப் பார்த்ததில் சிங்கம் மாண்டு கிடப் பதையும், அருகே ஒரு முரட்டுக் கரடியின் அடிச்சுவடுகளையும் கண்டுபிடித்தார்களாம். அந்தச் சுவடுகள் ஒரு குகையை நோக்கி இவர்களைச் செலுத்தின. கண்ணன் தன்னுடைய நண்பர்களைக் குகையின் வாசலில் விட்டுவிட்டுத் தனியாக உள்ளே புகுந்தான்; கரடியைக் கண்டான். கண்ணன்-கரடி யுத்தம் வெற்றி தோல்வி இல்லாமல் பல தினங்கள் நடந்ததாகப் பாகவத புராணம் கூறுகிறது.

'இவன் யார்? தசரத ராமனைப்போல் போரிடுகிருனே!' என்று எண்ணமிட்டதாம் களைத்துப்போன கரடி. ஏன், அந்த இராமாயணப் போர் இந்தக் கரடிக்கு நேரில் தெரிந்த காரியம்தான். ஜாம்பவான் என்ற அந்தக் கரடி ராஜாவேதான்!

ஜாம்பவான் தன் புதல்வியாகிய ஜாம்பவதியைக் கண்ணனுக்கு மணஞ் செய்துகொடுக்க இசைந்து, மகளுடன் மணியையும் வரதட்சிணையாகக் கொடுத்துவிட்டான். கண்ணன் உடனே சியமந்தக மணியைச் சத்திராஜித்திடம் கொண்டுபோய்க் கொடுத் தான். சத்திராஜித் பச்சாத்தாபமும் பரமசந்தோஷமும் ஒருங்கே அடைந்து தன் அருமைப் புதல்வியாகிய சத்தியபாமையை மணஞ் செய்து கொடுத்தான். சியமந்தகமணியை வரதட்சிணையாகக் கொடுக்க விரும்பியதும் மாப்பிள்ளை 'வேண்டாம்' என்று மறுத்து விட்டானும். ருக்மிணியை மகாலட்சுமியின் அவதாரம் என்று சொல்லுகிருர்கள்; சத்தியபாமையைப் பூமிதேவியின் அம்சம் என்கிருர்கள்.

## தீபாவளியின் கதை

நாரத முனிவர் கண்ணனையும் ருக்மிணியையும் சந்தித்து அதிசயமான பாரிஜாத மலர் ஒன்றைக் கண்ணனிடம் கொடுத்தார். ருக்மிணி அம்மலரைச் சூட்டிக்கொண்டு குதூகலமாக அங்குமிங்கும் உலாவிக் கொண்டிருந்தாள். அது கண்ட சத்தியபாமை பொருமை கொண்டாள்; கண்ணனிடம் கோபமும் கொண்டாள். கண்ணன் சத்தியபாமையைத் தனியாகச் சந்தித்து, 'பாரிஜாதச்



செடியையே உன் தோட்டத்தில் நட்டுவிடுகிறேன்; தேவலோகத்தி லிருந்து அந்த அதிசயச் செடியை வேரோடு பறித்து வந்து விடுகிறேன்' என்றெல்லாம் சொல்லி அவளைச் சமாதானப் படுத்தினன்.

கண்ணன் சத்தியபாமையுடன் பேசிக்கொண் டிருக்கும்போதே, தேவேந்திரன் அங்கே வந்து, 'நரகாசுரனுடைய உபத்திரவங்களைப் பொறுக்க முடியவில்லை. உலகத்தை நரகமாக்கி வருகிருனே!' என்று முறையிட்டான்; உடனே கண்ணன் சத்தியபாமையை நோக்கி 'என்ன பாமா! புறப்படலாமா? உன்னைப் படைத் துணையாக அழைத்துச்செல்ல விரும்புகிறேன்' என்று உற்சாகமாய்ச் சொன்னுன். சத்தியபாமை பூரித்துப் போனுள்.

கல் மழை பொழியச்செய்து தன்னை அவமானப்படுத்த விரும்பித் தானே அவமானமடைந்து மனந்திருந்திய அதே இந்திரனுக்காகக் கண்ணன் சத்தியபாமையுடன் தேர் ஏறிப் புறப் பட்டான். நரகாசுரனுடைய நகரத்தை யடைந்ததும் முரன் முதலான அசுரர்களை அங்கே வதஞ் செய்தான். முரனைக் கொன்றதால் முராரி என்ற ஒரு பெயரும் கண்ணனுக்குக் கிடைத்தது. இறுதியில் நரகாசுரனும் கொல்லப்பட்டான். இந்தப் போராட்டத்தில் சத்தியபாமை கண்ணனுக்குச் சாரதியாகவும் படைத் துணைவியாகவும் பேருதவி புரிந்தாள்.

நரகாசுர வதம் முற்றுப் பெற்றதும் கண்ணன் சத்தியபாமையுடன் கருடன் மேல் ஏறிக்கொண்டு விண்ணுலகம் சென்று, அங்கே இருந்த பாரிஜாத மரத்தை வேரோடு பெயர்த்து துவாரகைக்குக் கொண்டுவந்தானும். அந்த மரத்தை வாக்களித்திருந்தபடியே சத்தியபாமை வீட்டுப் புறக்கடைத் தோட்டத்தில் நாட்டி வளர விட்டான் என்பது கதை.

அந்தப் பாரிஜாத மரம் வளர்ந்ததா? சத்தியபாமைக்கு மலர் களைக் கொடுத்ததா? கதைக்கும் வளர்ச்சி உண்டு. 'மரம் வளர்ந்தது; ஆனுல் சாய்ந்து மலர்களை ருக்மிணிக்கே கொடுத்தது!' என்று கதா காலட்சேபங்களில் கூறுவதுண்டு. ஒரு பாரிஜாத மலரைச் சக்களத்தி சூட்டிக்கொண்டாள் என்ற அந்தக் காய்ச்சலுக்கு மருந்து வேண்டாமா? 'மரத்தை உன் தோட்டத்தில் நாட்டி விடுகிறேன்' என்பதுதானே கண்ணன் வாக்கு.

சரி, இந்தக் கதை எப்படித் தீபாவளியின் கதையாகும் என்று அறிய விரும்புகிறீர்கள் அல்லவா? இதைச் சாதாரணமாக நரகாசுரவதம் என்றுதான் சொல்லுகிருர்கள். பாரிஜாத அபஹரணம் என்றும் இதைக் குறிப்பிடுவதுமுண்டு. என்ருலும், தீபாவளியின் கதை என்றும் இதைச் சிறப்பாகக் குறிப்பிடுவதும் பொருத்தம்தான். ஏனென்ருல், தான் சாகும்போது சிறிது மெய்யறிவு பெற்ற நரகாசுரன், 'என்னுடைய மரண தினத்தை மக்கள் குதூகலமாய்க் கொண்டாட வேண்டும். எண்ணெய் தேய்த்துக் 'கங்கா ஸ்நானம்

செய்து மகிழவேண்டும்; தீபவரிசைகளை அழகாக ஏற்றி வைத்து மகிழ்ச்சி கொண்டாட வேண்டும்' என்று வரம் கேட்டானு. தீபாவளி என்ருல் தீபவரிசை என்றுதான் பொருள்.

## போலி வாசுதேவன்

வசுதேவ புத்திரஞன கண்ணனை வாசுதேவன் என்று சொல் கிருேமல்லவா? அந்த நாளில் பௌண்ட்ரக வாசுதேவன் என் பெயருள்ள அரசன் ஒருவன் இருந்தான். முகமன் இயம் பிழைக்கும் மூடர்கள் அவனை நோக்கி 'நீயும் வாசுதேவன்தான் என்று சொன்னுர்கள். அவனும் செருக்குடன் 'நானே வாசுதேவன் என்று மயங்கிச் சங்குசக்கரம் முதலியவற்றையும் அழகாய்ச் செ வித்து அலங்காரமாக அணிந்து கொண்டான்.

பிறகு போலி வாசுதேவன் ஒரு தூதனை அழைத்து, நீ வாசுதேவ கிருஷ்ணனிடம் போய், 'உண்மை வாசுதேவன் வேறே இருக்க " இனிமேல் சங்கு சக்கரங்களை அணிந்துகொள்ளக்கூடாது" என் பயமுறுத்தி வா' என்று கட்டளையிட்டு அனுப்பினுன். கண்ண குறுநகை புரிந்தான். இந்தச் செய்தி கேட்டதும், கருடன் மீது பறந்து சென்ருன். தன் சக்கரத்தைப் போலி வாசுதேவன் மீது ஏவினுன். பொய் வேடமும் போலிச் சங்கு சக்கரங்களும் எரிந்து போக, அந்தத் துஷ்ட அரசன் மாண்டு விழுந்தான்.

★

கோகுலத்திலும் பிருந்தாவனத்திலும் ஜகன்மோகன பால கோபாலனின் லீலைகளைப் பார்த்தோம். கம்ச வதத்திற்குப் பின் கண்ணன் துவாரகைவாசியாகி ஜகன்மோகன ராஜகோபாலஞக விளங்கி மறக்கருணையும் அறக் கருணையும் புரிந்து உலகத்தொன் டாற்றிய வைபவத்தையும் பார்த்தோம் துஷ்டப்பிள்ளை, கள்ளக் கிருஷ்ணன் என்ற நிலையில் கள்ளங்கவடற்ற பாலலீலைகள் நிகழ் ததைக் கோகுலத்திலும் பிருந்தாவனத்திலும் கண்டோம். வட மதுரையிலும் துவாரகையிலும் நாம் காணும் கண்ணனே ராஜ தந்திரியாகவும் காட்சியளிக்கிருன்.

கோகுலத்திலும் பிருந்தாவனத்திலும் வெண்ணெய் திருடிய கள்வன் உள்ளம் திருடிய கள்வஞகவும் தன்னைக் காட்டிக்கொள் கிருன். இது பாகவத கிருஷ்ணனின் உச்சநிலை. துவாரகை வாசியோ பாரதகிருஷ்ணஞகி ராஜ தர்மத்தையும் பொதுவாகத் தருமத்தின் பல்வேறு அம்சங்களையும் உருவாக்கப் போகிருன். கீதாசாரியனை அந்த உச்ச நிலைக்கு விதையைக் கோகுலத்திலும் பிருந்தாவனத்திலும் காண்பது போல், துவாரகையிலும் காண்கி ருேம். 'துவாரகை வாசியே!' என்றுதான் பாஞ்சாலியும் சரணம் அடைந்து துயில் வளரப்பெறுகின்ருள்.



# 8. பாரத கிருஷ்ணனும் கீதாசாரியனும்

மகாபாரத காலத்தில் கண்ணன் வாழ்ந்தான் என்பது பிரசித்த மான செய்தி. அந்தத் தாயாதிச் சண்டையில் கண்ணன் பாண்டவர் கட்சியை ஆதரித்துத் தன்னுடைய ராஜ தந்திர முயற்சிகளால் தருமத்தை நிலைநிறுத்தினுன் என்பதும் பிரசித்தமானது. கண்ண னுடைய அத்தைதான் பாண்டவர்களின் தாயான குந்திதேவி. கண்ணன் பீஷ்மரிடம், 'திருதராஷ்டிரனே குருடன். பாண்டுவேஅரசு புரிந்து வந்தான். பாண்டு புத்திரஞன தருமபுத்திரன் பாண்டவர் கௌரவர் என்ற அரசிளங்குமரர்களில் மூத்தவன். குருநாட்டின் தலைமை தாங்க ஆற்றலும் அறப்பற்றும் வாய்ந்தவன். எனவே தருமனை யுவராஜா ஆக்க வேண்டும்' என்று ஆலோசனை கூறிய தாகவும், பீஷ்மரும் பிறரும் இசைந்து தருமனுக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகம் செய்ததாகவும் மகாபாரதம் தெரிவிக்கிறது.

துரியோதனனுடைய துஷ்டபுத்தி தருமனுடைய தரும புத்தியை வெறுத்தது; கண்ணனுடைய தலையீட்டையும் அறவே வெறுத்தது. கௌரவர்கள் சதியாலோசனை செய்தார்கள். ஒத்து வாழத்தெரியாமல், காண்டவப் பிரஸ்தம் என்ற பாழடைந்த நகரில் போய்த் தருமன் ஆட்சி செலுத்தலாம் என்று சொல்லி இவரையும் ஒதுக்கி வைத்தார்கள். பாண்டவர்களோ கண்ணன் அருளாலும் தங்கள் நன்முயற்சிகளாலும் பழைய நகரைப் புதுப்பித்தார்கள்; தேவேந்திரனுடைய பொன்னகரம்போல் விளங்கச் செய்தார்கள். இந்திரப் பிரஸ்தம் என்ற புதுப்பெயரும் இட்டு வைத்தார்கள். அற வழியில் செல்வத்தைப் பெருக்கிக்கொண்டு, தங்கள் அரசையும் உறுதிப்படுத்திக் கொண்டார்கள்.

அறத்தில் வேரூன்றிப் படர்ந்தது பாண்டவ ராஜ்யம். ராஜசூய யாகம் செய்து அரசைப் பேரரசாக்கிச் சக்கரவர்த்தியாகத் திகழ்ந்து அறம் வளர்க்க வேண்டும் என்று ஆசைப்பட்டான் தருமன். அதற் குத் தம்பிமார் தோள்வலியும் கண்ணபிரானின் அருள்வலியும் பெருந்துணையாக அமைந்தன. ஆனுல் அசுரசக்திகள் துரியோதனன் சிசுபாலன் ஜராசந்தன் முதலிய துஷ்டர்கள் வாயிலாக வேலை செய்து வருகின்றன என்பதை அறியாதவனு கண்ணன்? பாரதப் போர் நடந்தே தீரும் என்பது கண்ணனுக்குத் தெளிவுதானே. அதற்கு முன் ஜராசந்தனும் சிசுபாலனும் அழிவதே நலம் என்று திட்ட மிட்டான். ராஜசூயயாகத்திற்கு முன் ஜராசந்தனும், யாககாலத்தில் சிசுபாலனும் அழிய வேண்டும் என்பது கண்ணனின் திருவுள்ளம்.

## இருவர் அழிவு

ஜராசந்தனுல் ராஜசூய வேள்விக்கு இடையூறு ஏற்படலாகாது என்று கண்ணன் பாண்டவர்களிடம் சொல்லி, அர்ச்சுனனையும் பீமனையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு ஜராசந்தனுடைய மகத

ராஜ்யத்திற்குப் போனான். மூவரும் மாறுவேடம் பூண்டு போய்ச் சேர்ந்தார்கள். எனினும் ஜராசந்தன் வேடங் கண்டு மயங்கவில்லை; 'உங்களைத் தெரிந்துகொண்டேன்; வந்த நோக்கத்தையும் ஊகித்துக் கொண்டேன்' என்றான்.

அசுர சுபாவம் உள்ளவனாயினும் ஜராசந்தன் ஒருவகை யுத்த தர்மத்தை அனுஷ்டித்தே இவர்களுடன் போர் புரிய விரும்பினான். கொள்ளைக்காரர்களும் ஒருவகை நியமத்தைக் கைக்கொள்வது போல் அசுரர்களும், கொடிய அரசர்களும் சில சமயங்களில் நடந்து கொள்வதுண்டு. ஜராசந்தன் கண்ணனை நோக்கி, 'உங்களில் ஒருவனுடன் நான் மற்போர் புரிவேன்' என்றான். தன் படைப் பலத்தைக் கொண்டு மூவரையும் சிறைப்படுத்தி யிருக்கலாம்; ஆனால் அவன் அப்படிச் செய்யவில்லை.

'வடமதுரை விட்டுத் துவாரகைக்கு ஓடிப்போன பயங்காளி' என்று கண்ணனை ஒதுக்கி வைத்தான். சிறு பிள்ளை என்று அர்ச்சுனனையும் ஒதுக்கினான். பீமசேனனைச் சுட்டிக் காட்டி, 'இந்தத் தடியனை மற்போருக்கு அழைக்கிறேன்' என்றான். மற்போர் நடந்தது. இந்தப் போரில் கண்ணன் குறிப்பாக உணர்த்திய ஒரு தந்திரத்தைப் பயன்படுத்திக்கொண்டுதான் பீமன் வெற்றி பெற்றான்.

இந்தக் கதையில் ஜராசந்தன் ஒருவகை நியமத்துடன் நடந்து கொள்வது போலவும், கண்ணன் சூழ்ச்சி செய்வது போலவும் தோன்றுகிறதல்லவா? இத்தகைய தந்திரங்களைப் பாரத கிருஷ்ணன் மேற்கொண்டு தருமத்தை நிலைநிறுத்துகிறான் என்றே வியாசர் தெரிவிக்கிறார். ஜராசந்தன் உயிர் துறந்ததும் அவனுடைய மைந்தனுக்கே முடி சூட்டுகிறார்கள்; மகத ராஜ்யத்தைத் தங்கள் ராஜ்யங்களுடன் சேர்த்துக் கொள்ளவில்லை. பகைவனை நண்பனாக்கிக் கொள்ளும் முறையில் இந்த முடிசூட்டு விழா இன்றியமையாததாகிறது.

மூவரும் இந்திரப் பிரஸ்தத்திற்குத் திரும்பி வந்ததும் இராஜசூய வேள்வி நடைபெறுகின்றது. தருமன் இந்த வேள்வியில் கண்ணனுக்கே முதன்மையான இடம் தருகிறான். வேள்வியில் இந்தச் செயலை 'அக்ர பூஜை' என்று கூறுவதுண்டு. 'அக்ரம பூஜை இது!' என்று வெறுக்கிறான் துரியோதனன். இந்த அபிப்பிராயம் அரசர்களிடையே பரவுகிறது. சிசுபாலன் முகம் சிவக்க மீசை துடிக்கக் கண்ணனைப் பழித்துப்பேசுகிறான்; கண்ணனோடு போர் புரியவும் துணிந்து முற்படுகிறான். இந்தப் போரில், வேள்விச்சாலையை இரணகளமாக்க முயன்ற சிசுபாலன் வதமாகிறான்.

### கண்ணனும் பாஞ்சாலியும்

இராஜசூயம் இனிது நிறைவேறியது. ஐவர் புகழ் மேலோங்குகிறது; எங்கும் பரவுகிறது. எப்படியாவது இவர்களை அழித்துவிட வேண்டும் என்று துடிக்கிறான் துரியோதனன். ஆனால் அர்ச்சுனனுடைய வில்லுக்கும் பீமனுடைய கதைக்கும் ஈடு கொடுப்பது எப்படி? சூதும் ஒருவகைப் போர்தானே என்கிறான் சகுனி.



சகுனி மாமாவின் ஆலோசனைக்கு இணங்கச் சூழ்ச்சி நடக்கிறது; சூது போரும் நடக்கிறது. தருமன் நாடு நகரம் முதலியவற்றைத் தோற்றுக்கொண்டே வந்து தம்பியர்களின் உரிமையையும் பறிகொடுக்கிறான். தன் உரிமையையும் பந்தயம் வைத்துத் தோற்றுப்போகிறான். கடைசியாகப் பாஞ்சாலியையும் பணயம் வைத்துத் தோல்வியடைகிறான்.

துரியோதனன் துச்சாசனனை ஏவிப் பாஞ்சாலியைச் சபைக்கு இழுத்துவந்து துகில் உரியும்படி ஏவுகிறான். இந்த அநியாயத்தைப் பார்த்தும் தருமன் தன் சகோதரர்களை அடக்கி வைத்துக்கொண்டிருக்கிறான். பீஷ்மர் முதலானவர்களும் சும்மா இருக்கிறார்கள். விதுரனும், துரியோதனனின் தம்பிமாருள் ஒருவனான விகர்ணனுமே வாய் திறந்து கண்டிக்கிறார்கள். இந்தக் கண்டனங்களைத் துரியோதனனா லட்சியம் செய்கிறவன்?

பாஞ்சாலியின் கதிதான் என்ன? உதவியற்ற நிலையில் கண்ணனைத் தியானிக்கிறாள். 'துவாரகை நாதனே! நீதான் கதி' என்கிறாள். துகில் வளர்கின்றது; வளர்ந்துகொண்டே இருக்கிறது. 'பொய்யர் தம் துயரினைப் போல், நல்ல புண்ணியவாளர் தம் புகழினைப் போல்' துகில் வளர்ந்து கொண்டிருந்ததாக வருணிக்கிறார் பாரதியார்.

> பார்அரசர் துகில்உரியப்
> பரிதவிக்கும் ஒருதெரிவை
> சேர்துவரை நகர்கருதிச்
> சிதை(வு)ஒழிந்தாள் எனஉரைப்பர்

என்று இக் கதையை மனோன்மணீய ஆசிரியரும் குறிப்பிடுகிறார்.

திரௌபதி (பாஞ்சாலி) கண்ணனைச் சரணமடைந்து பேறு பெற்ற கதையைத் திவ்வியப் பிரபந்தமும் குறிப்பிடுகிறது. திரௌபதி சரணாகதி என்று இக் கதையை வைணவர்கள் பெரிதும் பாராட்டுகிறார்கள். காலட்சேபக்காரர்களுக்கு இதில் ஈடுபாடு அதிகம். பாரதியாரும் இதன் ஜீவசக்தியை உணர்ந்து, கண்ணன் அருளால் பாஞ்சாலிக்குத் துகில் வளர்ந்த அற்புதத்திலே பாரத நாட்டின் தேய்ந்த உரிமைகள் வளரும் அதிசயத்தை ஒருவகைத் தீர்க்கதரிசனமாகக் கண்டு காட்டியிருக்கிறா ரல்லவா?

### பாண்டவர் தூதன்

இராஜசூய வேள்வியில் தருமன் கண்ணனுக்கே முதன்மை தந்திருந்தும், பாஞ்சாலி கண்ணனையே தெய்வமாகத் தியானித்து அற்புதமாகத் துகில் வளரப் பெற்றிருந்தும், கண்ணன் பாண்டவர்களின் தூதனாகும் எளிமை நிலையை மேற்கொள்வதையும் காண்கிறோம். வனவாச காலத்திலும் கண்ணனின் அருளே தோன்றாத்

துணையாக ஐவரையும் பாஞ்சாலியையும் காத்து வந்தது. கண்ணன் வெளிப்படையாக வந்து உதவிய சந்தர்ப்பங்களும் உண்டு. எனினும் இந்தக் கண்ணனுக்குத் தன் 'கழுத்திலே ஓலை கட்டிக் கொண்டு' தூது போவதில்தான் என்ன ஆசை!

துரியோதனன் தூதன் சொன்ன வார்த்தைகளை அலட்சியம் செய்துவிடுகிறன். துஷ்டபுத்தியால் தூதனைக் கொல்லவும் முயற்சி செய்கிறன். அந்த முயற்சி படுதோல்வி அடைகிறது. கண்ணன் விசுவரூபம் எடுக்கிறன். அந்தப் பெரிய மேனி 'அண்டம் ஊடுருவப் பெருந்திசை அடங்கிட நிமிர்ந்து' நின்றபோதும், துரியோதனன் அஞ்சிவிடவில்லை. அது ஒருவகை இந்திரஜாலம் என்றே நினைத்துவிடுகிறன். 'ஊர் ஒன்ருவது கொடு' என்று வற்புறுத்திய கண்ணனை நோக்கி, 'ஈ இருக்கும் இடமும் கொடேன்!' என்று முழக்குகிறன்.

### கண்ணனு? படையா?

தூது தோற்றது. போர்ப் பறை முழங்கப் போகிறது. இரு கட்சியினரும் படைத் துணை தேடுகிறர்கள். பாண்டவரைப்போல் கௌரவர்களும் கண்ணனிடம் வந்து 'எங்களுக்குப் படைத் துணை வேண்டும்' என்கிறர்கள். பாண்டவர்களின் பிரதிநிதியாக அர்ச்சுனன் கண்ணனிடம் வருகிறன். கௌரவர்களின் பிரதிநிதியாகத் துரியோதனனே வந்துவிடுகிறன். ராஜ தந்திரியான கண்ணனுக்குத்தான் என்ன சங்கடமான நிலைமை இப்போது!

ஆனல் கண்ணன் சிறிதும் கவலைப்படவில்லை. அர்ச்சுனன் உள்ளத்தை அறிந்திருந்ததுபோல் துரியோதனன் உள்ளத்தையும் அறிந்திருக்கிறனல்லவா? உறங்குவதுபோல் இருக்கிறனு? உறங்கத்தான் செய்கிறனு? கண்ணனுடைய உறக்கம் அறிதுயில் தானே!

செருக்கு மிகுதியாக உள்ள துரியோதனன் தலைமாட்டில் ஜம்மென்று அமர்ந்திருக்க, விநயமாகக் கால்மாட்டில் வந்து நிற்கிறன் அர்ச்சுனன். கண்ணை விழித்ததும் கண்ணன் அர்ச்சுனனைத்தானே பார்க்க முடியும்? 'கண்ணு! நீ படைத் துணையாக வேணும்' என்கிறன் அர்ச்சுனன்.

துரியோதனனும் கண்ணனிடம் படைத் துணை கேட்கிறன். 'அர்ச்சுனனுக்கு நான் படைத் துணை; முதல் முதல் வாக்களித்து விட்டேன். எனவே உனக்கு என் படைகளைத் துணையாக அனுப்பி வைக்கிறேன்,' என்று பதில் சொல்லுகிறன் கண்ணன். 'பழம் நழுவிப் பாலில் விழுந்து, அதுவும் வாய்க்குள் விழுந்து விட்டது!' என்றே இறுமாந்து போகிறன் துரியோதனன். ஏனென்றல், கண்ணன் தான் பாண்டவருக்குத் துணையாகிய போதிலும் 'படை எடேன் அமரில்!' என்றும் சொல்லி விடுகிறன்.



துரியோதனனுக்கு ஸ்தூல சக்தியில்தான் என்ன நம்பிக்கை! அர்ச்சுனனுக்கோ 'கண்ணன் இருக்கும் இடத்திலேதான் வெற்றி' என்ற நம்பிக்கை! இந்த இருவகை மனநிலைகளையும் கண்ணன் எவ்வளவு தெளிவாகத் தெரிந்திருக்கிறன்!

### பார்த்தசாரதி

நிராயுதபாணியான கண்ணன் அர்ச்சுனனுக்குச் சாரதியாகிறன். தூதனுகிய எளிமை இப்போது சாரதியாகவும் தன்னை வெளியிட்டுக்கொள்கிறது. இந்தச் சாரதி தன் தொழிலைத்தான் எவ்வளவு நன்ருக மேற்கொண்டு செய்திருக்கிறன்! அதற்கே பிறந்தவன்போல், அதிலேயே வளர்ந்தவன் போல், சாரதித் தொழிலைச் செய்து முடிக்கிறன்.

கோல் பிடித்துக் குதிரையோட்டிய இந்த வைபவத்தில் பெரியாழ்வார் ஈடுபடுவதைக் காண்கிறேம். இந்தப் பணியில் ஒரு ருசிகரமான விவரத்தையும் இவர் தமது பாட்டிலே சாசனம் செய்து வைத்திருக்கிறர். இந்தச் சாசனத்திலே கண்ணனுக்கு உள்ள ஜீவகாருணியமும், குதிரைகளைப் பற்றிய அறிவும் பழக்கமும் நன்கு புலனுகின்றன. பார்த்தனுக்கு மட்டுமா இந்தச் சாரதி பணி செய்கிறன்?—குதிரைகளுக்கும் தேவை அறிந்து பணி செய்கிறனும்.

அர்ச்சுனனுடைய தேர்க் குதிரைகள் தண்ணீருக்கு விடாய்த்து இளைத்து நின்றுவிடுகின்றன. அந்தக் குதிரைகளின் தாகத்தை அப்படியே உணர்ந்து கொள்கிறன் கண்ணன். நீருக்கு என்ன செய்வது? அஸ்திரம் ஒன்றல் நிலத்திற்குக் கீழுள்ள ஒரு 'நீர் நரம்பி'லிருந்து தண்ணீரை வெளியில் கிளப்பிவிடுகிறன். அந்த நீரில் குதிரைகளை ஊட்டித் தரையிலே புரட்டி எழுப்பித் தேரிலே மறுபடியும் பூட்டிக் கொண்டு வந்துவிடுகிறனும். இறைவனுடைய அற்புத எளிமைக்கும் கருணைக்கும்தான் எத்தகைய சான்று, பாருங்கள்!

### பகவானுக்கும் பட்சபாதமா?

'மாடு மேய்ப்பதில் கண்ணனுக்குத் திறமை அதிகம்' என்றுதான் அர்ச்சுனன் கேள்விப்பட்டிருந்தான்; 'அதே திறமை குதிரைகளைப் பேணுவதிலும் காணப்படுகிறதே!' என்று அதிசயித்தான் இப்போது. மாயக் கண்ணன் மாடுகளையும் குதிரைகளையும் காப்பதற்கு மட்டுமா தோன்றியிருக்கிறன்? மனிதர்களையும் பேணிக் கருணை புரிய வந்திருக்கிறன். அறக் கருணையாலும் மறக் கருணையாலும் மக்களைப் பேணிக் காப்பாற்ற வந்திருக்கும் கண்ணனுடைய கருணை வான மழைபோல் அனைவருக்கும் உரியதாகும் என்பதை ஞானிகள் அறிவார்கள். ஆனல் அர்ச்சுனன் 'பார்த்தசாரதிக்குப் பொதுவாகப் பாண்டவர்களிடத்திலும், சிறப்பாகத் தன்னிடத்திலும் அபிமானம் அதிகம், பட்சபாதமும் உண்டு' என்றே நம்பியிருக்க வேண்டும்.

'அடியார்களுக்குப் பட்சபாதம் செய்பவன்தான்' என்று கூறத்தக்க செயல்களையும் கண்ணன் செய்து அன்பர்களைக் காப்பாற்றுகிறான் என்பர். அர்ச்சுனனுடைய மகனான அபிமன்யுவை ஜயத்திரதன் கொன்றுவிட்டான். 'அந்த ஜயத்திரதனை மறுநாள் சூரியாஸ்தமனத்திற்குள் நான் கொன்றுவிடுவேன்' என்று அர்ச்சுனன் சபதம் செய்தான். அந்த வாக்கைக் காப்பாற்றுவதற்காகக் கண்ணன் தன்னுடைய சக்கரத்தால் சூரியனை மறைத்தான் என்பதும், அஸ்தமனமாகிவிட்டதே என்று எதிரிகள் ஜயத்திரதனை வெளிக் கொணர்ந்ததும், உடனே சக்கரத்தை விலக்கிச் சூரியனைக் காட்டி அர்ச்சுனனால் ஜயத்திரதனைக் கொல்வித்ததும் மகாபாரதப் பிரசித்தமான செய்திகள்.

இத்தகைய செயல்களை 'மாமாயனின் மாயச் செயல்கள்' என்று நம்பிப் பக்தர்கள் திருப்தியடைவார்கள். பெரியாழ்வார் 'ஆழி கொண்டு அன்று இரவி (சூரியன்) மறைப்பச் செய்த்திரதன் தலையைப் பாழில் உருள'ச் செய்தான் என்று பாடியிருப்பது சிந்திக்கத் தக்கது.

### கீதாசாரியன்

பாண்டவ சேனையும் கௌரவ சேனையும் முதல் நாள் யுத்தத்துக்காக அணிவகுத்து நிற்கும் நிலையில் அந்த இரு திறத்துப் படைகளையும் அர்ச்சுனன் நன்றாகப் பார்க்கக் கூடிய ஓர் இடத்தில் இரதத்தைக் கொண்டுவந்து நிறுத்துகிறான் பார்த்தசாரதி. அப்போது அர்ச்சுனனுக்கு உள்ளம் கலங்குகிறது. புத்தி மயங்குகிறது. மறுபடியும் காட்டிற்கே போய்விடலாம் என்றுகூடத் தோன்றுகிறது. இந்த நிலையை 'இழிவான இதய துர்ப்பலம்' என்று குறிப்பிடுகிறான் கண்ணன். இந்தத் துர்ப்பலத்தைப் போக்கி ஞான சக்தியை அர்ச்சுனனுக்கு ஊட்டுவதற்காகத்தான் பார்த்தசாரதி கீதாசாரியன் ஆகிறான்.

பகவத்கீதை உலகத்திலுள்ள சிறந்த ஞான நூல்களில் ஒன்று என்பதை உலகப் பேரறிஞர்கள் அறிந்திருக்கிறார்கள். உலகத்திலேயே மிகச் சிறந்த சமரச ஞான நூல் இதுதான் என்று கருதுவோரும் உண்டு. அர்ச்சுனனுடைய இதய துர்ப்பலத்தைப் போக்கிய இந்நூல் இன்றும் எல்லாருக்கும் இதயத் தளர்ச்சியைப் போக்கிக் கடமையுணர்வை உறுதிப்படுத்தி ஒரு நல்ல பெருவழி காட்டக் கூடியதுதான். அண்மையில் காந்தியடிகளுக்கும் சத்தியாக்கிரகப் பெரும் போரில் படைத் துணையாக உதவியது பகவத்கீதை என்பதை அறியாதார் யார்?

# 9. கண்ணன் கதை

## ஒரு முழு நோக்கு

அழியா அழகு இராமனுக்கு வடிவமாக அமைந்திருந்தது என்று கம்பன் பாடுகிறான். அழியாத அழகு தன் பரிபூர்ண நிலையில்



கண்ணனாக அவதரித்தது என்பது ஸ்ரீ கிருஷ்ணாவதார தத்துவசாரம் என்று கூறுவதுண்டு. கண்ணன் கதைகளைப்போல் இந்திய மக்களின் இதயத்தை ஒருமுகமாக வசீகரித்தவை வேறு எந்தக் கதைகளும் இல்லை என்று கூறலாம். இந்திய சனாதன தர்மத்தின் முழு அழகுடன் முழு நோக்கையும் இக் கதைகளில் காணலாம் என்பர். இந்து சமயத்தின் இரு பெரும் பிரிவுகளில் வைஷ்ணவம் ஸாராம்சத்தில் கிருஷ்ணபக்தி மதம்தானே.

கண்ணனைக் குறித்த கதைகளும் கதைத் துணுக்குகளும் எண்ணிறந்தன. அவை இன்னும் வளர்ந்த வண்ணமாய் இருக்கின்றன. கண்ணனைப் பற்றிய நூல்களும் கணக்கற்றவை; கவிகளும் அனந்தம். தமிழகத்திலோ ஆழ்வார்களின் பாடல்கள் பெரும்பாலும் கிருஷ்ண;பக்தியை உட்பொருளாகக் கொண்டிருக்கின்றன. பாகவதம் விஷ்ணுபுராணம் ஹரிவம்சம் மகாபாரதம் முதலான வடமொழி நூல்களில் காணப்படும் கண்ணன் கதைகளுடன் தமிழகத்திற்கே சிறப்பாக உரிய சில கண்ணன் கதைகளையும் குறிப்புக்களையும் சேர்த்துப் பார்க்கும் போதுதான் ஸ்ரீ கிருஷ்ண சரித்திரத்தின் முழு நோக்கையும் நாம் கண்டுகொள்வது சாத்தியமாகும்.

### ஆழ்வார்கள் கண்ட கிருஷ்ணாவதாரம்

பெரியாழ்வார் பாடல்களில் கண்ணன் பிறந்த அந்த ஆதி ஸ்ரீஜயந்தி வைபவத்தையும் காண்கிறோம். அந்த வைபவங்களைப் பாடும்போதே பெரியாழ்வார் கண்ணனுடைய தெய்வ நிலையையும் நமக்கு நினைவூட்டுகிறார்.

குழந்தையின் அசாதாரண பலத்தைச் சமாளிக்க முடியவில்லையாம் யசோதைத் தாயால். தூளித்தொட்டில் கிழிய உதைக்கும் கால்கள் துஷ்ட அசுரர்களுக்கும் மறக் கருணையால் அருள்புரியப் போகின்றன என்பதை அந்த அம்மாள் அறிந்து கொள்ளவில்லை. 'ஒக்கலில் எடுத்துக்கொண்ட குழந்தை இடுப்பை முறித்துவிடுகிறது' என்று கொஞ்சிப் பேசும் தாய் அதே குழந்தை உலக ரட்சகனாகப் பிறந்திருப்பதை எப்படி அறிவாள்?'ஆசையோடு தழுவிக் கொள்ளும்போதே வயிற்றிலே பாய்ந்து விடுகிறான்!' என்று குழந்தையின் பராக்கிரமம் பேசி, 'மிடுக்கிலாமையால் நான் மெலிந்தேன், நங்காய்!' என்று தன் தோழியிடம் உரையாடும் யசோதை கண்ணனுடைய மிடுக்கும் துடுக்கும் விளையாட்டும் அவதார மூர்த்தியின் திருவிளையாடல்களே என்பதை அறிந்திருக்க முடியுமா?

இப்படிக் கண்ணன் பிறப்பைப் பாடி வரும் பெரியாழ்வார் 'வையம் ஏழும் கண்டாள் பிள்ளை வாயுளே!' என்று கண்ணனுடைய தெய்வத் தன்மையை யசோதையும் அந்தக் குழந்தைப் பருவத்திலே ஒரு சமயம் கண்டுகொண்டதாகக் கூறுகிறார். 'ஒவ்வொரு தாய்க்கும் குழந்தை தெய்வம்தான், ஒரு கிருஷ்ணாவதாரம்தான்!' என்ற மனப்

பான்மையுடன், பக்தமணியின் தெய்விக மனப்பான்மையை இந்த வாக்கிலே காண்கிறோம் அல்லவா?

கண்ணனைத் தம் திருமொழிகளில் தாலாட்டிச் சீராட்டி வளர்க்கிறார் பெரியாழ்வார். கண்ணனுக்கு மானஸீக யசோதை இந்தத் தமிழ் நாட்டுப் பக்தமணி. இந்தப் பெரியாழ்வார் - யசோதைக்குக் கண்ணன் பிள்ளை மட்டும் அல்ல, தெய்வமும்தான். பெரியாழ்வாரின் கிருஷ்ண பக்தியில் தாயுள்ளம் அதிமுக்கிய அம்சமாகும். பெரியாழ்வார் சொல்லும் கதைகள் பாகவத புராணத்திற்கு முற்பட்ட கண்ணன் கதைகள் என்று ஆராய்ச்சியாளர் கருதுவர்.

குலசேகராழ்வார் முதலானவர்களும் கிருஷ்ண லீலைகளைப் பாடியிருக்கிறார்கள். கண்ணன் வெண்ணெய் திருடியுண்ட கதையில் இந்த ஆழ்வார்கள் பரம்பொருளின் பரம எளிமை நிலையைக் காண்கிறார்கள்; கண்டு கண்டு பரவசமாகிறார்கள். இவர்கள் பாகவத கிருஷ்ணனையும் பாரத கிருஷ்ணனையும் பாடுவதுடன் தங்கள் உள்ளத்தினுள்ளே அருள் கூர்ந்து தரிசனம் அளித்த ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவையும் சிறப்பாகப் பாடி யிருக்கிறார்கள். இந்தப் பாடல்களில் கண்ணன் கதைகளைப் பற்றிய ஒருமை யுணர்வும் முழு நோக்கும் நமக்குக் கிடைத்துவிடுகின்றன எனலாம்.

## கிருஷ்ணபக்தியின் சிறப்பியல்பு

இந்து தருமத்தின் சாரமாகவும் சர்வசமய சமரச நூலாகவும் உள்ள பகவத்கீதையின் ஆசிரியன் என்று கருதப்படும் நிலையில் கண்ணனை நாம் பெரும்பாலும் ஆழ்வார்களின் பாசுரங்களில் காண்பதற்கில்லை. ஆனுல் ஆயர்பாடிக் கண்ணனை எல்லா மக்களுக்கும் எல்லாக் குடும்பங்களுக்கும் உரிய கண்ணனுக இப்பாசுரங்களில் காண்கிறோம். தெய்வப் பண்பை மானுடப் பண்பு பெரும்பாலும் மறைப்பதாகவும் இங்கே காண்கிறோம்; சில சமயங்களில் தெய்வப் பண்பு மானுடப் பண்பைப் பீறிக்கொண்டு வெளிப்படுவதையும் காண்கிறோம்.

குழந்தையாகவும் தீராத விளையாட்டுப் பிள்ளையாகவும் மக்கள் உள்ளங்களை வசீகரிக்கும் கண்ணன் காதலனுகவும் ஆண்களோடு பெண்களையும் வசீகரிக்கக் காண்கிறோம். இந்த வசீகர நிலையின் சிகரத்தை ஆண்டாள் பாசுரங்களில் காணலாம். எந்தக் காதல் மோட்ச விரோதி என்று வேதாந்திகளால் கருதப்படுகிறதோ அதே காதல் தன் மகத்தான சக்தியைப் பக்திக் காதலாக்கித் தூய்மை செய்துகொண்டு வானேற வழி தரும் அதிசயத்தைக் காண்கிறோம். ஆண்டாளை உள்ளிட்ட ஆழ்வார்களின் கிருஷ்ண பக்தியிலே.

கிருஷ்ணபக்தியில் காதல் - இன்பம் காண்பதுபோல் பொதுவாக வாழ்க்கை யின்பம் அனைத்தும் கண்டுகொள்ளலாம் என்று கருதுவோர் உண்டு. சங்கீதமும் சிரிப்பும் சமய விரோதிகள் அல்ல. ஆடிக்கொண்டும் பாடிக்கொண்டும் வாழ்க்கை நடத்தி மோட்ச



ஸாம்ராஜ்யத்திலும் பங்கு :கொள்ளலாம் என்ற கொள்கையை வற்புறுத்துவது கிருஷ்ணபக்தியின் சிறப்பியல்பு எனலாம்.

'ஸ்ரீகிருஷ்ணனை நினைத்துப் பார்க்கும்போது காட்டில் இலைகள் சலசலப்பதையும், மேய்ச்சல் - தரையில் மாடுகள் "அம்மா" என்று கத்துவதையும், காட்டாறு சலசலத்து ஓடுவதையும் கேட்பது போலத் தோன்றுகிறது' என்று 'அவதாரங்கள்' என்ற தமது நூலில் டாக்டர் பெஸண்ட் அம்மையார் குறிப்பிடுகிறார். பெற்றோரைச் சுற்றிக் கூத்தடிக்கும் குழந்தைகளின் சிரிப்பொலியும் கேட்பது போலத் தோன்றுகிறதாம் பெஸண்ட் அம்மையாருக்கு. இத்தகைய உணர்ச்சிகளை ஆழ்வார்கள் பாடும் கண்ணன் பாடல்களில் நாம் அனுபவிக்கிறோம்.

தெய்வப் பண்பும் மானுடப் பண்பும் கூடிக் குலாவுகின்றன கிருஷ்ணபக்தியில். வேதம் ஓதிப் பெறுகின்ற பேறு மாடு மேய்க்கும் தொழிலிலும் கிடைத்து விடுகிறது. தொட்டிலாட்டிக் குழந்தையைத் தூங்கப் பண்ணிவிட்டு அந்தக் குழந்தையைக் குனிந்து பார்க்கும் அமைதியான தாயன்பையும் அனுதாபத்தையும் கிருஷ்ணபக்தியில் பார்ப்பதுபோல், காதலின் சூருவளியையும் இங்கே காண்கிறோம். முனிவர்கள் தவத்தால் காணும் கண்ணனை அன்பர்கள் சிறுபிள்ளை - விளையாட்டிலும், காதலர்களின் காதற் பேச்சிலும், மணப்பெண்-மாப்பிள்ளை நிலைகளிலும் கண்டு களிக்கிறார்கள். இத்தகைய கிருஷ்ண பக்தியின் சிறப்பியல்புகளை ஆழ்வார் பாசுரங்கள் இனிது புலப்படுத்துகின்றன.

இச் சிறப்பியல்புகளை உணர்ந்து கொள்வதற்குக் கண்ணனை ராமனுடன் ஒப்பிட்டுப் பார்ப்பதும் நலமாகும். இருவரும் திருமாலின் அவதாரங்கள்; பெரிய அவதாரங்கள். எனினும் இராமன் தொலை தூரத்தில் இலட்சிய புருஷனுக நின்றுகொண்டே நம்மை ஆட்கொள்வது போலத் தோன்றுகிறது. கண்ணனையோ தெய்வம் என்றோ, இலட்சிய புருஷன் என்றோ அஞ்சத் தேவையில்லை.

> தாயி லானைத்
> தழுவும்என் ஆவியே!

என்று அப்பர் சுவாமிகள் கூறும் அந்தக் காதல் - உணர்ச்சி இராம பக்தியைக் காட்டிலும் கிருஷ்ண பக்திக்கு மிகவும் எளிதாகி விடுகிறது. எத்தனை தலைமுறைகளாக இந்துக்களின் இதயங்களைக் கட்டித் தழுவிக்கொண்டு வளர்ந்து வந்திருக்கிறது கிருஷ்ணபக்தி!

குழந்தை - இராமனைக் குறித்து நமக்கு என்ன பிரமாதமாகத் தெரிந்திருக்கிறது? அம்புலி வேண்டி அழுதான் இராமன் என்பது குறித்து வழங்கும் கதைத் துணுக்கைப் போல் வேறென்றைக் கேட்க முடியவில்லை. கோசலை தவழ்ந்து வரும் இராமனை நோக்கிக் கொஞ்சிய தாகத் திருப்புகழில் அருணகிரியார் ஒரு குறிப்பைத் தந்திருக்கிறார். ஆனுல் வால்மீகி ராமாயணத்திலோ, கம்ப ராமாயணத்திலோ

இராமனுடைய குழந்தைப் பருவம் குறித்து இரசிகர் ரஸித்துக் குறிப்பிடத் தக்க செய்தி ஒன்றும் காணப்படவில்லை. சாது ராமனுகவோ, மரியாதை ராமனுகவோதான் குழந்தை - இராமனும் வளர்ந்திருக்க வேண்டும் என்றே ஊகிக்கவேண்டியிருக்கிறது.

ஆனல் கண்ணனுடைய குழந்தைப் பருவத்தைத்தான் எத்தனை கதைகள், எத்தனை கவிதைகள், வருணிக்கின்றன! துஷ்டக் குழந்தைகள் அசாதாரணமாகத் தொந்தரவு கொடுக்கும்போது, பண்பட்ட தாயுள்ளத்திற்கு யசோதை அன்று பட்ட பாடு நினைவிற்கு வருகிறது. குழந்தை - இராமனைப் பற்றி அப்படி ஒன்றும் நினைவு வருவதில்லை தாய்மாருக்கு.

பிருந்தாவனத்தில் நடந்த கிருஷ்ண லீலைகளுக்கோ, இராம சரிதத்திலோ வேறு எந்த அவதார மூர்த்திகளின் சரித்திரத்திலோ ஒப்பு ஒன்றும் காணமுடியாது. எல்லாவற்றுக்கும் மேலாகக் கண்ணன் குழலூதி நிற்கும்போது அந்த இசையைக் காதலித்து, அந்தச் சிறுவனைக் காதலித்து, எல்லாவற்றையும் துறந்து ஓடிவரும் பெண்களைப் பாருங்கள்! பரமாத்மாவுக்காகப் பற்றுகளை முற்றத் துறந்த முனிபுங்கவர்களின் நிலைதான் அந்தப் பெண்களின் நிலையும் என்பது இந்தக் கிருஷ்ண சரிதப் பகுதியின் புதைபொருள். பகவத் கீதையின் உபதேசமும் வித்தில் விருட்சம்போல் இந்த வேய்ங்குழல் ஊதும் சிறப்பில் அடங்கிவிடுகிறது.

'எல்லாவற்றையும் விட்டு என்னையே சரணமாக அடை; விசனிக்கவேண்டாம். நான் உன்னை எல்லாப் பாவங்களிலிருந்தும்விடுவிக்கிறேன்' என்று கீதாசாரியன் கீதையின் சரம (இறுதி) சுலோகத்தில் கூறுகிருன் அல்லவா? 'எல்லாப் பாரங்களையும் என்மேல் போட்டுவிட்டு, நீ கவலையற்று இரு' என்றும் தன்னுடைய நண்பனும் சீடனுமான அர்ச்சுனன் வாயிலாக உலக மக்களுக்குக் கண்ணன் உபதேசிப்பதையும் கீதையின் இறுதிப் பகுதியில் காண்கிறேம். இவ்வளவு உபதேசத்தையும் கண்ணனின் குழல் சொல்லால் சொல்லாமல் இசை வாயிலாகவே உணர்த்தி விடுகிறது. இந்த அதிசயத்திற்கு ஒப்பான ஒரு நிகழ்ச்சி இராமாவதாரத்திலோ, வேறு அவதார புருஷர்களின் கதைகளிலோ காணமுடியாது என்பது கிருஷ்ண பக்தர்களின் கருத்து.

கண்ணனைப்பற்றிக் காடாக வளர்ந்திருக்கும் கதைகளும் அதிசயமானவை; கவிதைகளும் அற்புதமானவை. இந்தக் கவிதைகளை இயற்றியவர்கள் சாதாரணக் கவிகள் அல்லர்; இவர்களைப் பக்த கவிகள் என்று குறிப்பிட்டாலும் போதாது. இவர்களைக் கலாயோகிகள் என்றும் கவியோகிகள் என்றும் குறிப்பிடுவது பொருந்தும். இத்தகைய கவியோகிகளில் ஸ்ரீமத் பாகவதம் (வடமொழியில்) இயற்றிய பெரியாரும் பெரியாழ்வாரைப் போன்ற ஆழ்வார்களும் தலைசிறந்தவர்கள் ஆவர்.

இக் கதைகளும் கவிதைகளும் சென்ற காலத்தைச் சேர்ந்தவைதாமே என்று இலேசாகக் கூறி அவற்றை ஒதுக்கிவிட முயல்வதும்



இயலாத காரியம்தான். பாரதியாரின் கண்ணன் பாடல்களிலும், பாகவதத்துப் பக்தியும் ஆழ்வார்களின் பிரேம பக்தியும் இறங்கி வந்திருப்பது போலத் தோன்றுகிறதல்லவா? ஆகவே, எது பழம் பாட்டு? எது புதுப்பாட்டு? பாரதியாரின் கண்ணன் பாடல்களில் ஆழ்வார்களின் அந்தப் பழைய மணம் கமழ்கிறது என்றல், இந்தப் புதுமை மணத்தையும், இதைக் காட்டிலும் புதுமை மணம் என்று சொல்லத்தக்க 'என்றும் புதுமை' மணத்தையும், ஆழ்வார் பாடல்களில் காணத்தானே செய்கிறேம்.

## முழுச் சித்திரம்

பல இந்திய மொழிகளிலும் கண்ணனைக் குறித்து வழங்கும் பல்லாயிரக் கணக்கான நூல்களிலிருந்தும், பாகவதம், விஷ்ணு புராணம், ஹரிவம்சம், பாரதம், ஆழ்வார்களின் தமிழ்ப் பாடல்கள் ஆகியவற்றிலிருந்தும் கண்ணனுடைய முழுச் சித்திரம் ஒன்றை அகக்கண்ணுக்கு இலக்காக்கிக் கொள்வது இரசிகர்களுக்கும் பக்தர்களுக்கும் இயலாத காரியமன்று. இந்த இலக்கியப்பரப்பிலே சரித்திர மூலங்களும் உண்டு; சரித்திரம் கடந்த கவிதை அம்சங்களும் பாவனு சக்தியின் அம்சங்களும் உண்டு. ஆனல் வரலாற்றுப் பேச்சைக் காட்டிலும் கண்ணனைக் குறித்து வழங்கும் பக்திப் பேச்சுக்களும் கவிதைப் பேச்சுக்களுமே ஸ்ரீ கிருஷ்ண சித்திரத்தை முழுச் சித்திரமாகக் காட்டக்கூடும்.

கிருஷ்ண சரித்திரத்திலே சரித்திர மூலங்களைக் காட்டிலும் கற்பனை விசித்திரங்களும் கவிதைச் சித்திரங்களும் அதிக அளவில் இடம் பெற்றிருக்கின்றன என்பதில் ஐயமில்லை. எனினும் இந்தக் கிருஷ்ண சரித்திரம் இந்தியாவின் இதயத்திலும் மனேபாவத்திலும் ஆழ்ந்து பதிந்து அழியாத அழகுச் சித்திரமாகப் பதிவு செய்யப் பெற்றிருக்கிறது என்று கலையுலக ஆராய்ச்சி மேதையாகிய டாக்டர் ஆனந்த குமாரசுவாமி கூறியுள்ளார். ஆகவே கிருஷ்ண சரித்திரம் இந்திய சரித்திரத்தின் அழியாத பகுதியில் இடம் பெற்றிருக்கிறது என்பதில் ஐயப்பாடு இல்லை.

சரித்திர ஆராய்ச்சியைக் காட்டிலும் அவதார புருஷர்களின் சரித்திரங்களில் பக்தி - மனப்பான்மைக்கும் கவிதையுள்ளத்திற்குமே ஒரு முழுப்பார்வை கிடைப்பது சாத்தியமாகும். இந்த முழு நோக்கிற்குப் பாகவதம் முதலான புராணங்களைக் காட்டிலும் கூட ஆழ்வார்களின் கிருஷ்ண பக்திப் பாடல்கள், கீத கோவிந்தம், நாராயணீயம் முதலியன அரும்பெருந் துணையாகும் என்று கருதலாம்.

ஜயதேவரின் கீத கோவிந்தம் ஆழ்வார்கள் பாடும் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் உள்ள காதலை ராதாகிருஷ்ணரின் காதல் நாடகமாகச் சித்திரித்துக் காட்டுகிறது. ஸ்ரீ கிருஷ்ண கர்ணுமிர்தத்திலும் ராதாகிருஷ்ணரின் காதலைக் காண்கிறேம். இதே காதலை வித்யாபதி முதலான வங்கநாட்டுக் கவிகளும் பாடியிருக்கிருர்கள்;

மீராபாயும் பாடியிருக்கிறாள். பிருந்தாவனம் ஒரு காடல்ல, கிராமமல்ல, மக்கள் மனம்தான் என்று பக்தர்கள் உட்பொருள் கொள்ளும் முறையில் கவிதைகளும் கீதங்களும் பாடப் பெற்றிருக்கின்றன.

இப்பாடல்களிலெல்லாம் மிகையுமில்லாமல் குறையுமில்லாமல் ஸ்ரீ கிருஷ்ண சித்திரத்தை ஒரு முழு நோக்காகக் காண்பதற்கு வழி காட்டுவன, நம் தமிழிலக்கியத்தின் இன்றியமையாத பகுதியான ஆழ்வார்-பாசுரங்களே என்று துணிந்து கூறலாம். இந்தப் பக்தமணிகளுக்கு, உலகம் கோன் இல்லாத மந்தையன்று; அந்தக் கோனும் கண்ணன்தான். 'அரவணை மேல் பேராயன் (பெரிய கோனுர்)' என்கிறார் ஆழ்வார்களில் ஒருவர்.

ஆயர்பாடிக்கு அணிவிளக்கே ஆதியஞ் சோதியுருவில் 'அரவில் துயில் அமர்ந்த வித்து' என்ற (ஆழ்வார்களின்) அரும் பெருங் கொள்கையில், கண்ணன் கதைகளின் ஒருமையும் முழுமையுமான நோக்கின் உச்சியையே எட்டி விடுகிறேமோ என்று தோன்றுகிறது.

# 10. ஸ்ரீ கிருஷ்ணாவதாரம்

## எளிமையாகிய பெருமை

பலராமாவதாரத்திற்குப் பின்னும் கடைசி அவதாரமாகிய கல்கி அவதாரத்திற்கு முன்னும் நிகழ்ந்த ஒன்பதாவது அவதாரம் கிருஷ்ணாவதாரம். ஜயதேவரோ பலராமாவதாரத்தைக் குறிப்பிடாமல் கிருஷ்ணாவதாரத்தையே எட்டாவது அவதாரமாகப் பாடியிருக்கிறார். இவர் புத்தர் பெருமானை ஒன்பதாவது அவதாரமாக்கி இனி வரப்போகும் கல்கி அவதாரத்தைக் கடைசி அவதாரமாகக் குறிப்பிடுகிறார்.

## பெருமையே எளிமைதான்!

இறைவன் துஷ்ட நிக்கிரக சிஷ்ட பரிபாலனம் செய்வதற்காகப் பல்வகை அவதாரங்களும் செய்கிறான். இவற்றில் பத்து முக்கியமானவை; இந்தப் பத்து அவதாரங்களைத் தசாவதாரம் என்கிறோம். அவதார மூர்த்திகளான ராமனும் கிருஷ்ணனும் மக்களுடன் கலந்து அவர்களைத் திருத்திப் பணி கொண்டதைப் போன்ற நிகழ்ச்சிச் சிறப்பை வேறு அவதாரங்களில் காண்பது அரிது. கிருஷ்ணாவதாரத்தின் தனிப்பெருஞ் சிறப்பை இராமாவதாரத்திலும் பார்க்க முடியாது என்பது பக்தர்களின் கருத்து.

அடியவர்க்கு எளிமை கிருஷ்ணாவதாரத்தில் வெளிப்படுவது போல் வேறு எந்த அவதாரத்திலும் வெளிப்படுவதில்லை. தூதுபோன கண்ணனின் எளிமையை இராமபிரானிடத்திலும் காண முடியவில்லை. எனவே, சிறையிருந்தவள் 'ஏற்றம் சொல்வது இராமாயணம்



என்றும், கழுத்திலே ஓலை கட்டிக்கொண்டு தூதுபோன வைபவம் சொல்வது மாபாரதம் என்றும் ஸ்ரீவைஷ்ணவப் பேரறிஞர்கள் கூறுகிறார்கள்.

ஸ்ரீவைஷ்ணவத்தை விசிஷ்டாத்வைதம் என்றும், ஸ்ரீ சங்கராசாரியரின் வேதாந்தக் கொள்கையை அத்வைதம் என்றும் கூறுவதுண்டு. கி. பி. பதினாறும் நூற்றாண்டில் வங்காள தேசத்தைச் சேர்ந்த மதுசூதன சரஸ்வதி என்ற அத்வைத ஞானி ஒருவர் இருந்தார். இவர் சங்கர வேதாந்தத்தைப் பின்பற்றிய பெரியாராக இருந்தும், தமக்குக் கண்ணன்தான் இஷ்டதெய்வம் என்கிறார். 'நாமரூபம் (பெயரும் உருவமும்) இல்லாத பரப்பிரமத்தை நாடுகிறவர்கள் நாடிப் போகட்டும்; எனக்குக் கண்ணனின் எளிமை போதும்' என்ற பொருள்படப் பேசுகிறார்.

## கண்ணன் விஷயமாக உபநிஷதம்

ஸ்ரீ கிருஷ்ணோபநிஷத் என்ற பெயருள்ள உபநிஷதம் ஒன்றும் இருக்கிறது. இது கிருஷ்ணாவதாரத்தின் சிறப்பை வெளியிடுகிறது. பிரதான உபநிஷதங்களுக்குப் பின் தோன்றிய உபநிஷதங்களில் ஒன்றுதான் இது. இந்த உபநிஷதத்தில், ஆண்டவன் மனிதனாகப் பிறக்க இசைந்ததும், முக்திதேவியே யசோதையாகப் பிறந்தாள் என்ற ஒரு செய்தி காணப்படுகிறது.

தேவகியாகப் 'பிரமவித்யா மாயை' பிறந்ததாகவும், வேதம் வசுதேவ ரூபத்தில் வந்ததாகவும் இந்த உபநிஷதம் தெரிவிக்கிறது. வேதத்தின் உட்பொருளே வசுதேவ புத்திரனான வாசுதேவன் என்கிறது. ருத்திர மூர்த்தியே கண்ணனது புல்லாங்குழலாக அமைந்ததாகவும் இந்த உபநிஷதம் தெரிவிக்கிறது.

கோகுலம் என்ற ஆய்ப்பாடி வைகுந்தமே இறங்கி வந்தது தானும். கோகுலத்திலுள்ள மரங்கள் எல்லாம் கண்ணன் இருக்கும் இடத்திலே தவம் புரிந்து பேறு பெறவந்த தவசிகளாம். கோகுலத்தில் அசுரர்களும் வந்தார்களே, அந்த இரகசியம் என்ன? தெரிய வேண்டாமா? எவ்வளவு இரசமாக ஸ்ரீகிருஷ்ணோபநிஷதம் இதற்கு விடை தருகிறது. தவவாழ்க்கைக்கு இடையூறான கோபம் பேராசை முதலான துர்க்குணங்களே அசுர உருவங்கள் கொண்டனவாம். இடையூறு ஏன்?—இடையூற்றுக்கு இடையூறாக நல்வாழ்வு சோபிக்கத்தானே.

ஆதிசேஷன் பலராமனாகத் தோன்றினான் என்றும் இந்த உபநிஷதம் சொல்லுகிறது. பூமிதேவி சத்தியபாமையாக வந்தாள் என்றும், வேதங்களின் ரிக்குகள் ருக்மிணி முதலான தேவிமாராகத் தோன்றினர் என்றும் இதே உபநிஷதம் தெரிவிக்கிறது. கலி புருஷனே கம்சனாக வந்து வதம் செய்யப்பட்டானும். ஏற்கெனவே வதமாகிவிட்டதால் கிருஷ்ண பக்தர்களுக்குக் கலியுகம் இல்லை!

பாற்கடலில் துயிலும் பரம்பொருளே கண்ணனாக வந்தான் என்பதற்கு ஓர் இரசமான சான்றையும் இந்த உபநிஷதம் காட்டு

கிறது. உறியிலுள்ள கலயங்களைக் குழந்தைக் கண்ணன் உடைத்த போது சில கலயங்களில் உள்ள பால் வெள்ளமிட்டு ஓடியதாம். பாற்கடல் வெள்ளத்தில் அறிதுயில் கலைந்து வந்தவன் இவன் என்பதற்கு இப்படிப் பாலை வெள்ளமாக ஓடவிட்டுப் பார்ப்பதும் ஒரு சான்றுதானே!—என்கிறது ஸ்ரீ கிருஷ்ணோபநிஷதம்.

பாற்கடலில் இப் பெருமான் அறிதுயில் அமர்ந்திருக்கிறான் என்பது மட்டுமில்லை; ஒரு குழந்தையாக அங்கே விளையாடிக் கொண்டிருக்கிறான், எப்போதும் விளையாடிக் கொண்டிருக்கிறான் என்றும் தெரிவிக்கிறது ஸ்ரீ கிருஷ்ணோபநிஷதம். பக்தியே கிருஷ்ண லீலை என்கிற விளையாட்டின் களமான பிருந்தாவனமாம்; புத்தியே கிருஷ்ணனது விளையாட்டுச் செயல் - திறன் என்ற கிரியா சக்தியாம்.

### கீதகோவிந்தமும் அவதார தத்துவமும்

ஜயதேவருடைய கீதகோவிந்தமும் கண்ணனின் எளிமையாகிய தனிப் பெருஞ் சிறப்புக்குச் சான்று தருகிறது. கண்ணன், ராதை, சகி(தோழி) என்ற மூவரையே கதாபாத்திரங்களாகக் கொண்டிருக்கிறது கீதகோவிந்தம். இந்தப் பாத்திரங்களில் கண்ணன் பரமாத்மா, ராதை ஜீவாத்மா, தோழி ஆசாரியன்.

புருஷோத்தமனாகிய கண்ணனே புருஷன், ஜீவாத்மாக்கள் எல்லாம் பெண்கள், புருஷோத்தமனுக்குரிய காதலிமார் என்பது கீதகோவிந்தத்தின் அடிப்படைக் கொள்கை. இந்தக் கொள்கையுடன் அதிதீவிர பக்தியை விளக்கத் தோன்றியது கீதகோவிந்தம். ஆழ்வார்களின் பாசுரங்களில் காணப்படும் நாயக நாயகி பாவத்தையும் உட்கருத்தையும் கி. பி. பதினொராம் நூற்றுண்டில் தோன்றிய கீதகோவிந்தத்திலும் காண்கிறோம்.

### கர்ணாமிர்தமும் கோபிகாகீதமும் சகஸ்ரநாமமும்

கிருஷ்ண கர்ணாமிர்தத்திலும் ஸ்ரீகிருஷ்ணாவதாரத்தின் தனிச் சிறப்பு வற்புறுத்தப்படுகிறது. இதை இயற்றியவர் லீலாசுகர். அழகிற்கு எல்லையான கண்ணன் திருமேனி இவரைத் திருத்திப் பணிகொண்டதாம். ஸ்ரீபாகவதம் - பத்தாம் ஸ்கந்தத்தில் வரும் கோபிகாகீதமும் கண்ணனின் எளிமையாகிய பெருஞ்சிறப்பைப் பேசுகிறது.

கண்ணன் தங்களிடம் காட்டும் காதலுக்குத் தங்கள் அழகே காரணம் என்று கோபிகைகள் செருக்குற்றிருந்தார்களாம். அந்தச் செருக்கைப் போக்கி அவர்களுக்கு அருள்புரிய வேண்டுமென்று கண்ணன் மறைந்தருளினன். கோபிகைகள் அவனைத் தேடிக் காணாமல் வருந்தினர்கள். அவனது அழகிய மங்கள குணங்களைப் பாடினர்கள். இப்படிக் கானம் செய்ததுதான் கோபிகாகீதம். இதில் கண்ணனைத் தங்கள் உறவினன் என்கிறார்கள் இவர்கள்.



விஷ்ணு சகஸ்ரநாமம் மகாபாரதத்தின் ஒரு பகுதியாகச் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது பிற்காலச் சேர்க்கை என்று ஆராய்ச்சியாளர்கள் கருதியபோதிலும், இதுவும் மகாபாரத ஆசிரியரான வியாச முனிவர் வாக்கே என்பது நம் மக்களின் நம்பிக்கை. இது (சகஸ்ரநாமம்) கிருஷ்ணாவதாரத்தின் பெருமையையும் எளிமையையும் சிறப்பாக வெளியிடுகிறது என்கிறார்கள். ஆயிரம் திருப்பெயர்களுக்கும் ஆயர் திலகமான கண்ணனே உரிய தெய்வம் என்று பீஷ்மாசாரியன் சொன்னதாகப் பாரதம் தெரிவிக்கிறது.

### மகத்தான எளிமை (கீதையும் முகுந்தமாலையும்)

சகஸ்ரநாமத்தின் பலச்ருதி வாசுதேவ கிருஷ்ணனையே சிறப்பித்துப் பேசுகிறது. இந்த வாசுதேவ கிருஷ்ணனின் பெருமைதான் என்ன? வசுதேவ புத்திரனாகப் பரம்பொருள் வந்தது என்ற எளிமை தான் இதன் சிறப்பான பெருமை.

கடவுளிடத்தில் எல்லா உயிர்களும் அடங்கி உள்ளன என்பது பிரசித்தம் அல்லவா? அற்ப உயிர்களையும் அற்பம் என்று ஒதுக்கிவிடாமல் இறைவன் தன்னிடம் தங்க இடம் கொடுத்திருப்பதே எளிமைக்குச் சான்றுதான். அத்தகைய இறைவன் வசுதேவனுக்கும் தேவகிக்கும் குழந்தையாகப் பிறந்தான் என்ற அவதார நிகழ்ச்சி எத்தகைய மகத்தான எளிமைக்குச் சான்று கிறது பாருங்கள்!

கண்ணன் கீதாசாரியனாகக் காட்சியளிப்பதும் மகத்தான எளிமைக்குச் சான்றுதான். ஜகத்குருவாகிய கீதாசாரிய ஸ்தானம் மகத்தானது; சகல வேதசாஸ்திரங்களின் சாரமான கீதையும் மகத்தான சாஸ்திரம்தான்; ஆனால் பகவத் கீதையும் பரம்பொருளின் மகத்தான கருணைக்குச் சான்றுதானே.

கீதா சாஸ்திரம் பரம ஞான சாஸ்திரமாகப் போற்றப்படுவதும் பக்தியோகப் பெரு நூலாக மதிக்கப்படுவதும் உண்மைதான். எனினும் சரணாகதி தருமத்தைப் பரம தாத்பரியமாக வெளியிடும் பகவத்கீதை தேர்த்தட்டு வார்த்தை என்று எளிமையாகக் குறிக்கப்படும் நிலையில் அர்ச்சுனனுக்குப் போர்க் களத்தில் சொல்லப்பட்டதுதானே.

வடமொழியில் முகுந்தமாலை என்ற ஒரு பிரபந்தம் இருக்கிறது. இதன் ஆசிரியர் குலசேகரப் பெருமாள் என்பர். இவர் ஆழ்வார் குலசேகரர்தாமா என்பதில் ஐயப்பாடு உண்டு. இந்தப் பிரபந்தத்திலே கண்ணன் மூவுலகையும் காப்பதற்காக வந்த ரட்சமணி என்று வருணிக்கப்பட்ட போதிலும் கோபிகைகளின் கண்களுக்கு மேகமணி என்று சிறப்பாகக் குறிக்கப் பெறுகின்றான்.

அமரர்களுக்குச் சிரோபூஷண மணியாகிய தேவதேவன் ஆயர்களுக்குச் சூடாமணி என்றும் சிறப்பிக்கப் பெறுகின்றான்.

ஸ்ரீ முகுந்தமாலையில். இந்தப் பிரபந்தம் கண்ணனைப் பொதுவாக அழகுக்கு முத்திராமணி என்கிறது; ருக்மிணிக்கு அலங்கார மணி என்கிறது. இத்தகைய எளிமை வாய்ந்த கண்ணனிடமிருந்தே உலகம் தோன்றுகிறது என்றும் முகுந்தமாலை ஆசிரியர் கூறுகிறார்.

### கண்ணனும் பாகவதமும்

கண்ணன் கதைகள் சிறப்பாகப் பாகவதத்தில் காணப்படுகின்றன என்பது பிரசித்தம். மகாபாரதம், விஷ்ணுபுராணம், ஹரிவம்சம் முதலான நூல்களிலும் கண்ணன் கதைகளைக் காண்கிறோம். எனினும் ஸ்ரீமத் பாகவதம் என்று சொல்லப்படும் புராணத்திற்குக் கண்ணனுடன் விசேஷமான தொடர்பு உண்டு.

ஸ்ரீமத் பாகவதம் பதினெட்டுப் புராணங்களில் ஒன்றாகும் என்பர். இதையும் வியாச முனிவர் (மகாபாரதம் சொன்ன வியாசமுனிவர்) சொன்னார் என்பர். வியாசபுத்திரரான சுகப்பிரமம் என்ற முனிவர் பரீட்சித்து மன்னனுக்குச் சொல்லும் முறையில் அமைந்திருக்கிறது பாகவதம். இதைச் சிலர் இதிகாச பாகவதம் என்றும் சொல்வதுண்டு.

மகாபாகவதம் என்ற புராண பாகவதம் நாரத முனிவர் சொல்ல ருக்மிணி கேட்டதாக அமைந்திருக்கிறது. ஸம்ஹிதா பாகவதம் என்ற ஒன்று வைசம்பாயன முனிவர் சொல்ல ஜனமேஜய மன்னன் கேட்டதாக அமைந்திருக்கிறது. உபஸம்ஹிதா பாகவதம் என்ற நூல் ஒன்று திருமாலின் முப்பத்திரண்டு அவதார சரித்திரங்கள் கொண்டதாய் அகஸ்திய முனிவர் சுதர்சனருக்குச் சொன்ன முறையில் அமைந்திருக்கிறது. விஷ்ணு ரகசிய பாகவதம் என்ற ஒரு நூல் ஹாரீத முனிவர் காசியபருக்குச் சொன்ன ரீதியில் காணப்படுகிறது. விஷ்ணுயாமள பாகவதம் பராசர முனிவர் மைத்திரேயருக்குக் கூறிய பாணியில் காணப்படுகிறது. கௌதம ஸம்ஹிதா பாகவதம் கௌதம முனிவருக்குச் சொன்ன முறையில் அமைந்திருக்கிறது.

இப்படி வடமொழியில் ஏழு பாகவதங்கள் இருக்கின்றன என்ற செய்தி கௌதம ஸம்ஹிதை என்ற நூலில் பாகவத லட்சணம் என்ற ஓர் அத்தியாயத்தில் பிரஸ்தாபிக்கப்படுகிறது. இவற்றுள் ஸ்ரீமத் பாகவதம் பல இந்திய மொழிகளிலும் பெயர்த்து எழுதப்பெற்று நாடெங்கும் பரவியிருக்கிறது.

பதினெட்டுப் புராணங்களில் ஸ்ரீமத் பாகவதத்தின் ஸ்தானத்தைத் தேவி பாகவதத்திற்கு அளிப்பவர்களும் உண்டு. எனவே, பாகவதம் என்றதும் 'எந்தப் பாகவதம்?' என்று கேட்பவர்களும் உண்டு. ஸ்ரீமத் பாகவதம் பிற்காலத்தில் தோன்றியதே என்று கருதுவோரும் உண்டு. தேவி பாகவதம் தேவி பக்தர் ஒருவரால் எழுதப்பட்டுப் பதினெண் புராணங்களுடன் சேர்க்கப் பெற்றதுதான் என்று கருதுவோரும் இருக்கிறார்கள்.



### பாகவதம் தோன்றியதேன்? (கிளி கொத்த விழுந்தது!)

நன்மை தரும் பல நூல்களை உலகத்திற்கு அளித்தும் வியாச முனிவர் தம் உள்ளத்தில் அமைதி பெருமல் இருந்தாராம். அந்நிலையில் நாரத முனிவரைக் கண்டார். வியாசரின் உள்ளக் கலக்கத்தை உணர்ந்துகொண்ட நாரதர், 'வியாசரே! இதய சாந்தி அளிக்கும் ஆற்றல் பக்திக்குத்தான் உண்டு; அந்தப் பக்தியைத் தாங்கள் எந்த நூலிலும் சிறப்பாக எடுத்துக் காட்டவில்லையே!' என்றார்.

இப்படிச் சொன்ன நாரதரே பாகவதத்தை இயற்றுமாறு வியாசரைத் தூண்டினார். எனவே, முழுக்க முழுக்கப் பக்தி புலப்பட வியாசர் பாகவதத்தை இயற்றினாராம். பிறகு இந்த நூலைத் தம் அருமைப் புதல்வரான சுகரிடம் கொடுத்தார். சுகர் இதைப் பிரசாரம் செய்தார். இது பாகவதத்தின் வரலாறு என்பர்.

சுகமுனிவர் தந்தையான வியாசரைக் காட்டிலும் சிறந்த ஞானியாகவும் கடுந்துறவியாகவும் வாழ்ந்தார். இத்தகைய துறவியே கண்ணன் கதைகளை ஞான சிகரமான தத்துவமாகக் காட்டுவதால் இக்கதைகளுக்குத் தனிப்பெருஞ் சிறப்பு உண்டு என்பர்.

வேதமாகிய கற்பக விருட்சத்தில் உச்சிக் கொம்பிலே கனிந்த கனியாகக் காணப்பட்டதாம் ஒரு பழம். அது கிளி கொத்தக் கீழே விழுந்தது; அதுதான் பாகவதம் என்கிறார்கள். கிளிக்குச் 'சுகம்' என்ற ஒரு பெயரும் உண்டு. இந்தக் கிளிதான் சுகர் என்ற முனிவர்!

என்ன அழகான கதை! எவ்வளவு அழகாய்ப் பாகவதத்தின் தோற்றத்தை வருணிக்கிறது! வேதத்தின் கொம்பிலே கனிந்த கனியாகப் பாகவதம் கிருஷ்ண பக்தியை நமக்குப் புலப்படுத்துகிறதாம். இந்தப் பக்தி நூலைச் சுகர் ஏழு நாளில் மரணமடையப் போகும் மன்னனுக்கு ஆறுதல் அளிக்க உபதேசித்தாராம்.

ஸ்ரீமத் பாகவதத்தில் பன்னிரண்டு ஸ்கந்தங்கள் என்ற பிரிவுகள் உண்டு. வசுதேவ புத்திரனைக் கண்ணன் அவதரித்துத் திருவிளையாடல்கள் புரிந்து உலகத்தை உய்வித்த கதை பத்தாவது ஸ்கந்தத்தில் விரிவாகச் சொல்லப்படுகிறது. கிருஷ்ண கர்ணாமிர்தத்தை லீலாசுகர் என்ற பக்தர் இயற்றியதும் சுகமுனிவர் சொன்ன கண்ணன் கதையை ஒட்டித்தான்.

### நாராயணீயம் முதலியன

நாராயணீயம் என்ற பிரசித்தமான பக்த காவியம் ஒன்று இன்றும் பிரசாரத்தில் இருக்கிறது. இதனை நாராயண பட்டதிரி நம்பூதிரி இயற்றினார். இது குருவாயூரப்பன் என்ற கண்ணபிரானைப் போற்றுவதாக அமைந்திருக்கிறது. இந்த அருமையான பக்தி நூலும் ஸ்ரீமத் பாகவத கதையைத் தழுவியதுதான். வேதாந்த தேசிகர் இயற்றிய 'யாதவாப்யுதயம்' என்ற நூலிலும் பாகவத வாடை வீசுகிறது.

இவையெல்லாம் பக்தியின் தனிச்சிறப்பைப் புலப்படுத்துகின்றன. எளிதில் உள்ளத்தைப் புனிதமாக்கிக்கொண்டு பேறு பெறும் வழியைக் காட்டுவது பக்திதான் என்ற கொள்கையை வெளியிடும் பிற்காலப் பிரபந்தங்களெல்லாம் ஸ்ரீமத் பாகவதத்தைத் தழுவியனவே என்பர். இந்த நிலையில் பாகவதம் தோன்றியது பக்தியை ராஜ வழியாக மக்கள் அனைவர்க்கும் காட்டுவதற்குத்தான் என்று கருதுவது பொருந்துமல்லவா?

### தமிழரும் பாகவத கதைகளும்

பாகவத காலத்திற்கு முன்பே கண்ணன் கதைகள் நம் தமிழகத்திலும் இடம் பெற்றிருந்தன. பாகவதத்தில் காணப்படாத (கண்ணனைப் பற்றிய) செய்திகளும் பழைய தமிழ் நூல்களில் காணப்படுகின்றன. கண்ணனும் பலராமனும் விளையாடிய இளம் பருவ விளையாடல்கள் தமிழகத்திலும் நாடக ரூபமாக ஆடப்பெற்று வந்தன. கண்ணனைக் கறுப்பன் என்றும், பலராமனை வெள்ளையன் என்றும் பாமர மக்களும் நீண்ட காலமாக நம் தமிழ்நாட்டில் அறிந்திருந்தனர்.

இப்படி வழிவழியாகக் கண்ணனையும் ஒருவாறு கண்ணன் கதைகளையும் அறிந்திருந்த தமிழ் மக்களுக்கு வடமொழிப் பாகவதத்தைத் தமிழில் முதல் முதல் மொழிபெயர்த்தளித்த புலவர் மாதவ பண்டிதர் என்ற செவ்வைச்சூடுவார். இவர் வேம்பத்தூரர் என்று பிரசித்தி பெற்றிருக்கும் தமிழறிஞர் கூட்டத்தைச் சார்ந்தவர்.

வேறொரு பாகவதமும் தமிழில் உண்டு. செவ்வைச்சூடுவார் பாகவதத்தைப் பாகவதபுராணம் என்று வழங்குகிறார்கள். 'மகாபாகவதம்' என்று சொல்லப்படும் மற்றப் பாகவதத்தை 'ஐயங்கார் பாகவதம்' என்றும் கூறுவதுண்டு. இந்த ஐயங்கார் வரதராஜ ஐயங்கார் என்ற அருளாளதாசர். இந்தப் பாகவதம் பதினாறாம் நூற்றாண்டின் முற்பகுதியில் தோன்றியது.

ஐயங்கார் பாகவதம் ஸ்ரீமத் பாகவதத்தின் மொழிபெயர்ப்பு அன்று. நாரதர் ருக்மிணிக்குச் சொன்னதாக மகாபாகவதம் என்ற ஒரு நூலைக் குறித்துப் பிரஸ்தாபித்தோமல்லவா? அதன் மொழி பெயர்ப்பே ஐயங்கார் பாகவதம். இக்குறிப்பை இந்தத் தமிழ்ப் பாகவதத்திலேயே காண்கிறோம். ஐயங்கார் பாகவதத்துப் பாடல்களின் தொகை 9147; வடமொழி மகாபாகவதத்தின் சுலோகங்கள் பதினெண்ணாயிரம்.

ஐயங்கார் பாகவதத்தில் ஸ்ரீரங்கநாதன் ஸ்ரீரங்கநாயகி முதலானவர்களுக்கு வாழ்த்துக்கள் காணப்படுகின்றன. இப்புலவர் ஆழ்வார் ஆசாரியர்களையும் வாழ்த்திச் செல்லுகிறார். இப் புலவருக்குக் கம்பராமாயணத்தில் பற்று அதிகம். 'கம்பன் மொழி செந்தமிழின் கவித் திறத்தின் காட்சி' என்று இவர் தம் அவையடக்கச் செய்யுளில் கூறுவது நோக்கத்தக்கது.



இராம கதைக்குக் கம்பன் கிடைத்ததுபோல் கண்ணன் கதைக்கு மகாகவி ஒருவரும் கிடைக்கவில்லையென்றாலும், கண்ணன் கதைகள் தமிழ் மக்கள் உள்ளத்தில் சாதாரண நூல்கள் வாயிலாகவும் நிலை பெற்று விட்டன என்பதற்குக் குசேலாபாக்கியானம், கஜேந்திர மோட்சம் முதலான நூல்கள் சான்றாகும். கண்ணன் திருவிளையாடல்களைக் குறிப்பிடும் கீர்த்தனங்களும் தமிழர்களிடையே கண்ணனது தனிச் சிறப்பு என்று கருதப்படும் எளிமையாகிய பெருமையை நிலைநிறுத்தி யிருக்கின்றன என்று கருதலாம்.

நம் தேசீய கவியாகிய பாரதியாரும் இன்றைய தமிழிலக்கியத்தில் கிருஷ்ணபக்தியை வேரூன்றச் செய்திருக்கிறார். இவரது கண்ணன் பாட்டை அறியாத இன்றைய தமிழர் இல்லை. பாரதியாருக்குக் கண்ணனே பராசக்தியாகவும் காட்சியளித்தான்; பிற தெய்வங்களாகவும் காட்சியளித்தான். பாரதியார் வாக்கிலும் கிருஷ்ணாவதாரத்தின் தனிச் சிறப்பு இனிது புலனாகிறது.

# 11. அவதாரமும் திருவுருவமும்

கோன் இல்லாத மந்தையன்று இவ்வுலகம் எனத் தெளிந்தவர், 'உளன் கண்டாய், நன்னெஞ்சே! உத்தமன்' என்று துணிந்தார். அந்த உத்தமனைப் 'பேராயன்' என்றார்; அறிதுயில் அமர்ந்த வண்ணம் அகில உலகமும் காவல் செய்யும் பேராயனை 'அரவணை மேல் பேராயன்' என்று புராண பாஷையில் வருணித்தார். அந்தப் பெரிய கோனார் பாற்கடலை விட்டு ஆயர்குலத்தில் அவதரித்ததையும் பாடினார். இப்படிக் கடவுளுண்மையையும், கண்ணன் பிறந்து லீலைகள் புரிந்ததையும் முதலாழ்வார் மூவருள் முதல்வரான பொய்கையாரின் வாக்கிலே காண்கிறோம்.

பெரிய கோனாரின் லீலை அல்லது திருவிளையாட்டே ஆக்கல், அளித்தல், அழித்தல் என்ற முத்தொழிலாக நடைபெறுகிறது. இதைத் தெரிந்துகொள்வதுடன், கடவுள் கண்ணனாகப் பிறந்து புரிந்த திருவிளையாடல்களையும் பக்திக் கண்ணால் பார்த்து அனுபவிக்க வேண்டும். இது வைணவ பக்தர்களின் கொள்கை.

### குழந்தை யுருவமும் கடவுளும்

மகாபாரதத்திலே கண்ணனை இராஜதந்திரியாகவும், அறப் பற்றுள்ள ஐவர் நண்பனாகவும், தூதனாகவும் காண்கிறோம். போர்க் களத்தில் தேரோட்டும் பார்த்தசாரதியாகவும் கண்ணனைக் காட்டுகிறது பாரதப் பேரிதிகாசம். பார்த்தசாரதி தத்துவக் கொள்கைகளின் கருவூலமாகிய பகவத்கீதையை அருளிய பரமாசாரியனாகத் திகழ்வதையும் காண்கிறோம். கீதாசாரியன் உலகப் பேரறிஞர்களின் உள்ளத்தைக் கவர்ந்திருக்கிறான்; அண்மையில் வாழ்ந்த உருது

முஸ்லீம் கவியான இக்பால் போன்றவர்களின் கலைச் செவ்வி நிறைந்த இதயங்களையும் வசீகரித்திருப்பதைக் காண்கிறோம். எனினும் பாரதக் கண்ணபிரானைக் காட்டிலும், கீதை அருளிய மேதையைக் காட்டிலும், அதிக அளவில் குழந்தையும் இளங்குமரனுமாகிய கண்ணனது திருவிளையாடல்களே இந்தியாவின் பக்தியுள்ளத்தையும் கவியுள்ளத்தையும் சிறப்பாக வசீகரித்திருக்கின்றன.

கடவுளைக் கவி ரவீந்திரநாதர் 'மேகக் குழுவினிடையே மின்னி மறைகின்ற ஒளி - நிழல் கூட்டங்களில் ஒரு புதுமைக் குழந்தையாகச் சிரித்துக்கொண் டிருக்கிறன்' என்று கற்பனை செய்திருக்கிறார். யோகி அரவிந்தரோ, 'நித்தியமான தோட்டத்தில் (பிருந்தாவனத்தில்) நித்தியமாக விளையாடல் புரியும் நித்தியமான குழந்தை கடவுள்' என்கிறார். இக் கருத்துக்களுடன், கண்ணனைத் தீராத விளையாட்டுப் பிள்ளையாகப் பாடும் நமது புதுமைக் கவி பாரதியாரின் கற்பனையையும் ஒப்பிட்டு நோக்கினால், கண்ணனுடைய பாரதக் கதைகளைக் காட்டிலும், பாகவதத்திலே பிரஸ்தாபிக்கப்படும் கிருஷ்ண லீலைகள் அதிக அளவில் பக்தர்களும் கவிகளும் யோகிகளுமான பெரியோர்களை வசீகரித்திருப்பதற்கு உரிய காரணம் ஒருவாறு புலனாகக்கூடும்.

பாகவத புராண காலத்திற்கு முன்பே கண்ணனின் பால லீலைகள் வட இந்தியாவைப்போல் தென்னிந்தியாவையும் வசீகரித்திருந்தன என்றும், தென்னகத்திலும் தமிழகத்தைச் சங்க காலம் தொட்டே வசீகரித்தவண்ணமா யிருந்திருக்கின்றன என்றும் ஆராய்ச்சி-அறிஞர்கள் கருதுகிறார்கள். ஆழ்வார்கள் காலத்திற்கு முன்பே தமிழ்ப் பொது மக்களிடையே பாலகிருஷ்ண பக்தி வேரூன்றி வளர்ந்திருந்தது.

பண்டைத் தமிழர்கள் நிலத்தை மலை, காடு, நாடு, கடற்கரை யென்று நானிலங்களாகப் பிரித்துக் காடும் காடு சார்ந்த நிலமுமான முல்லைக்கு அதிதெய்வம் திருமால் என்று சிறப்பித்துப் பேசினார்கள்.

அங்கண் முல்லையின்
தெய்வம்என்(று) அருந்தமிழ்
உரைக்கும் செங்கண்மால்

என்பது சிவநேசச் செல்வரான சேக்கிழாரின் திருவாக்கு.

இச் செங்கண் மாலை 'மாயோன்' என்பர் தொல்காப்பியர். 'மாயோன்' என்றாலும், 'கண்ணன்' என்றாலும் 'கருநிறம் உடையோன்' என்று பொருள்.

இம் மாயோனை நம்மாழ்வார் 'வளரொளி மாயோன்' என்றும், 'ஆதியம் பகவன்' என்றும் குறிப்பிடுகிறார். 'ஆதிபகவன்' என்று திருவள்ளுவர் கடவுளை முதற் குறளில் குறிப்பிடுவதும், 'பகவர்' என்று கிருஷ்ண பக்தர்களான பாகவதர்கள் குறிக்கப்படுவதும் கவனிக்கத் தக்கன.



கடல்வண்ணன் கண்ணன், கடற்கரையிலே உள்ளவெண்மணல் போன்றவன் அவனது அண்ணனான பலராமன் என்று இரு தெய்வ சகோதரரையும் சேர்த்து வருணிக்கிறது ஒரு பழஞ்செய்யுள். திருமாலிருஞ்சோலை மலையில் இவ் விரு தெய்வங்களும் கோவில் கொண்டிருப்பதாகப் பரிபாடல் தெரிவிக்கிறது. கண்ணன் கதைகளில் நம் தமிழகத்திற்கே உரிய சில வரலாறுகளும் வேற்றுமைகளும் உண்டு; பண்டைத் தமிழ் நூல்களில் கண்ணபிரானது குழந்தைப் பருவமும் திருவிளையாடல்களும் பிரஸ்தாபிக்கப்படுகின்றன.

### அவதார ரகசியம்

கண்ணனது திரு அவதாரத்தைத் திருமாலின் முழு அவதாரம் என்று குறிப்பிடுவதை அறிவோம். கிருஷ்ண பக்தியே விஷ்ணு பக்தியாகி வைஷ்ணவமாயிற்று என்ற ஆராய்ச்சியாளர்களின் கருத்தையும் அறிவோம். இனி, நம் தமிழகத்து 'ஸ்ரீவைஷ்ணவம்' என்ற பக்தி-மதத்திற்கு 'மூலபுருஷர்' என்றும், 'குலபதி', 'பரமாசாரியன்' என்றும் மதிக்கப் பெறும் நம்மாழ்வார் தமது கவியுள்ளத்திலே கிருஷ்ணாவதாரத்தைக் கண்டு காட்டுகிற ஓர் அற்புதக் காட்சியை இவர் அருளிச் செய்த 'திருவிருத்த'த்தில் காண்கிறோம்.

'தாமரைக் கண்ணன் உலகு' என்று திருவள்ளுவர் வருணித்திருக்கும் பரமபதத்தில் விண்ணோர் (நித்திய ஞானிகள்) இறைவனை நன்னீராட்டி, தூய நன்மாலைகள் சூட்டுவதற்காக அவற்றை ஏந்தி நின்று தூபம் காட்டுகிறார்களாம். அப்போதே ஒரு மாயையால் இறைவன் கண்ணனாகப் பிறந்து வெண்ணெய் கவர்வதும் உள்ளம் கவர்வதுமாகிய திருவிளையாடல்களை முடித்துக் கொள்கிறானும். அழகிய தூபம் என்ற அந்த நறும்புகையில் இறையுருவம் சற்று மறைந்து மறுபடியும் புலனாவதற்குள்ளே, கிருஷ்ணாவதாரம் நிகழ்ந்து முடிந்துவிடுகிறதாம்!

திருமாலின் அவதாரங்களைக் குறித்துப் பழைய முனிவர்கள் கூறியிருப்பது வாழ்க்கையின் பரிணாமம் குறித்த புதிய விஞ்ஞானக் கொள்கையுடன் நன்றாகப் பொருந்தியிருக்கிறது என்பது உயர்திரு. ஜே. பி. எஸ். ஹால்டேன் என்ற விஞ்ஞானியின் தேர்ந்த கருத்து. டார்வின், ஹக்ஸ்லி முதலான புதுமைப் பேரறிஞர்களின் பரிணாம வாத வித்து நமது அவதாரக்கொள்கையில் காணப்படுகிறது என்றால், அதிசயமான ஒரு தத்துவப் பெருங் கருத்தின் வேரையும் இக்கொள்கையில் கண்டு கொள்ளலாம்.

விக்டர் ஹ்யூகோ தமது இதிகாச நவீனமாகிய 'லே மிஸராபிள்' என்ற நூலில் தெய்வ சக்தி கொடுங்கோலர்களின் அசுர சக்தியையும் செருக்கையும் வீழ்த்துவதற்காக இறங்கி வருவதைப் பிரஸ்தாபிக்கிறார். நெப்போலியனின் வீழ்ச்சிக்குக் கடவுளின் சங்கற்பமே காரணம் என்கிறார். நெப்போலியன் தனது பேராசையாலும் சர்வாதிகாரக் கொடுஞ் செயல்களாலும் கொலைகளாலும் கடவுளுக்குத்

தொந்தரவு கொடுத்தான் என்கிறார். (கர்ம விரோதமான ராட்சஸ சக்தி திருமாலின் அறிதுயிலைக் கலைக்கிறது என்பது புராணம்.)

அதர்ம சக்தி சிந்தும் இரத்தமும் தாய்மார் சிந்தும் கண்ணீரும் தெய்வத்திற்கு முன் வாதாடுகின்றனவாம். தீமை பெரும் பாரமாகி விடுவதால் பூமி நொந்து புலம்புகிறதாம். அந்தப் புலம்பல் வெளியில் கேட்கிறது என்றும் வருணிக்கிறார் விக்டர் ஹ்யூகோ. 'அருள் முறையிட்டால் அம்பலத்தே கேட்கும்' என்ற வாக்கும் ஒப்புநோக்கத் தக்கது.

இத்தகைய தத்துவப் பெருங் கருத்தை நம்மவர்களும் புராண பாஷையில் வருணித்திருக்கிறார்கள். பூமிதேவிக்குத் தன் குழந்தைகளைச் சுமப்பதிலும் ஊட்டி வளர்ப்பதிலும் சிரமம் இல்லை. நல்லவர்களைத் தாங்குவது இலவம்பஞ்சைத் தாங்குவது போல் இருக்கிறதாம். ஆனால் கொலை வழியில் ஈடுபடும் துஷ்ட அசுரர்களைச் சுமப்பது இரும்பு மூட்டையைச் சுமப்பதுபோல் இருக்கிறதாம். இந்தச் சுமை தாங்க முடியாமல் நிலமகள் திருப்பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கும் திருமாலிடம் முறையிட்டுக் கொண்டாளாம் ஒரு சமயம். அப்போது பகவான் பூபாரம் தீர்த்துத் தருமத்தை நிலைநிறுத்துவதாகத் தீர்மானித்து, 'வசுதேவனுக்கும் தேவகிக்கும் பிள்ளையாகப் பிறக்கப் போகிறோம்' என்று சொல்லி நிலமகளைத் தேற்றினானாம்.

பிறப்பு இல்லாத பரம்பொருள் இறங்கி வந்து பிறவியெடுக்கிறது கம்சன் சிசுபாலன் முதலான துஷ்ட அசுரர்களை அழிப்பதற்கும், பாரதப் போரில் நூற்றுவரை அழிப்பதற்கும் என்பது அவதார தத்துவத்தின் ஒரு வெளிப்படையான கருத்து. புருஷோத்தமனுை பேராயனது காதலுக்கும் கருணைக்கும் எல்லையே கிடையாது; எனவே உலகத்திற்குக் கருணை புரிய, உலகத்தைக் காதல்-வலையில் பிடித்துக் கொள்ள, விண்ணையும் மண்ணையும் ஒரே அமுத கீத (கீதை) வலையில் பிடித்துக் காட்ட, அவன் நம்மைப்போல ஓர் உடலில் தன்னைச் சிறைப்படுத்திக் கொள்கிறான் என்பது அவதார தத்துவத்தின் ஒரு நுட்பமான பொருள்.

பகைவனுக்கும் அருளுகிறது கண்ணனின் அன்பு. பகைமை என்ற போர்வையைப் பிய்த்தெறிந்து அதற்குள்ளும் அன்பைக் கண்டு அருள் புரிகிறது என்பர். சாதுக்களைக் காக்கும் அறக் கருணையே மறக் கருணையாகித் துஷ்டர்களைத் தண்டிக்கிறதாம்.

## கம்பனும் அவதாரமும்

பரம்பொருளை மெய்ப்பொருள் என்றும் வேதம் குறிப்பிடுகிறது. உண்மையே கடவுள் என்று காந்தியடிகளும் குறிப்பிட்டாரல்லவா? 'மேலொரு பொருளும் இல்லா மெய்ப்பொருள்......கால் தரை தோய நின்று, அவதரித்ததைக் கம்பன் வருணிக்கிறான். உண்மை அழகாக வந்து மரணத் தருவாயில் வாலியையும் ஆணவ மதம் அழிந்த நிலையில் வசீகரித்து ஆட்கொண்டது என்பது கவிச்சக்கரவர்த்தியின்



கருத்து. சத்தியம் சௌந்தரியமாக அவதரித்து ஆட்கொள்வதைக் கிருஷ்ணாவதாரத்திலும் காண்கிறோம்.

அறம் செய்த அறத்தாலும் தீவினை செய்த தீவினையாலும் அவதாரம் நிகழ்கிறது என்றும் கம்பன் கூறியுள்ளான்.

விரித்திடுநீ வினைசெய்த
வெவ்வியதீ வினையாலும்

என்று கவிச்சக்கரவர்த்தி கூறுவது கூர்ந்து நோக்கத்தக்கது.

தீவினை விரிந்துகொண்டே போனாலும் அது நிலையில்லாத் தீவினைதான். தீவினையை நிலைநிறுத்துவது எந்த ராட்சஸ சக்திக்கும் இயலாத காரியம். தீவினை விரிந்து படர்ந்து தருமத்தை அழித்துவிட முடியாது; விரிந்து விரிந்து தன்னை அழித்துக்கொள்ளத்தான் முடியும்! தருமம் என்ற வயலுக்குக் காவலாளி பட்டி மாடு மேய இடங்கொடுப்பானா? இந்த உண்மையைக் கம்ப ராமாயணத்தில் விபீஷணன், 'அறத்தை முற்றும் காவற்குப் புகுந்து நின்றான் காகுத்த வேடம் காட்டி' என்ற வாக்கில் நினைவூட்டுகிறான்.

நீதி மயமான நெடுந் தருமநெறியில் மக்கள் செல்லவேண்டும் என்பதே இறைவனது இயற்கைத் திட்டம். இதற்கு இடையூறு விளைக்கும் தீயசக்திகள் நாசம் அடைகின்றன; தூய சக்திகளோ இடர் நீங்கி முன்னேறுகின்றன. இந்தச் சூட்சுமமான உலக பரிணாம விதிக்குத் துணை செய்வது அவதாரம்.

இந்தப் பெருங் கொள்கையை அனுமன் வாயிலாகச் சுந்தர காண்டத்தில் வெளியிடுகிறது கம்பன் மேதை:

அறம்தலை நிறுத்தி, வேதம்
அருள்சுரந்(து) அறைந்த நீதித்
திறம்தெரிந்(து) உலகம் பூணச்
செந்நெறி செலுத்தி, தீயோர்
இறந்(து)உக நூறி, தக்கோர்
இடர்துடைத்(து) ஏக, ஈண்டுப்
பிறந்தனன், தன் பொற்பாதம்
ஏத்துவார் பிறப்(பு) அறுப்பான்.

இந்த அவதாரக் கொள்கை ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்திற்கும் பொருந்துவதுதான். அவதார மூர்த்தியை 'யார்க்கும் துயர் துடைத்தான்' என்று கூறும் கம்பன், கொல்லப்பட்ட தீயோரை உள்ளிட்ட அனைவர்க்கும் துயர் துடைத்த தனிப்பெருங்கருணையை உய்த்துணர வைக்கிறான். இந்தப் பெருங்கருத்தும் கிருஷ்ணாவதாரத்திற்குப் பொருந்துவதுதான். தீயோருக்குத் தீமை நிறைந்த அந்த வாழ்க்கையே ஒரு பெரும் பாரம்தான். அந்தச் சுமையிலிருந்து அவர்களுக்கும் விடுதலை தருகிறது காதற் கடவுளின் தனிப்பெருங் கருணை!

## காதற் கடவுளின் அவதாரம்

கண்ணன் நடுநிசியில் கம்ஸன் அயர்ந்திருக்கச் சிறைக்காவலர் உறங்கும்போது அவதரிக்கிறன். இதுவும் புதைபொருள் உள்ள நிகழ்ச்சிதான். கம்ஸன் ஆணவத்திற்கு அறிகுறி; சிறைக்காவலர் புலன்களுக்கு அறிகுறி. ஆணவம் அயர்ந்திருக்கும்போதும் புலன்கள் உறங்கும்போதும் இறையொளி தோன்றும் என்ற உண்மையை நினைவூட்டுகிறது இந்த நிகழ்ச்சி.

கண்ணன் பிறந்ததும் வசுதேவனுக்கும் தேவகிக்கும் கம்ஸன் ஆணையால் இடப்பட்டிருந்த விலங்குகள் முறிந்து விழுந்தனவாம். இந்த நிகழ்ச்சி மக்களிடம் உள்ள தெய்வ சக்தி அடிமைச் சங்கிலிகளை உடைத்துக்கொண்டு வெளிப்படுவதற்கு அறிகுறியாகும்.

கண்ணன் பிறந்ததும் குழந்தையையா கண்டார்கள் தாய் தந்தையர்? நான்கு கைகளும் அவற்றில் சங்கு சக்கரம் முதலிய திவ்ய ஆயுதங்களும் முடியில் கிரீடமுமாகக் காட்சியளித்த ஆச்சரிய ஜோதியைக் கண்டார்களாம். அந்த ஜோதி தேவகிக்குப் பக்கத்தில் குழந்தையாகக் கிடந்ததாம். இதன் பொருள் என்ன? ஜடப் பொருள்களின் ஆதிக்கம் வலுத்து ஆத்மா புறக்கணிக்கப்படும் போதும், அசுர இருட்சக்திகள் வெறியாட்டமாடி உலகைப் பாழாக்கும் போதும், தெய்வத்தின் அதிகார முத்திரையும் பயங்கர சக்தியும் தரித்து வரும் அவதாரம் நிகழ்கின்றதாம். (சித்த சக்தியென்ற வாளாயுதத்துடன் ஒவ்வொரு குழந்தையும் உலகத்திற்கு இறங்கி வருவதாகக் கூறியுள்ளார் டாக்டர் மாண்டிஸோரி.)

பெற்ருேரின் அன்பு குழந்தையைத் தெய்வமாகக் கொண்டாடுகிறது; இந்தப் பெற்ருேர்களின் பேரன்போ தெய்வத்தையே குழந்தையாகக் கொண்டாடும் பேறு பெற்றுவிட்டதாம். இந்தக் குழந்தைக் கண்ணனை,

> உற்ற புவனம்
> அனைத்தும்உடைப் பித்(து), அதனுள்
> சிற்றிடைத் தேவகியார்
> சீரார் வயிற்றுதித்தான்!

என்று விண்ணவரும் முனிவர்களும் ஆச்சரியமாகப் போற்றினுர்களாம்.

சக்தி நீறு பூத்த நெருப்புப்போல் சௌந்தரியத்தில் அடங்கிக் கிடக்கிறது. எனவே, 'திண்ணம் உடையான்'னை 'மணிவண்ணம் உடையான்' என்று குதூகலப்படுகிறது ஆயர்பாடி; தேவர் தலைவனை ஆயச்சிறுவன் என்று பாராட்டுகிறது; உலகத் துயர் நீங்க உதித்த உத்தமனைத் தங்கள் குலக்கொழுந்தாகக் கண்டு மகிழ்கிறுர்கள் நந்தகோபனும் யசோதையும்.



பரம்பொருள் துயிலும் பாற்கடலை ஞானத்தெளிவின் நினைவுக்குறி என்றும், அக்கடல் மீது ஜோதிப் பணமுடி ஆயிரம் கொண்டதாய்க் காணப்படும் பாம்பைத் தொல் அறிவுக்கு அறிகுறி என்றும், அந்தப் பாம்பின்மேல் அறிதுயில் அமர்ந்த மூர்த்தியே கண்ணனுக வந்தான் என்றும் தத்துவப் பொருள் காட்டும் பாரதியார், அசுர ஆணவத்தைக் கிள்ளியெறியவந்த அவதாரமூர்த்தி 'நான்' எனும் ஆணவம் சிறிதும் இல்லாமல் வாழ்க்கை நடத்துகிறன் என்றும் கூறியிருக்கிறுரல்லவா?

அவதார புருஷனுடைய லட்சணங்களில் முதலாவது லட்சணம் உலகத்தையே தான் எனக் கொண்டு 'நான்' எனும் ஆணவம் முற்றும் துறந்து வாழ்வதுதான். அடுத்த லட்சணம்,

> மாரிதான் சிலரை
> வரைந்து பெய்யுமோ?

என்றவாறு நல்லருள் பெய்வதாகும். அந்த அருளின் ஆச்சரியமான எல்லை என்ன, தெரியுமா?

> ... ... ... பிறர்
> ஊனைச் சிதைத்திடும் போதினும்—தனது
> உள்ளம் அருளின் நெகுதலும்

என்று பாரதி பாடுகிறுர் கண்ணனது அருளின் எல்லையை. இந்த அருள்தான் பகைவருக்கும் அருள் செய்யும் பரமகிருபை ஆகும்.

அவதாரமூர்த்தி ஒரு காலத்தவனுக இருந்தபோதிலும் சென்ற காலம், நிகழ்காலம், எதிர்காலம் என்ற மூவகைக் காலம் கடந்திருப்பது இவன் வாழ்க்கைப் பெருங் கதை. ஓர் ஊரன்தான் என்றும் கண்ணனுக்கு உலகமெல்லாம் கோகுலம்தான், பிருந்தாவனம் தான்!

### திருவுருவம் (சொரூப விளக்கம்)

'ஒருத்தி மகனுய்ப் பிறந்து ஓர் இரவில் ஒருத்தி மகனுய் ஒளித்து வளர'த்தொடங்கிய குழந்தையின் அழகைப்பார்த்துக் கோகுலத்தில் எல்லோரும் பிரமித்துப் போகிறுர்கள். நோக்குந்தோறும் நோக்குந்தோறும் குழந்தை புதிய புதிய அழகுகளுடன் திகழ்வது போலத் தோன்றுகிறது. 'ஆண் ஒப்பார் இவன் நேர் இல்லைகாண்!' என்று வியக்கும்படி அமைந்திருக்கிறது குழந்தைப் புருஷோத்தமனின் அழகு.

குழந்தை வாய்க்குள்ளே யசோதைத் தாய் அகில லோகங்களையும் பார்த்துவிடுகிறுளல்லவா? மற்றும் உள்ள பெண்களுக்கும் காட்டுகிறுள் என்று கூடச் சொல்வதுண்டல்லவா? அந்த அற்புதத்தை அவர்கள் 'ஆயர் புத்திரன் அல்லன், அருந்தெய்வம்' என்று கொண்டாடுகிறுர்களாம். ஒவ்வொரு தாய்க்கும் தன் அருமைக்

குழந்தை தெய்வக் குஞ்சுதான்; தெய்வ உருவம்தான்; குழந்தைக் கண்ணனே ஒரே திவ்யமங்கள சொரூபமாக, ஸர்வாங்க சுந்தரனாகக் காட்சி தருகிறான்.

குழந்தையின் இயக்கம், இள நகை, தளர் நடை, மதலைப் பேச்சு, ஆட்டம், ஓட்டம், விளையாட்டு, துஷ்டத்தனம் என்ற நிலைகளில் கண்ணனைப் பெரியாழ்வார் கண்டு காட்டுகிறார். அந்தப் பாதங்களில் பத்து விரல்களையும் காட்டுகிறார். கணைக்கால், முழங்கால், தொடை, வயிறு முதலான அவயவங்களையும் காட்டுகிறார். 'தந்தக் களிறுபோல் தானே விளையாடும்' கண்ணனின் மார்பு, தோள், கழுத்து, வாய், மூக்கு, கண், நெற்றி, தலை முதலான அவயவங்களையும் அதிசயமாய்க் காட்டுகிறார். 'வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்' கண்டு கண்டு பரவசமாகிறார்!

'முடிச்சோதியாய் உனது முகச்சோதி மலர்ந்ததுவோ!' என்று நம்மாழ்வார் பெருமாளைப் பாடுகிறார். பெரியாழ்வாரோ குழந்தைக் கண்ணனைத் தமது மானஸத் தொட்டிலில் இட்டுத் தாமே யசோதையாக நின்று தாலாட்டும்போது,

*சோதிச் சுடர்முடியாய்!*
*தாலேலோ*

என்று பாடுகிறார்.

குழந்தையின் முகச் சோதியும் சுடர்களுமே ஒரு ஜோதிக் கிரீடமாகத் தோன்றுகின்றனவாம். ராஜாதி ராஜனும் தேவாதி தேவனுமாகிய குழந்தை யல்லவா? ஜோதிச் சுடர்முடி அகிலலோக ஆட்சிக்கும் அறிகுறி.

கண்ணனது குழந்தைத் திருவுருவத்தைப் பார்த்துக்கொண்டே தாலாட்டும் தாயுள்ளம் படைத்த பெரியாழ்வார் குழந்தையின் முடியழகிலிருந்து கண்களைப் பறித்துக்கொள்ள முடியுமானால், பிறகு சர்வ சக்தியின் அறிகுறியான சுந்தரத் தோள்களையே பார்த்துக்கொண்டிருக்கலாம் என்ற குறிப்புடனும் பாடியிருக்கிறார்.

*தோள் கண்டார் தோளேகண்டார்,*
*தொடுகழற் கமலம் அன்ன*
*தாள் கண்டார் தாளேகண்டார்!*

என்ற நிலைதானே கண்ணன் திருவுருவத்தில் ஈடுபடுகிறவர்களின் நிலையும்.

பெரியாழ்வார் ஆபரணங்களுக் கெல்லாம் ஆபரணமான திருமேனி என்று போற்றுகிறார் கண்ணனின் குழந்தை யுருவத்தை. அப்படியே இயற்கை யழகுகளுக்கெல்லாம் அழகு தருகிறான் அழகனாகிய கடவுள் என்பதும் பக்திமதப் பெருங் கொள்கைகளில் ஒன்று. 'குழந்தைக் கண்ணனை நேசி, நம்பு; குழந்தைபோல நம்பவேணும் நேசிக்கவேணும்' என்பது கிருஷ்ண பக்திப் பெருங் கொள்கைகளில் ஒன்றாகும்.



ஜகன்மோகன பாலகோபாலன், ஜகன்மோகன ராஜகோபாலன், ஜகன்மோகன வேணுகோபாலன் என்றெல்லாம் பக்தர்கள் கண்ணனது பிள்ளைமைப் பேரழகை அனுபவித்துப் பேறு பெற்றிருக்கிறார்கள். அழகுக்கு முடிவே இல்லையென்று சொல்லும்படி வளர்ந்து கொண்டிருக்கும் கண்ணனது குறும்புத்தனத்திற்கும் முடிவே கிடையாது என்று வியந்து வியந்து ஈடுபடுகிறார்கள். ஆம்; தீராத விளையாட்டுப் பிள்ளையாகக் கண்ணன் திருவுருவைத் திரும்பத் திரும்பப் படம் பிடித்துப் பார்த்துப் பரவசமாகி யிருக்கிறது பக்தருலகம். இத்தகைய பக்தியனுபவங்களின் சிகரம் ஆழ்வார்களின் கிருஷ்ணானுபவம்.

தீராத விளையாட்டு; ஓயாத தொல்லை; ஆனால் இந்தத் திருவுருவத்தைக் கண்டவர்களுக் கெல்லாம்—மானஸிகமாய் அனுபவித்தவர்களுக்கும்தான்—தெவிட்டாத ஆசை, குறையாத திருப்தி! 'தயிர் உண்ட பொன் வயிறு' என்று போற்றுகிறார் திருமங்கை மன்னன். வெண்ணெய் உண்டு கட்டுண்ட அந்த எளிமையில் ஈடுபடுகிறார் நம்மாழ்வார். வெண்ணெயையும் மண்ணையும் உண்ட அந்த லீலைகளில் கீதையின் சமரசப் பெருநெறிக்கே ஒரு வித்தையும் கண்டு கொண்டதுபோல் குதூகலம் அடைகிறது பொய்கையாழ்வாரைப் போன்ற பேரறிஞர்களின் உள்ளம்.

### குழல் ஊதும் நிலையில்

பக்தியனுபவம் ஏற்படும்போது கிருஷ்ண லீலைகளின் உட்பொருளும் புலனாகும்; கண்ணன் திருவுருவத்தின் தத்துவமும் தெளிவாகும். பக்தியனுபவம் அதிகரிக்க அதிகரிக்க, உட்பொருளும் தத்துவப் புதையல்களும் மேலும் மேலும் தெளிவாகும் என்பர். 'ஜகன்மோகன வேணுகோபாலன்' என்ற நிலையில் கண்ணனைப் பாடியிருக்கும் பெரியாழ்வாரின் பாசுரங்களில் இத்தகைய கருத்துக்களையும், பக்தியனுபவத்திற்கும் கவிதானுபவத்திற்கும் பொதுவான சிகரம் ஒன்றையும் காண்கிறோம்.

குழலோசை 'வாருங்கள்' என்று வழிகாட்டி அழைக்க, வந்து சேர்ந்தவர்களெல்லாம் இசையுருவம் போலக் காட்சி தரும் கண்ணனை நெருங்கியதும் ஒழுங்குபெறத் தொடுத்த பூமாலைகள் போல் வரிசை வரிசையாகச் சூழ்ந்துகொண்டு முகத்தை முகங்கொண்டு எதிர் நோக்க முடியாமல் நாணி நிற்கிறார்களாம். அன்புக் கடவுள் ஆத்மாக்களைத் தேடித் தவிக்கிறான் என்பது உட்பொருள். பக்தர்கள் அவனைத் தேடுகிறார்கள் என்றால் அவனும் இவர்களைத் தேடுகிறான் என்பது உண்மை.

இடது மேல்வாய்ப் புறத்தை இடது தோளோடு சாய்த்து இரு கையும் குழலோடு சேரப் புருவம் நெரிந்து மேலேறக் கண்ணன் வேணுகானம் செய்கிறான். வயிறு குடம்போலக் காண்கிறது.

காற்றைப் பூரித்து நிறுத்தி வாயால் விட்டு விட்டு ஊதும்போது குழலின் துளைக்கு அளவாக உதடுகள் இரண்டு அருகும் குவிந்து காண்கின்றன. அழகிய சிறுவிரல்கள் குழலின் துளைகளைப் புதைத்துப் புதைத்துத் திறக்கின்றன. கண்கள் துளைகள்தோறும் ஓடுகின்றன. செந்தாமரைப் பூவை வண்டுகள் சூழ்ந்து கொள்வதுபோல் தலை ரோமம் இருண்டு சுருண்டு விளங்குகிறது. அந்த முகமலரிலிருந்து பெருகும் இசைத்தேன் குழலோசை! பெரியாழ்வார் கவிதையில் குழலூதும் கோபாலனின் சித்திரம் இது.

பொன்னிறமான ஆடை உடுத்து மயில் தோகையும் அணிந்திருக்கிருன்.

கருங்கன் தோகைமயில் பீலிஅணிந்து
கட்டிநன்(கு) உடுத்த பீதக ஆடை
அருங்கல உருவின் ஆயர்பெருமான்

என்றும்,

சுருண்(டு) இருண்டகுழல்
தாழ்ந்த முகத்தான்

என்றும் பெரியாழ்வார் தம் கவிதைக் கண்ணுடி வாயிலாக நமக்கும் ஜகன்மோகன வேணுகோபாலனை ஒருவாறு தோற்றம் அளிக்கச் செய்கிருர்.

'அதோ கோகுலத்திற்கும் பரமபதத்திற்கும் யுவராஜா! அந்த மோகன சொரூபம் வீசும் அமுத கீத வலையில் சுருக்குண்டு விண்ணும் மண்ணும் ஒன்றுபடுவதைப் பாருங்கள்! சகோதர தர்மம் என்ற பாசத்தால் அனைவரும் கட்டுண்டு வாழும்படி வழிகாட்டும் அந்தக் குழலிசையைக் கேளுங்கள்!' என்று காட்டுகிருர் பெரியாழ்வார். அந்த மோகன சொரூபமே உருகி வருவது போல் பெருகி வரும் மோகனக் குழலிசையின் ஓர் அம்சம்தான் கீதை என்பது கூட, கிருஷ்ண பக்தர்களிடையே அந்தரங்கமாக வழங்கும் ஒரு கொள்கையாகும்.

### சங்கு ஊதும் நிலையில்

கண்ணனுடைய வேய்ங்குழல் போல் இவன் ஊதும் சங்கும் இவனது வசீகர அழகை அதிகரிக்கச் செய்கிறதாம். கண்ணபிரான் தன் வலம்புரிச்சங்கை வாயில் வைத்து ஏதோ வெற்றியடைந்து விட்டது போல் ஊதுவதை உருவெளித் தோற்றத்தில் ஆண்டாள் பார்க்கிருள். அந்தச் சங்கை நோக்கி,

கருப்பூரம் நாறுமோ?
கமலப்பூ நாறுமோ?
திருப்பவளச் செவ்வாய்தான்
தித்தித் திருக்குமோ?



என்று கேட்கிருள். இந்தச் சங்கு எதிரிகளின் உள்ளத்தைக் கலக்கி வெற்றி பெறுகின்றது; காதல் உள்ளங்களை மயக்கி வெற்றி பெறுகின்றது.

### அழகிய மணவாளன்

ஜகன்மோகனச் சிறுவனுன கண்ணன் திருவுருவத்தின் மீது கோபிகைகள் காதல் கொண்டிருந்தனர் என்பது ஒரு பிரசித்தமான செய்தி. 'இறைவனும் இயற்கையும் சிறுவனும் சிறுமியுமாக விளையாடுகிருர்கள்; இவர்கள் காதலரும் கூட!' என்பது யோகி அரவிந்தரின் வாக்கு. இந்தத் தத்துவத்தை ஆயச் சிறுமிகளுடன் கண்ணன் குரவைக் கூத்து முதலான திருவிளையாடல்கள் புரிந்த கதைகளின் உட்பொருள்களாகக் காணலாம்.

கோபிகைகளைக் குறிக்கும் கதையைச் சுற்றி எண்ணிறந்த கற்பனைகளும் கவிதைகளும் பக்தியுள்ளங்களில் விளைந்திருக்கின்றன. ஆத்மா பரமாத்மாவுடன் பக்தியால் ஒன்றுபடுவதற்கு மனிதக் காதலே சிறந்த நினைவுக் குறியாகும் என்பர் ஸ்வீடன்பர்க். கிறிஸ்து வேதத்தில் ஸாலமன் கீதங்கள் என்ற பகுதியிலும் கடவுள் மணவாளனுகவும் ஆத்மா மணப்பெண்ணுகவும் வருணிக்கப்படுவதைக் காண்கிருேம். ஓங்கி எரியும் தீயைப்போல் ஆத்மாவின் பக்தி ஜொலிக்கும்போது கடவுளைக் காதலனுகக் கருதுவது இயற்கை என்று யோகி அரவிந்தரும் ஆண்டாளைப் பற்றிய தமது ஆங்கிலக் கட்டுரை ஒன்றில் கூறியுள்ளார்.

கண்ணன் திருவுருவத்தில் அழகிய மணவாளன் என்ற நிலைக்கு அதி முக்கிய இடம் உண்டு. எனவே, 'அவா அறுத்து வீடுபெற்ற குருகூர்ச் சடகோபன்' என்று போற்றப்பெறும் நம்மாழ்வாரும் காதல் துறையில் தம் அனுபூதி நிலை ஒன்றை வெளியிடுகிருர்:

தூதுசெய் கண்கள்கொண்(டு) ஒன்றுபேசி,
தூமொழி இசைகள்கொண்(டு) ஒன்றுநோக்கி,
பேதுறு முகம்செய்து நொந்து நொந்து,
பேதைநெஞ்(சு) அறஅறப் பாடும் பாட்டை
யாதும்ஒன்(று) அறிகிலம், அம்ம, அம்ம!
மாலையும் வந்தது, மாயன் வாரான்!

கண்ணன் திருவுருவத்தை ஆழ்வார்களின் தலைவரான இப்பெரியார் எப்படி உய்த்துணர வைக்கிருர் பாருங்கள். தூது பேசுகிற கண்களைக் காட்டுகிருர் முதல்முதல். இசை பாடுகிற திருவாயைக் 'காட்டுகிருர் அடுத்தபடியாக. பார்க்கவேண்டிய கண்கள் பேசுகின்றனவாம்; வாயிலிருந்து வரும் இசை பார்க்கிறதாம். இதயத்திலே எங்கேயாவது ஒரு மூலையில் கள்ளங் கவடு இருக்கிறதோ என்று தேடித் துருவிப் பார்க்கிறதாம் கண்ணன் இசை.

இப்படி வந்து சேர்ந்த தெய்வக் காதலனின் திருமுகத்தைச் சித்திரிக்கும் ஆழ்வார் வாக்கு ஊன்றி நோக்கத் தக்கது :

பேதுறு முகம்செய்து
நொந்து நொந்து......

'இந்த ஆத்மாவை இன்னும் அடையவில்லையே' என்ற அந்த நோவு, அந்த ஏக்கம் அப்படியே தெரிகிறது இந்தத் திருவுருவத்தின் முகத்திலே! நொந்து நொந்து பாடுகிறுன்.

'பேதுறு முகம்' என்ற அந்த முகத்தைக் கூர்ந்து பார்த்திருக்கிறர் நம்மாழ்வார். 'உன் காதலுக்காகப் பைத்தியமாக இருக்கிறேன்!' என்று சொல்லாமல் சொல்லுகிறது கண்ணன் முகம் இவரை நோக்கி.

'என் கள்வா!' என்று ஆழ்வார் அழைக்கிறர் இப்படி முகம் காட்டி வந்து நிற்கும் திருவுருவை. அழகாலே கவர்ந்து உள்ளத்தைத் திருடியது மட்டுமா? தமது காதலைக் காட்டிலும் அதிகமான காதலைக் கண்ணன் புலப்படுத்துவதும் இவருள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகிறது!

ஒரு குழந்தையோடு கொஞ்சுவதுபோல் 'வஞ்சக் கள்வன், மாமாயன்' என்றெல்லாம் கொஞ்சிப் பேசுகிறர் நம்மாழ்வார். 'கேட்பார் செவி சுடு கீழ்மை வசவுகள்' பொழிந்த சிசுபாலன் முதலான தஷ்டர்களுக்கும் முடிவில் அருள் புரிந்த கோபாலன் இவரது செல்லப் பேச்சால், காதற் பேச்சால் மிகவும் உருகிப் பேரருள் புரிகிறுன்.

★

இருட்டறையில் விளக்குப்போல் இந்த இருள்தரு மாஞாலத்தில் இன்றும் கண்ணன் திருமேனி உபாசனைக்கும் தியானத்திற்கும் உதவுகிறது என்பது பக்தர்களின் நம்பிக்கையும் அனுபவமுமாகும். கண்ணன் அவதரிப்பதற்குத் துஷ்ட நிக்கிரகமும் ஒரு நோக்கம்தான். ஆனல் பெரு நோக்கம் பக்தர் மீது வைத்த காதல்தான், கருணை தான். அவர்களின் காதலைப் பெறுவதற்கு இசைந்த திருமேனி கண்ணன் திருமேனி.

அளவற்ற அழகிய குணங்களை ஒப்பற்ற ஒளியுடனும் அழகுடனும் கண்ணன் திருமேனியாக உருப்பெற்றுள்ளன என்பர். ஆதியஞ்சோதியாகப் பரமபதத்தில் வீற்றிருந்த பெருமான் ஆத்மாக்கள் மீது வைத்த காதலால், கருணையால், இவ்வுலகில் அவதரித்து இங்கும் பரஞ்சோதியாகத் திகழ்ந்தான் என்று சொல்லத் தக்க நிலையில் கண்ணன் திருமேனி காட்சியளித்தது என்பர்.

---